சாந்தலிங்கர் தாண்மலர் வாழ்க



தவத்திரு சாந்தலிங்க அடிகளார் கல்வி நிலைய

# ஆண்டு மலர்

1968

உ

சிவமயம்

சாந்தலிங்கர் தாண்மலர் வாழ்க.

சாந்தலிங்கர் கல்வி நிலையங்களின்

# பதினைந்தாவது ஆண்டு மலர்



தவத்திரு சாந்தலிங்க அடிகளார் கல்வி நிலையங்கள்

பேரூர்

1968

## காணிக்கை

திருப்பேருராதீனத் தலைவரும், இக் கல்வி நிலையங்களை உருவாக்கி, இவ்வாதீனத்திற்கு விளக்கந் தந்து 17-9-1867-ஆம் நாள் ஞாயிற்றுக் கிழமை இறையருளிற் கலந்தவரும் ஆகிய தவத்திரு ஆறுமுக சுவாமிகள் பொன்னர் திருவடிகளுக்கு இம் மலரைக் காணிக்கை ஆக்குகின்ருேம்.

உ

சாந்தலிங்கர் தாண்மலர் வாழ்க.

# பதிப்புரை

அருண்மிகு சாந்தலிங்கப்பெருமான் திருவருளால் பல அறிஞர்கள், செல்வர்களின் ஆதரவுடன் கொங்கு நாட்டில் சமயப்பணியும் தமிழ்ப்பணியும் தளராது புரிந்து வரும் நம் தமிழ்க்கல்லூரிக்குப் பதினைந்தாம் ஆண்டு நிறைவுறுகின்றது. சென்ற ஐந்தாம் ஆண்டு, பத்தாம் ஆண்டு நிறைவுகளின் போது மலர் வெளியிட்டதைப் போன்று இப்பதினைந்தாம் ஆண்டு நிறைவின்போது இம்மலரை வெளியிடுவதில் பெருமகிழ்வடைகின்றோம்.

இம்மலர் நம் கல்வி நிலையங்களின் சென்ற காலச்சிறப்பு, நிகழ்கால நிலை, எதிர்கால நோக்கம் ஆகியவற்றைத் தமிழுலகுக்கு நன்கு புலப்படுத்தும் என்று நம்புகின்றோம்.

இம்மலருக்குக் கட்டுரைகள், கவிதைகள், அறிவுரைகள் முதலியன எழுதிய பெரியோர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் நம்நிலையத்தின் சார்பில் வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம். கல்லூரி, பள்ளி மாணவர்களுக்குப் பாராட்டினைத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம். விளம்பரங்கள் கொடுத்து உதவிய அன்பர்களுக்கு வணக்கமும் நன்றியும் உரியன.

நம் நிலையத்துடன் நெடுங்காலம் தொடர்பு கொண்டு நூல்களை அச்சிட்டு உதவிவரும் பாரி அச்சகத்தின் உரிமையாளர் திரு மு. நாராயணன் செட்டியார் இம்மலரையும் அழகுற அச்சிட்டுதவினர். அவர்களுக்கும், அச்சகத் தொழிலாளர்களுக்கும், அச்சுப் படிகள் திருத்துதல் முதலியவகைகளில் துணைபுரிந்த அன்பர்களுக்கும் வணக்கமும், நன்றியும் உரியன.

எல்லாரும் எல்லா நலன்களும் பெற்று இன்புற்று வாழ அருண்மிகு சாந்தலிங்கப்பெருமான் திருவருளை வேண்டுகின்றோம்.

"ஆய்ந்த இன்பம் வாய்ந்துளம் நிறையச்
சாந்தையன் பதம் யாம் தொழுவோமே."

இங்ஙனம்,

மலர் வெளியீட்டுக் குழுவினர்.

# " நிலையத்தின் நோக்கம் "

தவத்திரு. சாந்தலிங்க இராமசாமியடிகளார் அவர்கள்

மடாதிபதி, பேரூராதீனம்

இறையருள் நாட்டத்தையே வாழ்க்கை நெறியாகக்கொண்டு வாழ்ந்துவரும் நாடு பாரத நாடு. வடஇமயம் முதல் தென்குமரி வரை பற்பல தலங்கள் உள்ளன. தென்னுடு சமயச் சான்ருேர்களாலும், திருக்கோவில்களாலும் சிறந்து விளங்குவது. இதனை "மாதவம் செய்த தென்திசை" எனக் கூறுகின்ருர் சேக்கிழார். தென்னகத்துள்ள தமிழகத்தில் திருப்பேரூர் என்னும் மேலைச் சிதம்பரம் கொங்கு நாட்டில் சிறந்து விளங்கும் பழம் பதியாகும்.

இத்தலத்தில் சாந்தலிங்க அடிகளார் சிவநெறியில் வாழ்ந்தவர். சிவநெறி, வீர சைவம், சைவம் என வழங்கப்பெறும். சாந்தலிங்க அடிகளார் வீர சைவநெறியினர். அவரால் இயற்றப்பெற்ற "வைராக்கிய தீபம்" என்னும் நூலின் பாயிரத்தில் தெருட்கமை

" தெருட்கமை வீர சைவனெஞ் சாந்தலிங்க
தேசிகன் தெருட் சுடரே... "

என்று கூறப்படுகிறது. அவர் இயற்றிய நூல்கள் நான்கு. அவை கொலை மறுத்தல், வைராக்கிய சதகம் வைராக்கிய தீபம், அவிரோத உந்தியார் என்பனவாம். இந்நூல்கள் சமயநெறி நிற்பார்க்குப் பெரிதும் துணைபுரிபவை. பெரும்பாலும் பக்தி நெறியையும் துறவு இலக்கணத்தையும் வலியுறுத்துவன. இந்நூல்களை "முக்திப் பெரு வீட்டிற்கு நான்கு திருவாயில்கள்" எனத் தண்டபாணிசுவாமிகள் குறிப்பிடுகின்ருர்கள். "பல்நெறியில் இருள் விளக்கும் பல சமயத்தவரும் முத்தி பதத்திற்கு ஈது, நன்னெறி பெற்றுய்ய" அவிரோத உந்தியார் என்னும் நூலை இயற்றியுள்ளார். வேதாந்த, சித்தாந்த சமரச நோக்கை வலியுறுத்துவது இந்நூல் என்பதை "வெல்நெறி தேர் மறை நெறி ஆகமநெறி யொன்றெனக் காட்டும் வீர சைவத் தொல்நெறி மாகேசனெங்கள் சாந்தலிங்க தேசிகனும் தூயன்" என்பதனுல் விளங்கும். இவர் நூலில் "அரிது பெற்றிடினும்" என்னும் வைராக்கிய தீபப் பாடல் சிறந்த கருத்தினைக் கொண்டது. அப்பாடலின் கருத்து உயிர்கள், உலகின் தமக்குக் கிடைத்த பொருளைச் சிறிதாகக் கருதிக்கிடையாத பொருளைப் பெரிதாகக் கருதும் இயல்புடையன. ஆனுல், எப்பொழுதும் பெற்றிராத, பெறற்கரிய வீடுபேற்றை ஏனே விரும்பவில்லை என்பதாம். இதனைப் புலவர் புராண ஆசிரியர் "பெற்றதனைக் கீழாக்கிப் பெருததனை மேலாக்கும் குற்றம் உயிரின் குணம்" என்று ஒரு பாசுரத்திற் சொற்றனர். அவ்வாறு பல சொற்கள் உலகு அத்தனையும் விற்று அளித்திட்டாலும் விலை மேவா எனக் கூறியுள்ளார். சாந்தலிங்க அடிகளார் பல்சமயச் சமரச நோக்கு உடையவர். தம் நூலாகிய அவிரோத உந்தியாரில் "எம்மதத்தோர் எவ்வகை நிட்டை சொல்லினும் சம்மதமே எமக்குந்தீபற தற்போதம் மாய்க்குமேல் உந்தீபற" எனப் பாடியுள்ளார். இந்த நூலைப்பற்றி மதுரைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் தெ. பொ. மீனுட்சிசுந்தரனுர் "சமயங்களிடையே விரோத நிலையினைக் கண்டு மனம் புழுங்கியவர் அவிரோத நெறியை உலகிற்குக் காட்டுகின்ருர். விரோதம் வளர்ந்ததை எண்ணியே அவிரோதம் என்ற தலைப்பை வற்புறுத்துகின்ருர். அவிரோதம் என்பது ஒரு எதிர்மறை நெறி அன்று. ஆன்ம நேய ஒருமைப் பாடாக விளங்கும் சமரச சன்மார்க்கம் என்னும் உடன்பாட்டு நிலைதான் அது. இந்நூலை உலகப் பொதுச்சொத்தாக ஆக்குதல்வேண்டும். உலகம் ஒரு குடும்பம் என்று வாழ விரும்புகின்ற இக்காலத்தில் தமிழ் நாட்டார் கண்டு வந்த பொறுமை நெறியை உலகத்துக்கு விளக்கும் கடமை தமிழனது தலையாய கடமையாகும். அவிரோத உந்தியாரை நம் நாட்





டின் பல மொழிகளில் மொழி பெயர்த்தும் விளக்கியும் வருவதோடு, உலகத்திற்கே தந்து வான்புகழ் கொள்ளுதல் வேண்டும்'' என்று கூறுகின்றார்.

சாந்தலிங்க அடிகளார் பதினேழாம் நூற்றாண்டினர். இவருடைய குருநாதர் திருவாவடுதுறை ஆதீன ஆதிகுரு முதல்வர் நமச்சிவாய தேசிகரது மாணவராகிய சிவப்பிரகாச சுவாமிகள். சாந்தலிங்கர் தோன்றிய இடம் தெரியவில்லை. பல தலங்களை வழிபட்ட பிறகு பேரூரில் தங்கித் தவம் இயற்றிச் சமாதி கொண்டுள்ளார். இவருக்குத் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளது தொடர்பும் உண்டு. அவருடைய தங்கையாகிய ஞானம்பிகை அம்மையாரை மணந்து இல்லற நெறியில் நின்று துறவு பூண்டார். மயிலம் பொம்மபுரம் சிவஞானபாலைய சுவாமிகளிடத்துப் பெரிதும் ஈடுபாடு கொண்டவர். இவருடைய மாணவர் கன்னடநாட்டு அரசராக இருந்து துறவுபூண்டகுமாரதேவர்ஆவார். அவரது மாணவராகிய திருப்போரூர்,சிதம்பரசுவாமிகள் சாந்தலிங்க சுவாமிகளின் நூல்களுக்கு மிகச் சிறந்த உரை எழுதியுள்ளார். அவ்வுரையில் அரியபல நூல்களிலிருந்து நூற்பெயர்களுடன் மேற்கோள் காட்டப்பட்டிருக்கிறது.

இவர் இயற்றிய நான்கு நூல்களில் கொலை மறுத்தல், தீயனவற்றுள் தலையாய கொலையை நீக்கி மெய்தவக் குருவுற்று அவர் சொற்படி வாழ்வதால் மனத் தூய்மை பெற்றுப் பரஞானம் அடையலாம் எனவும், வைராக்கிய சதகத்தில் பக்தியோடு மூதுணர்வோர் முன்கூறிய அருட் பாடல்களை ஓதினால் பவப்பிணி நீங்கி இறைவன் அருளுக்கு உரியவராவார் எனவும், வைராக்கிய தீபத்தில் பற்றற்ற துறவினால் ''அனுபவமாச்சிவம் உணர்தன் திரப்பும்மெய்ஞ்ஞானம்''எனவும் அவிரோத உந்தியாரின் அப்பரஞானத்தால் அடையும் வீடு இஃது என்பதை விளக்கப் பொன்றாப் பொருளே பொருள் என்பர், ''நல்லோர்,அன் றிப்பொருள் யாதென் றுந் தீபற அடையும் வீடே என்று ந்தீபற'' எனவும் கூறுகின்றார். இதனால் இந்நான்கு நூல்களும் முக்திப்பெரு வீட்டிற்கு நான்கு திருவாயில்கள் என்பதை அறியலாம். இந் நூல்கள் வேதாந்த, சித்தாந்த மெய்ம்மையாளர்களால் பெரிதும் போற்றப்படுவனவாகும்.

சாந்தலிங்க அடிகளார் பல அடியார்களுக்கு அருள் உரை வழங்கிய திருத் தலம் இதுவாகும். அவர்கள் காலத்தில் பல அடியார்கள் இத்திருமடத்தில் தங்கியிருந்தார்கள் என்பதைப் புலவர் புராணம் கூறுகின்றது. பலசமயத்தவர்களது வினாக்களுக்கு விடைகூறும் அவையும் இருந்தது. இதனை வலியுறுத்துவது போலவே கொலை மறுத்தல் 'உடுத்தனைச் சூழ்தர விளங்கும் மதியின் உயர் சைவர்'' என்ற குறிப்பும் காணப்படுகின்றது. இத் திருமடத்தின் வழிவழிவந்த துறவிகளால் தமிழ் நாட்டில் சமய நெறியும் தருமமும் பெரிதும் பேணப்பட்டு வருகின்றன. பாரதப் பண்புக்கு ஏற்பத் துறவிகள் தங்கும் நிலையமாகவும், இல்லறத்தார்கள் அருள் உபதேசம் பெற்றுச் செல்லும் குருபீடமாகவும் விளங்குவது இத்திருமடம். பிறகலாச்சாரங்களின் தாக்குதலைத் தடுத்துத் தமிழ்நெறியும், சமயநெறியும் பழமையொடு புதுமை பெற்று வளரப் பணியாற்றி வருகின்றது. பழைய தலைமுறையினரின் அறநெறிக் கொள்கைகளைப் புதிய தலைமுறையினர் ஏற்றுக்கொள்ளும் முறையில் தமிழைப் பயிற்றுவித்து வருகின்றது. நாட்டுப்புற மக்களிடையிலும் உடல் உள்ள நோய்களால்பாதிக்கப்பட்டவர்களிடையிலும் சமய உணர்வினை ஊட்டி வருகின்றது. இளஞ் சிறார்களின் உள்ளத்தில் நாளும் இன்னிசையால் நற்றமிழ் வளர்த்து வருகின்றது.

இத்திருமடத்தின் வளர்ச்சியில் சென்ற நூற்றாண்டில் குறிப்பிடத்தக்க பணியாற்றியவர் திருமடத்தின் தலைவராக இருந்த தவத்திரு, மாணிக்கசுவாமிகள் ஆவர். இவர் சிரவை, கௌமார மடலாயத் தலைவர் தவத்திரு இராமானந்த சுவாமிகளின் மாணவர் ஆவர். இவர் காலத்தில் திரு மடத்தின் வழிபாடுகளும் பணிகளும் சிறந்தோங்கின. ''சத்வித்தியா சன்மார்க்க சங்கம்'' என்னும் அமைப்பினைத் தோற்றுவித்து ஆண்டுதோறும் குருபூசை விழா



வும், வார வழிபாடும் சிறப்புற நடத்த ஏற்பாடு செய்துள்ளார். பொருள் வருவாய்களையும் ஈட்டிக்காத்தார். தமிழகத்தின் தலைசிறந்த சமயச் சான்றோர்களாகிய ஞானியார் அடிகளார், மறைமலை அடிகளார் போன்ற பெருமக்கள் ஆண்டு தோறும் இந்நிகழ்ச்சிகளில் பங்கேற்றுள்ளனர். மாணிக்கசுவாமிகளுக்குப் பிறகு தவத்திரு. ஆறுமுகசுவாமிகள் இத்திருமடத்தின் தலைவராக இருபத்தைந்து ஆண்டுகளாக அருளாட்சி புரிந்தார்கள். இவர்கள் அமைதியும், தவப் பண்பும் தழைத்தவர்கள். எவரிடத்தும் இனிது பழகும் அன்பு முதிர்வும் எளிய தோற்றமும் கொண்டவர்கள். தமிழ்க்கல்லூரி, உயர்நிலைப்பள்ளி, உயர்தொடக்கப்பள்ளி யாதியன இவர்கள் காலத்தில் தொடங்கப் பெற்றன. இத்திருமடத்தில் ஐம்பது ஆண்டுகட்கு மேலாகத்தங்கித்தவம்புரிந்து பிலவங்க ஆண்டு புரட்டாசித் திங்கள் முதல்நாள் (17—9—1967) அன்று சிவனருட் பெருவாழ்வில் கலந்தார்கள்.

இத்திருமடத்தின் சார்பாக நடைபெறும் சமயத் தமிழ்ப் பணிகட்கு இந்நாட்டின் பல பகுதிகளிலும் உள்ள அன்பர்கள் உறுதுணையாக இருக்கின்றனர். பொருளாலும் தொண்டாலும் உதவுகின்றனர்.

இத்திருமடத்தின் தொடர்புடைய அடியவர்கள் நிறைந்த ஊர்கள் பல. தம்மை முழுதும் உரிமையாக்கிப் பணிகளிற் பங்கு கொள்ளும் குடும்பங்கள் பல. திருமடத்தில் நடைபெறும் அறநெறிப் பணிகளின் வளர்ச்சியே தமது வளர்ச்சியாகவும் வாழ்வாகவும் கருதிவாழும் தொண்டர்கள் பலர். இவர்களது மன நிறைவுக்கான பணிகள் இன்னும் விரிவடையவும், சமுதாயத்தின்சமயச் செழுமை சிறக்கவும், அன்பர்களது ஒத்துழைப்புடன் திருமடம் அறநெறிச் செயல்களை மேலும் மேலும் வளர்க்க விரும்புகிறது.

இத்திருமடத்தின் சார்பில் நடைபெறும் தமிழ்க் கல்லூரியிலும், பள்ளிகளிலும் உள்ள மாணவ மாணவிகள் சமய நெறி வளர்வதற்காகக் கூட்டுவழிபாடு, இசை வகுப்புக்கள், நாள் வழிபாடு ஆதியன நடத்தப்படுகின்றன. சான்றோர்களைக் கொண்டுஅறவுரைகள் சமயப்போதனைகள் ஆதியன நடத்தப் பெறுகின்றன மாணவர்கட்குச் சொற்பொழிவுப் பயிற்சி, சமுதாயப்பணி, வழிபாட்டுப் பயிற்சி யாதியனவும் கொடுக்கப்படுகின்றன.

இன்றைய இளைஞர் சமுதாயம் தமிழ் நெறியை உணரவும் முன்னோர் வாழ்ந்த முறைமைகளைக் கடைப்பிடிக்கவும் சமயப் பயிற்சியும், கல்வியும் இன்றியமையாதனவாகும். அவற்றை வளர்க்க வேண்டும் என்றும், அதற்காகச் சமய ஆராய்ச்சி நிறுவனம் - சிறப்பாக சைவ சித்தாந்த ஆராய்ச்சி நிறுவனம்-தோன்ற வேண்டும் என்றும் சமயப் புலமைதழைத்த நல்லோர் கருதுகின்றனர். அவர்கள் எண்ணம் நிறைவேறச் சமயநெறி வாழ்க்கையை விரும்பும் செல்வர்களும், புலவர்களும் ஒத்துழைப்பார்கள் என நம்புகிறோம். அதே போல, நாட்டு வரலாறுகளை ஆய்ந்து வெளிப்படுத்துவதற்கான முயற்சியும், வேண்டப்படுகிறது. இளைஞர்களும், அறிஞர்களும், இலக்கியம், கல்வெட்டு, செப்பேடு, நாட்டு வழக்குகள் ஆகியனவற்றை ஆராயவேண்டும்.ஆராய்வதற்குரிய வாய்ப்புக்களும் வசதிகளும் தேவை. அதற்கான முயற்சிகளிலும் ஈடுபட விரும்புகிறது இத்திருமடம். தமிழகத்தில் திருமடங்கள் ஒருமித்துச் செயலாற்ற வேண்டும் என்ற அரிய முயற்சி ஓரளவுக்குக் கைகூடி வருகிறது. கருத்து ஒற்றுமை கொண்டுள்ள ஒரு சில திருமடங்களாவது செயலாக்கத்தில் ஒன்றுபடும் காலம் வெகு தொலைவிலில்லை. அண்மையில் அமையும் என்ற சூழ்நிலையை உருவாக்கி வருகிறது இத்திருமடம். அருள் நெறியும் தமிழ்ப்பணியும் தழைக்கப் பல்லாற்றானும் ஒத்துழைக்கும் எல்லோருக்கும் அருள்மிகு சாந்தலிங்கப் பெருமான் தண்ணருள் நிறைவதாகுக.

ஆய்ந்த இன்பம்—வாய்ந்துளம் நிறையச்
சாந்தையன்பதம்—யாந்தொழுவோமே.

---



# 1966-67 ஆம் ஆண்டு மாணவர் அருள்நெறி இலக்கிய மன்றத் தொடர் கூட்டம்

## இலக்கிய மன்றத் தொடக்க விழா

திருவள்ளுவர் ஆண்டு ௧௯௯௭ ஆவணித் திங்கள் ௨௧ஆம் நாள் (6—9—66) கோவை திரு. ம. ச. பழனியப்ப முதலியார் தலைமையில் இலக்கிய மன்றத் தொடக்க விழா கொண்டாடப்பட்டது.

கோவை மண்டலக்கல் வித்தணிக்கையாளர் திருவேங்கடசுப்பிரமணியம் தொடக்கவுரையும், பேராசிரியர் திரு. ம ரா. போ. குருசாமி 'உலகமெலாம் தேமதுரத் தமிழோசை' என்னும் தலைப்பில் சிறப்புரையும் ஆற்றினர்கள்.

நான்கு மன்றத் தொடர் கூட்டங்கள் நடைபெற்றன. கூட்டங்களுக்கு தவத்திரு அடிகளார், திரு. ஒ. கி. நல்லமுத்து, திரு. ர. வையாபுரியார், திரு. பட்டியப்பனர்—ஆகியோர் தலைமை தாங்கினர். சு. பழனிசாமி, ப. அ. தங்கவேலு, ப. இலக்குமணன், நா. இராமச்சந்திரன், அம்சவேணி, அம்பிகாதேவி, சி.கு. சரோசா, பாப்பாயி, இராசாமணி, சோதிநாதன், ஞானேசுவரி, மு. சேதுபதி, சண்முகவடிவு, மருதாசலம், இந்துமதி, நாச்சிமுத்து, நீலாம்பிகை, வைகுராமன், மகாலட்சுமி, முருகன், பா. இராமச்சந்திரன், அன்னபூரணி, பெ. வீரப்பன், பாப்பாயி, கா. மருதமுத்து, கண்ணம்மா, அர. விசயம் ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

இவ்வாண்டு இருமன்றச் சிறப்புக் கூட்டங்கள் நடைபெற்றன. திருவள்ளுவராண்டு ௧௯௯௭ ஆவணித் திங்கள் ௯ஆம் நாள், பேராசிரியர் திரு. கா. மீனுட்சிசுந்தரம் "தமிழுக்குப் புது இலக்கணம் தேவையா?" என்னும் சிறப்புச் சொற்பொழிவாற்றினர். திருவள்ளுவர் ஆண்டு ௧௯௯௭ கார்த்திகைத் திங்கள் ௧௫-ஆம் நாள் (30—11—66) டாக்டர் எஸ். விசயலட்சுமி "திட்டமிட்ட பொருளாதாரம்" என்பதுபற்றிச் சிறப்புச் சொற்பொழிவாற்றினர்.

திரு. மு. சண்முகம் அவர்கள் தலைமையில் நடைபெற்ற பாரதிவிழாவில் "பாரதியின் முப்பெரும் பாடல்களுள் பெரிதும் சிறப்புடையது எது?" என்னும் பொருளில் ஒரு பட்டி மன்றம் நடைபெற்றது. கண்ணன் பாட்டே என சொ. இராமசாமி, ஆ. செகநாதன், இரா. அரங்கநாதன், ப. உ. சிவராசு—ஆகியோரும், 'பாஞ்சாலி சபதமே' என க. இராதாகிருட்டிணன், இரத்தினம், இரா. நல்லதம்பி, மு. வேலுமணி ஆகியோரும், 'குயிற்பாட்டே' என துரை, இராசசேகரன், க. சுரேந்திரன், பெ. வீரப்பன், அ. வேதாசலம் ஆகியோரும் வாதிட்டனர்.

## கல்லூரி ஆண்டு விழா

தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க்கல்லூரி ஆண்டுவிழா பராபவ ஆண்டு மாசித் திங்கள் ௫ஆம் நாள் (26—2—67) ஞாயிற்றுக்கிழமை பிற்பகல் நடைபெற்றது. அவ்விழாவிற்கு நாகைத் தமிழ்க்கல்லூரிப் பொறுப்பாளர் உயர்திரு கனகசபை பிள்ளை அவர்கள் தலைமை தாங்கினர்கள். சாந்தலிங்க அடிகளார் தமிழ்க்கல்லூரிப் பொறுப்பாளர் உயர்திரு வேங்கடாசலம் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினர்கள். உயர்திரு. பூ. சா. கோ. கெ. கோவிந்தசாமி அவர்கள் தொடக்கவுரை நிகழ்த்தினர்கள்.

தலைவர் தமது உரையில் மாணவர்களுக்கு நற்கருத்துக்கள் பல எடுத்துக் கூறினர்கள். மேலும் மாணவர்கள் சொல்வன்மையும், பேச்சுத் திறமையும் உடையவர்களாய்த் திகழவேண்டும் என்றும் கூறினர்கள். அதன்பின் அறிவியல் போட்டி, விளையாட்டுப் போட்டி, ஆகியவற்றில் வெற்றி பெற்றோருக்குப் பரிசுகள் வழங்கப்பட்டன. இறுதியாக, இரவு எட்டுமணியளவில் கலா நிகழ்ச்சிகளும், கல்லூரி மாணவர்களால் "வன்ரெண்டர்" என்னும் நாடகமும் நடத்தப்பட்டது. இத்துடன் விழா இனிது முடிவுற்றது.

(தொடர்ச்சி 79ம் பக்கம் பர்க்க)



திருச்சிற்றம்பலம்

சாந்தலிங்கர் தாண்மலர் வாழ்க!

திருப்பேரூர் அருட்டிரு சாந்தலிங்க சுவாமிகள் திருமடம்

## தவத்திரு இராமசாமி அடிகளார்

அருளாட்சி ஏற்பு விழாவில் வழங்கிய

# ✷ வாழ்த்துரைகள் ✷

தவத்திரு குன்றக்குடி அடிகளார் அருளிய

## வாழ்த்துப்பா!

—✷—

ஆதி புரிசீர் அரச வனமெனும்
திருப்பே ரூரான் திவ்ய தலத்தில்
அமைந்திடு சாந்த லிங்க அடிகளார்
திருமடத் தலைவர் திகழும் ஆறுமுக
அடிகள் அரும்பணி அருமையின் இயற்றிப்
பணிவும் இன்சொல்லும் பலர்புகழ் தாய்மொழிப்
பயிற்சியும் முயற்சியும் சமயநூல் தெளிவும்
சாந்தையர் தம்பதம் ஏந்து கருத்தும்
குறிக்கோ ளாகிக் குலவுமெம் அன்பர்
தவத்திரு இராம சாமி அடிகளை
இளவர சாக்கி இன்பம் பெருக்கினர்
பிலவங் காண்டிற் பேசுறு மிதுனம்

இருபா னேழெனும் எழில்மங் கலநாள்
காசினி ஏத்துகல் லாடை வழங்கி
அருளர சேற்கும் அரும்விழாக் கண்டு
மடாலயத் தலைமை மாண்புற வழங்கினர்
அருள்முடி சூடும் அன்புறு அடிகாள்!
இயற்கையே உடலா ஏந்தி அன்னதன்
அழகின் வாயிலாய்த் தன்னிருப் புணர்த்தும்
இறைவன் பேரருள் திறத்தினை என்றும்
தம்மாட் டரும்பத் தகவுடன் செய்பணி
நாளும் புரிக நலமே மேவுக
தெய்வத் திருமறைச் செந்தமிழ் முழங்குக
நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழிப் பெருமை மாநிலம் அறிக
எல்லாம் உடையான் குருவாய் ஈங்கெம
தல்லல் அறுப்பான் எனத்துணி வுறுக
அருள்நெறி இயக்கம் அரும்பிய அந்நாள்
மறுமலர்ச் சிக்காம் வழிதுறை எம்மொடும்
உடனிருந் தாய்ந்து உடற்பணி யாற்றினீர்
மடாலயம் இணைந்து வளர்தல் வேண்டும்
எனும்சீ ரியஉரைக் கேற்ப ஒழுகினீர்
சுந்தரன் செந்தமிழ்ச் சுந்தரர் போன்று
எந்தம் ஆருயிர்த் தோழராய் இலங்கினீர்
காகத் திருகணிற் கோர்மணி போன்று
நம்மடா லயம்இரண் டெனவிளங் கிடினும்
உணர்ச்சி வயத்தால் உறுசெயற் பாட்டால்
தொண்டின் திறத்தால் ஒன்றெனத் துலங்கும்
பரமனைப் பாடும் பணியே பரவுக
நிற்பினும் இருப்பினும் கிடப்பினும் நடப்பினும்
மன்றுள் ஆடி மலரடி மறவா
உணர்வுகொள் தொண்டர் குழாம்சிறந் திடுக
வாழியர் சாந்தையர் வாழிய அடிகள்
வாழிய சிவநெறி வாழிய உலகே.

# சிரவணபுரம் கௌமார மடாலயம்

---

சமயந் தழைக்கத் தமிழ்தழைக்கத் தரணி தழைக்க வீரசைவ
சிமயக் கொள்கை நெறிதழைக்கத் திருவார் கொங்கு நாட்டினிடை
அமையுந் திருப்பே ரூர்தழைக்க அணிசால் தொண்டர் தழைக்க அமர்ந்து
இமய நிகரும் தவம்தழைக்க இருந்தார் சாந்த லிங்கமுனி 1.

மன்னர் குமார தேவர்முதல் மாணாக் கர்கள்தாம் பல்சூழத்
துன்னும் சாந்த லிங்கமுனி தூய மடமொன் றமைத் தருளிப்
பன்னும் நான்கு சாத்திர நூல் பாடிப் பரவி வாழ்ந்த இடம்
பின்னர் இடைநாள் வளமின்றிப் பிறங்கக் கண்டார் பலர்மாதோ 2.

சிரவை மடத்தின் குருமுதல்வர் சீடர் தம்மில் முதல்வரெனப்
பரவும் மாணிக்கச் சாமி பணிகள் செய்து சிறப்பித்தார்
விரவும் பின்னர் ஆறுமுக சாமி மேலாம் அடிகளார்
தரமார் பணிகள் பல செய்து கண்ணார் சிரவைத் திருமடத்தில் 3.

குருநா தருக்குப் பணிசெய்து குலவும் இராம சாமிப்பேர்
வருமெய் யடிகள் தமைத்தமது வாரி சாக்கிக் கொண்டதற்பின்
பெருகும் கல்வி நிலையங்கள் பெருமைப் பணிகள் பலகண்டார்
திருவும் கலையும் பிறங்குமவர் செயலால் உள்ளம் உவப்படைந்தார் 4.

சேய தவமார் கல்லாடை சிறந்த அருளாட் சிப்பொறுப்பு
மேய சிறப்பும் மாதவமும் மேவும் இராம சாமிப்பேர்த்
தூய அடிகள் தமக்களித்துச் சொல்லும் சிறப்புச் செய்தனரால்
நேய அடிகள் அருளாட்சி நெடிது வாழி வாழியவே 5.

சாந்த லிங்கர் திருமடத்தின் தலைமைப் பீடத் தமர்ந்தருளும்
ஏந்தல் இராம சாமிப்பேர் இசையும் அடிகள் திருவருட்சீர்
வாய்ந்த ஆட்சி நலத்தாலே வயங்கும் மக்கள் அனைவருக்கும்
ஆய்ந்த சமயச் சிறப்பெல்லாம் அமையும் என்கை திண்ணமதே 6.

எங்கள் மடத்தின் தவச்செல்வர் ஏற்ற மிகுந்த அடிகளவர்
துங்கச் சாந்த லிங்கமுனி தூய மடத்தின் முடிசூட்டிப்
பொங்கும் அருளார் இறையருளால் பொலியும் சமய நெறிபரப்பித்
தங்கும் ஆட்சி செலுத்திஅருள் தழைத்து வாழி வாழியவே 7.

கௌமார சபையார்

சிரவணபுரம் கோவை-6,

உ

முருகன் துணை

# அகவற்பா

---

நீதி வழுவா ஆதி புரியெனும்
பேரூர்ப் பெரும்பதிச் சீருறச் சாந்த
இலிங்க அடிகளார் எழிற்றிரு மடாலயத்
தலைவரா யிலகுறும் கலைபல வாய்ந்த
புலவர் பெருமணி நலமிகும் இராம
சாமியென்னும் நாமம் பூண்டோய்!
வீறுறு மாறு முகமுனி விமலன்
இளவர சாகி வளமுற நின்றோய்!
வெள்ளைஇ கலையுடன் ஒன்னிய புலவனு
நிற்றலை யொரீஇப் பற்றறத் துறந்த
முனிவர் நிலைக்குரி முன்னுகல் லாடை
சூட்டிப் பேரரசு ஆகத் தோய்ந்து
நல்லுப தேசம் நாட்டினர்க் கருள
தொண்டை மண்டிலமும் பாண்டி மண்டிலமும்
ஆட்சிபுரியும் மாட்சிமீக் கூர்திற
பெருந்தவ வடிகளார் பொருந்தக் கூடி
சீரபி டேகம் சிறப்புற வாற்றிடப்
பட்டம் பெற்ற சிட்டனே! நற்றமிழ்
உலகெலாம் பரவ நலக் கல்லூரி
இறைவனாகிய நிறையருளாள!
கோமுனி பட்டி குறுமுனி யாதியோர்
ஒருமுனி யாகுந் திருவுருப் பேற்றோய்!
சீர்பிலவங்க திகழ் மதியானி
மூவொன் பானுய் முகிழத் திகதி
செவ்வேட்குரிய திகழ் செவ்வாய்காண்
மகவுரு தன்னில் மாநிலம் போற்ற
அருளாட்சி யேற்ற மருளறு கலைஞ!
உம்பல் மாமுகன் செம்மயிலூர்பரன்
உமையொரு கூறனும் எமையாள் பிரானும்
ஐயாற்றீசன் அருட் பெருக்கதனுல்
எண்ணிய எண்ணியாங் கெய்தப் பெற்றுநீ
வாழியர் பெரிதே வாழிபல் லாண்டே.

இங்ஙனம்,
பண்டித இராமகோவிந்தசாமிப் பிள்ளை
தருமபுரவாதீனத் தமிழ்ப் புலவர்

சிவமயம்

சாந்தலிங்கர் தாண்மலர் வாழ்க !

திருப்பேரூர் அருண்மிகு சாந்தலிங்க சுவாமிகள் திருமடம்

தவத்திரு இராமசாமி அடிகளார் அருளாட்சி ஏற்பு விழாப்

# பாராராட்டிதழ்

இத்துணை நாளும் இளவர சென்ன இருந்துநற் பணிபல இயற்றிச்
சித்தமும் சொல்லும் செயல்களும் எல்லாம் செந்தமிழ்க் குஞ்சிவ நெறிக்கும்
உய்த்தனிர் உமக்கே இம்மடா லயத்தின் உயர்பெருந் தலைமைகொள் சிறப்பு
ஒத்திடும் என்றே உவந்துபா ராட்டு உரைத்தனம் முகமனன் றிதுவே.

பேராசிரியர்கள்,
தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க்கல்லூரி.

* * * * *

சாந்தலிங்கர் தாண்மலர் வாழ்க !

குணக்குன் றுயொளிர் குருபர ! முதல்வ !
மணக்கும் துறவு நெறியுணர் நல்லோர்
ஏத்தும் இராம சாமித் தூய !
யாத்தும் அன்பால் இன்றமிழ்ச் செய்யுள்
நின்றன் அருட்கொலு நிகழ்ச்சி கண்டேம்
நன்றெம் உளத்தில் நனிமகிழ் கொண்டேம்
கொடைமகிழ் வள்ளல் பொருள்கொண் டானென
மடையுடை வெள்ளம் எனவுளம் மகிழ்ந்தேம்
இடரகன் றிவ்வுல கினிதுன் னருள்நிழல்
உடைமை பெற்றே ஊழிவாழ் கென்றும்
உமையொரு பாகனுர் உமக்கருள் கென்றும்
உமையொடு சிவனென ஒளிர்திருக் காட்சி
அமைதர நல்கிய அண்ணல்
எமையருள் சாந்தனைப் போற்றுவம் யாமே !

மாணவ மாணவியர்கள்,
தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க்கல்லூரி

* * *

இன்னனைய சைவநெறி அறநெறியும் தமிழ்நெறியும் தழைத்துற் றோங்க
மன்னுகுரு வாமெங்கள் ''இராமசாமிப் பெரியார்'' வண்கல்லாடை
மின்னவுடுத்(து) 'அருளாட்சி'' புரியஉவந்தருளுமிந்த விழா நன்னாளில்
பன்னுமிவர் வாழ்கநனி எனவாழ்த்திப் புலவரையாம் பணிகின் றோமே!

பேரூர் புலவர் பேரவையினர்

நிகழும் பிலவங்க ஆண்டு ஆனித்திங்கள் 27-ம் நாள் (11—7—67)
திருப்பேரூர், அருள் திரு சாந்தலிங்க சுவாமிகள் திருமடத்தின் தலைவராய்
ஆட்சி பீடமேறி வீற்றிருந்தருளும்

தவத்திரு, வித்துவான்: இராமசாமி அடிகளார் அவர்களைப் பாராட்டிப் பாடிய

# வாழ்த்துப் பா

நிலை மண்டில வாசிரியப்பா

தேத்தமிழ் நூல்கள் தெளிவுறப் பயின்று
பாத்துறை விளங்கப் பாடுத லமைந்த
நாத்திறம் படைத்த நல்லிசைப் புலவீர்!
வழியிடை யானுமை மகிழ்வுறப் பார்த்ததும்
நல்வினைப் பயனே! நல்வினைப் பயனே!
வறுமையி னீங்கி வாழ்வுறு தற்காம்
செய்தி யொன்று செப்புவன் கேண்மின்
கொண்டல்கள் படுக்குங் குளிர்பூம் பொழிலும்
வண்டலை முத்த வயல்களும் புடைசூழ்
வாவியுந் திகழும் வளமுறப் பெற்ற
பிறவா நெறியெனும் பேரூர்ப் பதியில்
ஆரா மம்போ லாருயிர்க் குதவும்
வீரா கமத்தின் மெய்நிலை தெளிந்து
கொலைபுலை தடிந்த கொள்கையு மறிவும்
நிலையு மன்பும் நீணில வுயிர்கட்
குறுதி யெனநூ லுரைத்தருள் முனிவர்
சாந்த லிங்கர் சமாதிகொண் டிருந்த
திருமட மொன்று சேரர்தம் முரிமைக்
கொங்கினில் ஞானக் கொழுஞ்சுடர் பரப்பி
எங்கும் விளங்கு மிசைமீக் கூர்ந்தது
அத்திரு மடத்தின் அருள் நெறி நிற்குந்
தத்துவ ஞானி தண்டமிழ்ப் புலவன்
துறவுச் செல்வன் தூய்தவ யோகன்
சார்ந்தோர்க் கெல்லாந் தருநிழ லாகி
அன்னமு மறிவும் அருளுட னளிப்போன்
தமிழின் நலமே தன்னல மாகத்
தமிழ்க்கல் லூரி தாபித் திருப்போன்
தண்டமிழ் வழக்கே தகுவழக் காகக்
கொண்டு மொழியுங் கொள்கைசால் நாவலன்
காட்சிக் கினியன் கருத்திற் பெரியன்

முதற்புகழ் கொள்ளு முதலிமா நகரின்
வேள்புலங் கொள்ளும் வேள்குலத் தோன்றல்
உலகுயிர் கடவுள் உறுமுப் பொருளின்
உண்மை உணர்த்தும் உரைதிகழ் வாயான்
பச்சை யிடங்கொள் பட்டிப் பெருமான்
இச்சைவைத் தமரும் எழிலுளம் படைத்தோன்
பால்வெண் ணீறு பரந்தொளிர் நெற்றியன்
அக்க மாலையு மதனடுவிலிங்கமும்
மிக்க வழகாய் விளங்குறு மார்பினன்
சிரவை மடத்திற் சீடனென் றுரைசால்
இராம சாமி யெனும்பே ரடிகள்
ஊனந் தவிர்க்கு முறுபில வங்க
வானி மகநா ளகிலமு மகிழச்
செக்கர் வானன்ன செஞ்சுடர் பொலியும்
மிக்ககல் லாடை மேனியிற் பொலிய
சாந்தலிங் கடிகள் தம்மடத் தலைமை
பூண்மணி மகுடம் பொலிவுறப் புனைந்து
சைவச் செங்கோல் தாமினி தோச்சி
அரசுவீற் றிருக்கு மற்புதக் காட்சி
ஐந்தரு வுலகி னமரர்கள் தலைவன்
இந்திரன் மணிமுடி யேற்புறு காட்சிபோல்
கண்களி கொள்ளும் காட்சிய தாகக்
கண்டுள மகிழ்ந்து காஞ்சிமா நதியின்
விரிநில வனைய வெண்மணல தனினும்
அதிக வாழ்நா ளமைவுறப் பெற்று
நீடுவாழ் கென்ன நிலமுற வணங்கி
அடிகள் திருநோக் கருளினை யேற்று
அறுசுவை உணவுண் டாடையும் பொன்னும்
வளர்தரு ஞானமும் வளமுறப் பெற்று
இன்புற வந்தே னிதுபொழு தேநீர்
பேரூர் மடத்தின் பெரும்பெயர்த் தலைவன்
சீரு ராட்சிச் சிறப்பினைக் கண்டு
அன்னவன் சீர்த்தி யகங்கொளப் பாடி
மன்னுறு மிருமை வளமுறப் பெற்று
இன்னிலந் தன்னி னினிதுவாழ் குவிரே.

திணை : பாடாண் — துறை : புலவராற்றுப் படை.

வித்துவான்
வே. ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர்,
எழுமாத்தூர், வேலம்பாளையம், ஈரோடு (வழி).

உ

சிவமயம்

செந்திலாதிபன் துணை

திருப்பேரூர், அருட்பெருஞ் செல்வர் சாந்தலிங்க சுவாமிகள் திருமடத்துத்
தலைமையைத் தவத்திரு இராமசாமி அடிகளார் கல்லாடை புனைந்து
அருளாட்சி ஏற்கும் விழாவில் படித்து அளித்த

# பாராட்டுரை

நேரிசை ஆசிரியப்பா

திங்கட் குழவி திளைக்குந் தண்புனற்
கங்கை துளும்புங் கமழ்செஞ் சடையவன்
அரசம் பலத்தில் அமரரு மனிதரும்
கோமுனி பட்டி முனிமுதல் அருமறை
மாமுனி வருநிதம் வாழ்த்தி யெடுப்ப
இறவா இன்ப இருங்கூத் தியற்றும்
பிறவா நெறியெனும் பேரூர் தன்னில்,
நான்மறை வியப்ப மேன்முறை நான்கு
வகுத்த மிகுந்த மகத்துவ முனிவன்
விழமலி தெய்வப் பழமலை மேவிய
குமார தேவன் எமார்வப் பெருங்கவி
இதம்பொலி போரூர்ச் சிதம்பர முனிவன்
முதலியர் தழைக்க உதவிய மேகம்
ஏந்திய கொள்கைச் சாந்த லிங்கையன்
பெயரால் தோன்றிய உயர்புகழ்த்
தலைமை தாங்கும் தகைமைத் தோன்றல்!
இராம சாமி யடிக ளென்னும்
விராவிய ஒழுக்க வித்தக! வீர
சைவ மரபிற் சார்தவ மிக்கோய்
நன்மடத் தலைமை துன்னுதி இந்நாள்
என்னு மிதுவெமக் கிறும்பூது தருமால்
வெள்ளாடை உடுத்து விளங்கு நாளினும்
தொடக்கப் பள்ளி துலங்குயர் பள்ளி
தமிழ்க்கல் லூரி தமைநிறு வினைதமிழ்
அருச்சனை வளர்த்தனை அரும்பணி செய்தனை,
பெருந்துறவுக்குப் பொருந்து கல்லாடை
புனைந்தஇந் நாள்முதல் பொருந்து நல்லறங்கள்
மேன்மேல் வளர்த்து மேதினி உய்யச்
சைவமுந் தமிழும் தழைத்தினி தோங்க
எம்மை யனைவரும் இனித்திகழ் நன்னெறி
செம்மையிற் சேர்ந்து சிவன் கழல்பேண
ஆற்றுப் படுத்தாட் கொள்ளப்
போற்றி போற்றி புண்ணிய போற்றியே.

கு. நடேசகவுண்டர், பாரி. மு. நாராயணன்,
சிவகனி. மு. சுப்பையா, பி. ரா. கந்தன்

உ

சிவமயம்

# நல்லியல் வாழ்த்து

அறுசீர்ப் பதிகம்

—:☼:—

இலங்குபுவி மகள்வதன வெழிற்கமல மெனத்திகழு மிசையார் கொங்கின்
தலங்குலவு விழியெனவே தழைத்தவளக் கோவையெனுந் தனிமூ தூரின்
புலந்தருகண் மணியெனவே போற்றவரு ஞானவொளிப் புகழார் பேரூர்
நலந்தருநன் மடத்தியல்பை நான்முகனுர் நவிலுறினு நவிலற் பாற்ருே!

சத்துருவாய்த் திகழ்ந்தவொரு சாந்தலிங்கர் திருத்தளியுந் தணியா ஞானச்
சித்துருவாய் விளங்குமருட் சிவபெருமான் றிருத்தலமுஞ் சிறியேன் கல்லா
முத்தமிழின் றுறைபலவும் உணர்த்துறுகல் லூரியுமங் குறுவார்க் கன்னம்
நத்திமிக வறுசுவையி னல்கிடமு மதற்கணியா நணுகும் மாதோ !

இருப்பொளியொ டின்புருவா யிலங்குபரப் பிரமமதே யெல்லா மாகித்
திருப்பொலிநல் லீசனுமாய்ச் சீவனுமாய்த் திகழுமெனுந் தெருள்வே தாந்தக்
கருப்பொருளைத் தன்மயமாய்க் கண்டனுப வத்துறையுங் கரையில் ஞானக்
குருப்பரம சாந்தலிங்கன் குரைகழற்ரு மரைமலரைக் குறித்து வாழ்வாம்.

பதநெறிசேர் துவிதமதைப் பகருமறை நூலனைத்தும் பண்பா மத்து
விதநெறியின் வாயிலென விளங்குமருட் கருணையினுல் விதந்தே யோதிக்
கதநதிகள் கடலதனிற் கலத்தலுறு கணக்கெனவே கவின்வே தாந்த
மதநெறியிற் கலக்குமெனுஞ் சாந்தலிங்க மாதவத்தோன் மலர்த்தாள் போற்றி!

கொலைமறுத்த லவிரோத வுந்தியொடு கொழிதமிழின் கொழுந்தாம் வேதத்
தலைநிறுத்துஞ் சதகமதைத் தனித்துறவாந் தீபமதைத் தந்தே பண்டைக்
கலைநிறுத்த சாந்தலிங்கக் கவின்வீர சைவனடிக் கமலந் தாழும்
மலைவறுத்த திருநீற்றி னெளிவளரு மடியரடி மனத்துள் வைப்பாம்.

தத்துவத்திற் சிறந்தொளிருந் தனித்திருவா சிட்டமெனுந் தகைசேர் நூலை
வித்தகநல் வசிட்டமுனி விரிவுறநல் லருளதனுல் விளம்ப வோர்ந்த
சத்தியநற் றயரதனின் றனயனுறு தனிப்பெயராய்த் தயங்கும் இராம
மெத்தியநற் சாமியுன்றன் விழுமியசீர்த் துறவுநிலை விளம்பற் பாற்ருே!

செந்தமிழி னிலக்கியமுந் திருந்தியநல் லிலக்கணமுஞ் சிதையா ஞானச்
சந்தமுறு சாத்திரமுந் தருக்கமுதற் கலைபலவுஞ் சமைவோ டாய்ந்து
சிந்தையுறு திரவறிவின் சிகரமதாய்த் திகழ்ந்திடுவாய்! சிவனே யத்தாற்
பந்தமறுத் தந்தமிலாப் பரப்பிரமத் திருவுருவாய்ப் பதிந்து வாழ்வாய்.

கற்றவரும் மற்றவருங் கலந்துறவு கொளநவிலுங் கறையில் செந்நாச்
சொற்றவருத் தமிழ்ப்புலவ! துலங்கவரு மாணவர்க்குத் துரிசி னூல்கள்
உற்றுதவு பெருங்கொடையாய்! உறுமவர்க்கு முலவினல முதவும் வள்ளால்!
செற்றமுடன் மயக்கமறு சிவஞானச் செல்வமதிற் றிகழ்வோய்! வாழி!

கண்ணுறுநல் லருளுடையாய்! கழுத்திலக்க வடமுடையாய்! கவினர் லிங்கம்
மண்ணுறுநன் னிறமுடையாய்! மதிவதனத் தொளியுடையாய்! மலரோன் காணு
அண்ணலரற் கன்புடையாய்! அணிந்ததிரு நீறுடையாய்! அழியா ஞானத்
திண்ணியநற் றிருவுடையாய்! திருந்தியகல் லுடையுடையாய்! திருவே! வாழி!

சந்திரன்கால் நாலொன்ருந் தகுங்குமணன் காலரையாஞ் சடையிற் கங்கை
இந்துவினன் காலிரண்டா மிலங்குபகீ ரதன் முக்கால் இசையார் கர்ணன்
சிந்தையுறக் காலெனலாந் தெரித்தகொடை வள்ளல்களும் திருவின் மிக்கு
முந்துறநின் கொடையதனை முழுக்கொடையென் ருேதிடுவர் முனியே வாழி!

இன்னணம், அன்பன்,
சண்முகானந்தசுவாமி
தத்துவ சன்மார்க்கச் சங்கம், ஆத்தூர்.

---

ஓம்

தவத்திரு வழங்கும் சிவத்திரு வெய்தி
உவப்புடன் பொலியும் உத்தம முனிவ!
யாழினி தளிக்கும் ஏழிசை போல
வாழி வாழிபல் லூழிவா ழியவே!
கருணை வீணையைக் கரத்தினில் ஏந்தி
ஐம்புல வேழ ஆற்றலை யடக்கிச்
சாந்த லிங்கன் தண்ணருள் எய்தி
மாந்த ருளத்திருள் மாய்க்கும் சுடராய்
வாழி வாழிபல் லூழிவா ழியவே!

S. K. இராமராசன்,
வேலூர், சேலம்

கவியரசு வித்துவான் கு. நடேசக்கவுண்டர்,

கோயம்புத்தூர் - 12

## சாந்தலிங்கர் துதி

மடமோட்டுங் கட்கடைவைத் தருந்தவருந்
தொண்டர்களும் மயக்க நீங்கத்
திடமோட்டுத் தெளிவருளும் சான்ருனே
வீரசைவ சிங்க மேதேன்
குடமோட்டுக் கமலவயற் றிருப்பேரூர்ச்
சாந்தலிங்க குருவே என்க
படமோட்டிப் பவமோட்டிப் பரகதிக்குப்
பதங்காட்டிப் பாலிப்பாயே.

[குறிப்பு :—மடம் = அறியாமை. கட்கடை = கடாட்சம், திருக்கடைக்கண் பார்வை. திடம்மோட்டுத் தெளிவு = உறுதியானதும் பெருமையுடையதுமான ஞானம். தேன்குடமோட்டுக் கமலம் = தேன்குடம் போலும் பெரிய தாமரைப்பூ. கபடம் = வஞ்சனே. பவம் = பாவம், பிறப்பு. கட்கடை = கள்ளுக்கடை. அருந்த வரும் தொண்டர் = உண்ண வரும் பேதையர். தெளிவு = ஒருவகைப் பானம். சான்ருன் = கள் இறக்குவோன், என்ற பிறிது பொருள்படுதல் நயம். பதம் = வழி, திருவடி. ஈற்றடி முற்று மோனே.]

## நன்றி நவிற்சி

தாதீன மலர்ப்பொழில்சூழ் பேரூரிற்
சாந்தலிங்கத் தவரா சற்கு
மாதீன மதியடியேன் தொண்டுபட்டு
மூன்றுமா மாங்க மாகும்
ஆதீனப் புலவனெனப் பட்டமிந்நாள்
எனக்களித்த தாதீ னந்தான்
போதீனும் போதன்ருே நல்வினேயின்
பலன்கையிற் புகுது மாதோ.

தனக்குரிய னெனவென்னேச் சாந்தலிங்கன்
ஏற்றதனுல் தமியேன் மண்மேல்
தனக்குரிய ராய்ஈட்டுந் தனக்குவியற்
காரருக்கிச் சகம்பே சீனத்
தனக்குரிய ஞகேன் இச் சகவாழ்வில்
தளரேன்பைந் தமிழ்ப்பா ஓதித்
தனக்குரிய திருத்தொண்டால் தவருத
பெருவாழ்வு தழைப்பேன் மன்னே.

உ

முருகன் துணை

கி. வா. செகந்நாதன், எம். ஏ.

காந்தமலை

7, நார்ட்டன் முதல் தெரு, சென்னை-28.

சிவநலஞ்சேர்ந் துயர்ந்துதமிழ்க் கடல்நீந்தி நூல்பலவும்
சிறப்பக் கற்றுத்
தவநலத்தில் பிறங்குகின்ற திருவாளன் திருப்பேரூர்ச்
சாந்த லிங்கர்
பவமகற்ற நிருவியமா மடாலயத்தில் இளவரசாம்
பட்டம் பெற்றேன்
நவமுடைய சொல்லாளன் இராமசா மித்தவத்தோன்
நாளும் வாழ்க! 1.

தெருளாட்சி யோங்கஅருட் சைவநலம் பெரிதோங்கத்
தெய்வம் ஓங்க
மருளாட்சி அறஆறு முகசாமி கல்லாடை
வழங்கக் கொண்டே
அருளாட்சி ஏற்கின்ருன் எனும்செய்தி கேட்டுவகை
அடைந்தேன் ஞானப்
பொருளாட்சி செயயார்க்கும் நலம்பெருக அவன்சீர்த்தி
பொலிய வாழி! 2.

பாநயத்தின் திறந்தெரிந்தான்; தமிழ்க்கல்லூ ரிக்கண்ணே
பன்மா ணுக்கர்
நாநயத்தி னுற்பாடம் கேட்டுவக்க வழங்குகின்ற
நல்லோன்; நெஞ்சில்
தூநயத்த பண்புடையான்; பலமேடை யினிற்பேசிச்
சுடரும் ஐயன்
சேநயத்த வாகனத்தான் அருளால்இந் நாள்தலைமைச்
சிறப்புப் பெற்ருன். 3.

தன்னுடைய கண்காண இவன்தவச்செங்
கோல்நடத்தும் தலைவ னுக
என்னுமுயர் அருள்பூத்த ஆறுமுக சாமியுடை
ஏற்றம் சொல்கோ!
பின்னவனு யிருந்துபலர் போற்றுகின்ற தகுதியினுல்
பேரூர் தன்னில்
மன்னுமடா லயத்தலைவ னுகின்ருன் பெருமையினை
வகுக்கோ என்னே! 4

தொண்டுபல வுஞ்செய்து மாணுக்கர் ஈடேறச்
சுவைசேர் ஞானம்
மிண்டுரைகள் வழங்கியடி யார்பக்தி சிவபக்தி
மேன்மேல் ஓங்க
அண்டுபல செயலாற்றி மடாலயத்தின் புகழ்பின்னும்
அடுக்க டுக்காய்ப்
பண்டையநன் னிலைமேலும் பரவஇவன் திறங்கள்மிகப்
பணைத்து வாழி! 5.

எழிலுடைய திருப்பேரூர்ச் சாந்தலிங்க
மடாலயத்தின் இசைகள் வாழி!
தழுவுமரு ளுடையமுனி ஆறுமுக சாமிபன்னுள்
தழைத்து வாழி!
கெழுமுபல பண்போங்க இராமசா மித்தவத்தோன்
கிளர்ந்து வாழி!
மழுவுடைய கரத்தான்சை வப்பெருமை யோங்கிநன்கு
வாழி வாழி! 6.

---

அருண்மிகு அடிகளார் அவர்கள்
திருமுன்னர்க்கு,

1. செய்வள மிக்க திருப்பேரூர் அம்பதியில்
நொய்யற் கரையில் நெடிதுயர்ந்த—துய்யமடம்

2. வையம் அருள்நெறியில் வாழ வழிவகுத்த
ஐயன் திருமடமாம் அம்மடத்தின்—செய்ய

3. தலைமைப் பொறுப்பேற்றுச் சாந்தலிங்கர் நாமம்
நிலைநிறுத்த வந்த நெடியோய்—கலைநிறைந்த

4. தண்டமிழின் ஒண்சுவையைத் தாரணியெல் லாம்பரப்பக்
கண்டுரைக்கும் கல்லூரி கண்டவரே—எண்டிசையும்

5. அன்பும் அருளும் அறிவும் கதிர்பரப்பித்
துன்பவிருள் நீங்கத் துணைபுரியும்—மன்னவரே

6. தாங்கள் அருளாட்சி தாங்கும் நிலையெண்ணி
ஈங்குறையு மேமை யுளத்திலென்றும்—நீங்காத

7. இன்பம் பெருக இறைஞ்சுகிறேன் நும்மாட்சி
இன்பம் பெருக்க இசைந்து.

சொ. இராமச்சந்திரன்
தமிழாசிரியர், சர். இராமசாமி முதலியார் உயர் பள்ளி. (அம்பத்தூர்)

• * * * *

திருவளர் பேரூர்ச் சாந்தநா யகன்றன்
திருமர போங்கிட வந்த
குருவளர் இராம சாமியென் றுரைக்குங்
குரிசிலே! அருளறம் பெற்ருய்;
கருவள ருலகப் பற்றெனும் இருளைக்
கடிந்துநற் றவத்தினு லுயர்ந்தே
உருவள ருலகில் ஞானசூ ரியனுய்
ஒளிமிக வாழ்கபல் லாண்டே.

வித்துவான் திரு. அடிகளாசிரியர்
தமிழ்ப் பேராசிரியர், கரந்தைப் புலவர் கல்லூரி, தஞ்சாவூர்–2.

505

பேரூர் தவத்திரு சாந்தலிங்க அடிகளார் வீர சைவ மடத்தின் இளவரசு தவத்திரு இராமசாமி அடிகளார் முடிசூட்டு விழாவில் 1—7—1967 கவிஞர் கி. அரங்கசாமி பாடிக்கொடுத்த

## வாழ்த்துப்பா

சன்மார்க்க வீரசைவம் தழைத்தே ஓங்கச்
சாந்தமொடு மக்களெலாம் இனிதே வாழச்
சமரசமாம் அன்புமிகு சாந்த லிங்கர்
சாற்றினுர் அறநெறியைத் தலைமை யான

நன்மார்க்கத் துணையேற்றே நன்மை பெற்று
நாட்டினிலே வளமதனை நாளும் காத்து
நறுந்தமிழ்நூல் பற்பலவும் கற்றுத் தேர்ந்து
நடத்தையிலே பேரொழுக்கம் நாட்டி நின்ருர்

துன்மார்க்கத் தீயவழி சென்றி டாமல்
தூண்டுகின்ற பலசமயம் சூழ்ந்தி டாமல்
தூரமென இறைமைதனைத் தேடி டாமல்
தூய்மனத்தே இறையிருக்கும் தோற்றம் கண்டார்

பன்மார்க்கம் போற்றுகின்ற வீர சைவப்
பண்பதனைக் கைகூப்பி வரவேற் றேதான்
பாங்குமிகும் இதயத்தே இறையைக் காட்டும்
பரிவுள்ள சாந்தலிங்கர் நெறியே வாழ்க.

பேரூரில் சாந்தலிங்கர் தவம னத்தே
பேரிறையை நிலைநாட்ட மடமுண் டாக்கி
பெருஞ்சான்ருேர் தங்குதற்கு வளங்கள் தேக்கி
பேரின்பம் பெறுவதற்கே வழியுங் கண்டார்

பேரூரைப் பெற்றநறுங் கோவை மக்கள்
பேணுகின்ற தீந்தமிழால் வீர சைவம்
பெற்றிகொள வைராக்யத் தீபம் உந்தி
பெருமைமிகும் கொல்லாமை நூலுண் டாக்கி

நேருறும் தமிழார்வம் நிலைநின் ருேங்க
நெடும்பள்ளி கல்லூரி நேர்மை மன்றம்
நிறைமைபெறும் இறைமைபணி நீடு சங்கம்
நீணிலத்தே வளருதற்கும் பீட மான

பேரூரின் சாந்தலிங்கர் ஆதீ னத்தைப்
பிரியமொடு மாநிலத்தோர் பேணும் வண்ணம்
பெருந்தவத்தோர் இராமசாமி அடிக ளார்தாம்
பெருந்தலைமை முடிசூடி வாழ்க வாழ்க.

தங்கள் நன்றி மறவா,
கவிஞர் கி. அரங்கசாமி.

வேலுமயிலுந்துணை

திருப்பேரூர் அருண்மிகு சாந்தலிங்க அடிகளார் திருமடத்தில்

தவத்திரு இராமசாமி அடிகளார்

அருளாட்சி ஏற்பு விழா அமைந்த காலை உவந்தளித்த

# வேண்டுகோட் பாக்கள்

—☀—

1. அருளார்ந்த தனிமுதலே! இராம சாமி
அடிகளெனும் ஒருகருணை அமுதே! மாய
இருளறுக்கும் தவச்சுடராய் இலகும் வாழ்வே!
இகவுலகில் எழுஞான வெண்மை தன்னிற்
சுருளாத மனத்துவர்ப்புப் பெற்ற உண்மை
சுருக்கிமிக விளக்கியிடு துவரா டைக்கே
மருளாட்சி மிகவொழிக்கு மாண்பி னுய
மகஞான நல்லாட்சி மலியப் பெற்றீர்!

2. சிவஞானி புகழ்புரக்கும் சிவப்ர காசச்
சீர்ஞானி கற்பனைக்கோர் சீல ஞானி
அவஞானக் கடலையெலாம் அலைத்துப் பாற்றி
அகங்கைக்குள் அடக்கிஅதை அருந்தி னேனும்
தவஞானச் செழுங்கலையாய்த் தவழ்ந்து போந்து
தழைகருணை வார்முலைப்பால் ஏற்ற கன்றும்
பவமறுக்கும் பணியதனில் விட்டுச் சென்ற
பண்தமிழைத் தன்னுவால் நிறைத்த பாரன்.

3. தவமுதல்வன் மயிலையமர் முருக வேளின்
தகைஞானி பாலையநல் லடிகள் சீரால்
சிவமாகும் நலம்பெற்ற சிவப்ர காசச்
செழுந்தமிழோன் குலத்துதித்த செம்மை சான்றீர்!
நவமாகும் சுவையார்ந்த தமிழை ஓதி
நலம்என்ற முதுசொற்கோர் அருணை வள்ளல்
பவமறுக்கக் கணித்தபொருள் வழங்க வேண்டும்
பரிசதுவே இம்மகநாள் பரிந்து காக்க.

4. பரஞானத் தனிமுதலின் ஒருவித் தாகிப்
பகரருமைப் பொய்யதனின் வித்தே என்றுள்
உரமுடனே பொய்யுரைக்கும் வீர ஞானி
ஒருமையுடன் இருமையற உவந்த நாளாம்
அரதனமாம் மகநாளில் அருளின் ஆட்சி
அமர்ந்திட்ட அருட்குலத்து வீர சைவ!
இரதமறும் அவ்வாழ்வின் அரசே யாய
எங்களுக்குன் திருவடிநல் லருளை யீக!

5. இருளாட்சித் தனியரசர் ஐவ ரர்க
இருந்தமையும் துச்சிலதும் எங்கட் கில்லை
இருளறுத்த இவ்வாட்சிக் கரசர் யாமென்
றிருமாந்தேம் இகழ்ந்துரைத்தேம் இனியென் செய்வேம்
மருளாட்சி தமைமதிக்கு மன்னர் கண்டேம்
மயக்கமற ஆண்டைந்தில் மாய்தல் கண்டேம்
அருளாட்சி மலரவரும் அடிகேள்! எங்கள்
அகவழுக்குத் தளையறுத்தின் றரைசு செய்க!

இன்னணம்,
வித்துவான் வை. இரத்தினசபாபதி, B.O.L. M.A

*  •  *

சுவாமிகள் அருளாட்சி ஏற்புவிழா பொன்விழாவாக விளங்க மாதொரு பாகனுர் பொன்னடி வணங்குகிறேன். சுவாமிகள் மடாலயத் தலைமை ஏற்புக்குப்பின் சைவமும் தமிழும் தழைத்தினி தோங்கவும், ஆலயங்களிலும் மடங்களிலும் வார வழிபாடு சிறக்கவும் அருள்நெறித் தந்தை தந்த அருள்நெறி தமிழகத்தில் சிறந்தோங்க வும் தமிழன்னையின் தவப்புதல்வர்களைப் பிறமதத்தவர் தவருது காத்திடவும் தமிழன்னைக் குப்பணிபுரியவும் சமய அன்பர்கட்கு அருள் உரையும் அருளாசியும் வாரி வாரி வழங்கித் தமிழ்நாடு அருள்நெறிச் சிறப்படைந்து மேன்மைகொள் சைவ நீதி தமிழகமென்ன உலக மெலாம் விளங்க வேண்டுகிறேன். நலம்பல பெறவும் வேண்டி வணங்குகிறேன். இன்று என் உள்ளத்தில் அருளாட்சி ஏற்பு விழாக்காட்சி கண்டு மகிழ்கிறேன்.

ப. திருமலை நம்பி,
வடக்கு ரதவீதி, ஏர்வாடி.

•  •  *

அருண்மிகு சாந்தலிங்க அடிகளார் அவர்கள் சமய நல்லுலகிற்கு ஆற்றியுள்ள அரும்பணிகள் பல. அவர்கள் அருள் வழி இயங்குவது ஸ்ரீ சாந்தலிங்க அடிகளார் அவர்கள் திருமடம். செந்தமிழ் மொழிக்கும் சிவநெறிக்கும் இத்திருமடம் பல பணிகளைச் செய்து வருவது பாராட்டற்குரியது.

இத்திருமடத்தின் தலைவராய் அருள் அரசு ஏற்க இருக்கும் தவத்திரு. இராமசாமி அடிகளார் அவர்கள் விழுமிய நோக்கம் படைத்தவர்கள். தமிழுலகிற்கு இவர்கள் அருளாட்சி மிக்க நலம் பயக்கும். ஞானபீடம் ஏறும் தவத்திரு அடிகளார் அவர்கள் பல்லாண்டு பல்லாண்டு வாழ்ந்து தமிழொடு சைவம் தழைக்கப் பணிபுரியுமாறு எல்லாம் வல்ல இறைவனைத் தமிழுலகின் சார்பில் வேண்டிக் கொள்கிறேன்.

வித்துவான்
சா. குருசாமி தேசிகர்,
தமிழ்ப் பேராசிரியர்
பல்கலைக் கல்லூரி, தருமபுரம், மாயூரம்.









தவத்திரு சாந்தலிங்க இராமசாமி
அடிகளார்—அருளாட்சி யேற்பு விழா
மந்திர நீராட்டலும், வழிபாடும்








தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார் அவர்கள் அருளாட்சி விழா-கொலுக்காட்சியும், ஊர்வலமும்





தமிழ்க் கல்லூரிக் கட்டிடத்தின் முன்தோற்றம்.



உயர்நிலைப் பள்ளிக் கட்டிடத்தின் வெளித்தோற்றம்.

உ

சொக்கேசர் துணை

எல்லாம்வல்ல எம்பெருமானது இன்னருளால் எல்லா நலங்களும் எய்துக.

1ந் தேதி எழுதிய கடிதமும் தவத்திரு இராமசாமி அடிகளார் அருளாட்சி ஏற்பு விழா நிகழ்ச்சி நிரலும் கிடைத்துப் பெருமகிழ்ச்சி அடைந்தோம்.

தவத்திரு ஆறுமுக சுவாமிகள் இராமசாமி அடிகளார்க்கு 11—7—67ந் தேதி செவ்வாய்க்கிழமையன்று கல்லாடை வழங்கிப் பட்டாபிஷேகம் செய்து அவர்களை மடாலயத் தலைமையில் நிறுவத் திருவுள்ளம் பற்றினது அவர்களது பற்றற்ற உள்ளத்தை வெளிப்படுத்துவதோர் ஒப்பற்ற செயலாகும்.

அருளாட்சி ஏற்பு விழா யாதொரு விக்கினமுமின்றி எல்லாவிதச் சிறப்புக்களுடனும் இனிதே நடைபெறவும், தவத்திரு இராமசாமி அடிகளுக்குச் சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானமும், பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானமும், உவமையிலாக் கலைஞானமும், உணர்வரிய மெய்ஞ்ஞானமும், சிந்தித்த மனோரத சித்தியும், அரோக திடகாத்திரமும், தீர்க்காயுளும், அஷ்ட ஐஸ்வரிய ஆதிக்கமும், நித்திய மங்கள குருகடாக்ஷமும் மென்மேலும் பெருக உண்டாகவும் திருவருள் பாலிக்குமாறு எல்லாம்வல்ல அங்கயற்கண்ணி பங்கனும் ஆலவாய் அண்ணலைப் பிரார்த்தித்து ஆசீர்வதித்த விபூதிப் பிரசாதமும் குங்குமப் பிரசாதமும் இத்துடன் எழுந்தருளச் செய்திருக்கிறோம்.

சோமசுந்தர ஞானசம்பந்த தேசிகர்,
மதுரையாதீனம், மதுரை

*　　*　　*

தவத்திரு இராமசுவாமி சுவாமிகள் ஏற்கும் அருளாட்சி
விழாவினைச் சிவபெருமான் ஆசீர்வதிப்பாராக.

காசிவாசி அருணந்தித்தம்பிரான் சுவாமிகள்

திருப்பனந்தாள்.

ஃ　　ஃ　　ஃ

அன்பரீர்,

அவ்விடமிருந்து அனுப்பிய அருளாட்சி ஏற்பு விழா அழைப்பு வந்தது மகிழ்ச்சி.

“பாரூரும் அரவல்கு லுமைநங்கை யவள்பங்கன் பைங்க ணேற்றன்
ஊரூரன் தருமனார் தமர்செக்கி லிடும்போது தடுத்தாட் கொள்வான்
ஆரூரன் தம்பிரான் ஆரூரன் மீகொங்கி லணிகாஞ்சி வாய்ப்
பேரூரர் பெருமானைப் புலியூர்ச்சிற் றம்பலத்தே பெற்றாம் அன்றே”

பேரூர் என்பது ஒரு திருத்தலத்தின் பெயர். இதற்கு மேலைச் சிதம்பரம் என்றொரு பெயரும் உண்டு. இதுபோலவே சிதம்பரம் என்ற பெயரால் வழங்கப்பட்டு வரும் தலத்திற்குத் தில்லை என்ற பெயர் அமைந்துள்ளது. இரண்டு தலங்களும் பெயரால் ஒற்றுமையுடையன என்பது மட்டுமல்ல. மூர்த்தியாலும் வேறுபாடு இல்லாதனவே

யாம். எங்குமாய் நிறைந்திலங்கும் பரம்பொருள் ஒன்றே எல்லாத்தலங்களிலும் சிறப்புற இருந்து அருள்புரிகின்ற தென்னும் பொதுநிலையான்மட்டும் இன்றி வரலாற்றுச் சிறப்பு ஒற்றுமையுடன் கூடியும் விளங்குகின்ற தனிச்சிறப்பு பேரூர்ப் பெம்மானிடத்தும் தில்லைப் பிரானிடத்து மட்டுமே காண்கின்றோம்.

மேலே எடுத்துக் காட்டப் பெற்றுள்ள தேவாரப் பாடலில் நம்பி ஆரூரன் ''பேரூரர் பெருமானைப் புலியூர்ச் சிற்றம்பலத்தே பெற்றும் அன்றே'' எனக்கூறியிருப்பதும், நம்பி ஆரூரர்க்குத் தில்லைக் கனகசபை நடனத்தைப் பேரூர் இரசத சபையிற் காணச் செய்த வரலாறும் சான்றாகும்.

பேரூர்ப் பெம்மான் திருச்சந்நிதானத்தில் பிறங்கும் பெருமை சாந்தலிங்க சுவாமிகட்கு அமைந்திருக்கின்றது. இதுபோலவே தில்லைப்பிரான் திருச்சந்நிதியில் ஸ்ரீமௌனசுவாமிகள் விளங்கி வருகின்றார்கள். இரு பெரியார்களும் பலவகைத் தொடர்பு பூண்டு வாழ்ந்தார்கள் என்பது வரலாறு மூலம் அறியக் கிடக்கின்றது. இத்தொடர்பு வழிவழியே தொடர்ந்து வருகின்றது. தலத்தோடு குருலிங்கத் தொடர்புகள் பலவுண்டு. இவை நிற்க.

தற்போது பேரூர் மடத்திற்கு இளவரசாக யிருந்து வருகின்ற இராமசாமி அடிகளார் மடாலயத் தலைமைப் பதவியேற்று அருளாட்சியை மேற்கொள்ள விருக்கின்றார்கள். அதற்காக நடைபெறும் விழா அண்மையில் நடைபெற விருக்கின்றது. அப்பெருவிழாவிற் கலந்துகொண்டு, சிறப்பிக்க வேண்டிய பொறுப்பும் கடமையும் இருந்து வருவதை உணர்கின்றோம். எனினும் அத்தகு நிலையினை மாற்றித் திருவருள் அமைத்திருப்பதிலும் புதுமையே விளங்கிக் கொண்டிருக்கக் காண்கின்றோம்.

ஐம்பெரும் பூதங்களுள் உருவப் பூதமாகிய மண்ணிற்குரிய தலம் கச்சிப்பதி. அத்திருப்பதியிலுள்ள ஆதீனகர்த்தர் உருவ நிலையிலும் அருவுருவப் பூதமாகிய நெருப்பிற்குரிய தலமான அருணைப்பதியின் ஆதீனகர்த்தர். அருணைப்பதியை விடுத்திலங்கும் அருவநிலையுடனும் குன்றக்குடியை அடுத்திலங்குவதாகிய உருவ நிலையுடனும் கூடிய அருவுருவ நிலையிலும், நேரே ஆங்கு எழுந்தருளிச் சிறப்பிக்கின்றார்கள். அருவப்பூதமான விண்ணுக்குரிய திருத்தலமாகிய திருப்பதியில் வாழ்கின்ற எங்களை அருவநிலையில் ஆங்குப் போந்து சிறப்பிக்கும் நிலையினைத் திருவருள் அமைத்திருக்கின்றது. அவ்வாறாகவே பருஉ உடல் இங்கிருப்பினும் நுண்ணுடலுடன் ஆங்குப் போந்து விழாவிற் கலந்து கொள்வோம் என்பது உறுதி.

திருப்பேரூர் அருட்டிரு சாந்தலிங்க அடிகளார் திருமடத்தில் தவத்திரு இராமசாமி அடிகளார் தலைமைப் பதவியேற்று அருளாட்சி நடாத்தி வீறுடன் விளங்குவார்களாக! அவர்கள் எண்ணியிருக்கும் பலவற்றையும் ஈடேற்றுவிக்கத் திருவருள் துணை செய்வதாக.

வாழ்க சாந்தலிங்கப் பெருமான் வார்கழல்கள்
வளர்க அவர் மேற்கொள் திருநெறி
மலர்க அவர் வழிவரு திருக்கூட்டம்.

சபாபதி சுவாமிகள்
மௌனசுவாமிகள் திருமடம், சிதம்பரம்.

திருவருள் நினைந்து எழுதுவன. அருளாட்சி ஏற்பு விழா அழைப்பிதழ் கிடைத்தது. நன்று.

தவத்திரு இராமசாமி அடிகளார் தண்டமிழ்ப் புலமையோடு ஊக்கமும் தொண்டும் செயல் திறனும் உடையவர்கள். அவர்கள் பேரூர்த் திருமடத்தின் அருளாட்சியில் அமர்தல் வரவேற்கத்தக்கது.

திருமடமும் அதன் திருத்தொண்டுகளும் அடிகளார் ஆட்சியில் மேன்மேலும் ஓங்கி வளரக்கூடும். பொதுமக்களைச் சிறப்பு மக்களாக ஓங்க வைப்பதில் திருமடங்களுக்கே பெரும் பொறுப்பு இருக்கிறது. உலகியலிலும், அருளியல் வழியில் திருமடங்களே மக்களுக்கு வழிகாட்ட வேண்டும்; உடன் நடத்திச் செல்லவும் வேண்டும்.

விழா சிறப்புறுக! அடிகளார் வெல்க! திருமடம் ஓங்குக!
காலம் மாணிக்கவாசகர் திருநாளாயிருப்பது மாட்சி!
அன்பர்கள் நினைவுக்கும் நல்விருந்து!

அழகர் அடிகள்,
மதுராந்தகம்.

* * *

தாங்கள் கல்லாடை புனைந்து அருளரசேற்று கண்ணுதற் பெருங்கடவுள் கழகமோடர்ந்து பண்ணுறத் தெரிந்து ஆய்ந்த இப்பசுந்தமிழையும், வையகம் போற்றும் சைவப் பண்பையும், தக்கவகையில் போற்றிவளர்ப்பீர்கள் என்று எதிர்பார்க்கிறேன்.

தங்கள் தொண்டு சிறக்க அருள்புரியவேணுமாய் ஸ்ரீ செந்தமிழ்ச் சொக்கர் திருவருளைப் பிராத்திக்கிறேன்.

சோமசுந்தரத்தம்பிரான்
தருமையாதீன சமயப் பிரச்சார நிலையம், சென்னை-17.

* * *

தங்கள் அருமை பெருமைகளைத் தமிழுலகம் நன்கு அறியும். அறிவுத்திருவும் அருட்பணித் திறனும் வாய்ந்த தாங்கள் அருளாட்சிஏற்பது சாந்தலிங்கரின் அருவான தவப்பொலிவிற்கு உருவான விளக்கமாகும். தாங்கள் செய்துள்ள தமிழ்ப்பணியும் சிவத்தொண்டும் மிகப்பல. அருள் வல்லபத்தால் இனிச் செய்யும் பணிகளை நாடு வரவேற்கிறது.

தங்களைப்போன்ற அறிவொழுக்கம் சான்ற அருளாளரே நமது சமயத்தைக் காக்க வேண்டும். அதன்பால் எனது பணிநலம் எப்போதும் தங்களுக்கு உண்டு.

நாத்திகம் ஒழிந்து ஆத்திகம் பொலிக!
வையக மெல்லாம் சைவம் விளங்க!

நான் ஐரோப்பா சென்று இப்போதுதான் திரும்பினேன். பல இடங்களில் சித்தாந்த முழக்கம் செய்தேன். முதலில் இங்கே நம்மவரைத் தொண்டிற்குத் தூண்டவேண்டும். சிவபெருமான் அருளுக!

இன்பமே சூழ்க! எல்லோரும் வாழ்க!

சுத்தானந்த பாரதியார்,
அடையாறு, சென்னை-20.

தாங்கள் அருட்டிரு சாந்தலிங்க சுவாமிகள் திருமடத்தின் அருளாட்சியை ஏற்றுக்கொள்வதையறிந்து மிக மகிழ்ச்சி. தங்களது தலைமையில் திருமடம் அருட்டுறையில் சிறந்தோங்கி நாட்டில் நலம்பெருக்கும். இந்தப் புனிதமான விழா சிறப்பாக நடைபெற அருள்புரியுமாறு ஆண்டவனைப் பிரார்த்திக்கிறேன்.

அன்பும் நமஸ்காரமும்

சுவாமி சோமானந்தா,
ஸ்ரீ இராமகிருஷ்ண மிஷன் வித்யாலயம், கோயம்புத்தூர்.

•  •  •

தாங்கள் அருளாட்சி ஏற்கும் திருநாளான புண்ணிய தினத்தில் நேரில் வந்து திருவருட் காட்சியைக் காண, தரித்திரசேவை ஒய்வளிக்கவில்லை. "அருளாட்சி ஏற்பு விழா" எல்லாவகையிலும் இனிதே நடந்தேறத் திருவருளைப் பிரார்த்திக்கிறோம்.

அன்பும் நமஸ்காரமும்
பிரம்மச்சாரி இரத்தினம்,
ஸ்ரீ இராமகிருட்டிணகுடில், திருப்பராய்த்துறை.

•  •  •

"துறவும், தொண்டும் தார்மீகக் குறிக்கோள்" என்ற நிலையினை அடைந்து, இறைக்கும், இந்நாட்டு ஏழைமக்கட் சமூகத்தினர்க்கும் தங்கள்வாழ்வை அர்ப்பணிக்கும் பணிக்குத் திருவருள் துணைபுரியப் பிரார்த்திக்கிறோம்.

பிரம்மச்சாரி இராமசுவாமி,
ஸ்ரீ இராமகிருட்டிண குடில், திருப்பராய்த்துறை.

•  •  •

நேரிசை வெண்பா

'தவமே பெருக்குந் தகைராம சாமிச்
சிவமேநின் சீலம் சிறக்க—நவமே
அருளாட்சி ஏற்றுநிதம் அன்பர்க் கருள்க
தெருளாட்சி செய்கஅருள் சேர்ந்து.'

கிருபானந்தவாரியார்,
சென்னை.

•  •  •

அருண்மிகு சாந்தலிங்கர் பரம்பரையில், சைவமும், தமிழும் தழைத்தினி தோங்க, அருளாட்சி ஏற்கும் தவத்திரு அடிகள் அவர்களுக்கு என் அன்புகலந்த வணக்கங்களும், வாழ்த்துக்களும் உரித்தாகுக.

தாங்கள் நீடூழிகாலம் வாழ்ந்து, சைவத்தொண்டும், தமிழ்த்தொண்டும் புரிந்து பெருஞ்சிறப்படைய எல்லாம்வல்ல இறைவனை வேண்டுகிறேன்.

Dr. C. N. சம்பந்தம், (தலைவர்)
வேளாண்மைத்துறை, அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

விழா சிறப்புற நடந்தேற இறைவனை இறைஞ்சுகிறேன். தங்களுக்கு என் பணிவான வணக்கங்கள்.

மு. நீலகண்டன்,
நேர்முக உதவியாளர்,
தமிழ்நாடு பொதுப்பணித்துறை அமைச்சகம்.

• • •

கருணையன்பு மிக்க அறுமுகப் பெருமானன்ன ஆறுமுக சுவாமிகளின் அருட்டிருக் கரத்தால் கல்லாடை அணிந்து, அருளாட்சி பீடம் அமர்ந்து ஆன்ம நேயர்களின் அன்பைப் பருகி ஆண்டவன் அருளுடன் பொலிக. இது எனது அன்பின் சுருக்க உரையாகும். தவத்திரு சுந்தரம் அடிகளார் அவர்கட்கும் எனது அன்பைத் தெரிவிக்க வேண்டுவன்.

அ. வித்யானந்த கிரி சுவாமி,
வீரசுப்பைய சுவாமிகள் திருமடம், சென்னை-7

• • •

வணக்கம்பல. தங்கள் கல்வி நிலையத்தின் சார்பிலே ஓர் ஆண்டுமலர் வெளியிட இருப்பது கேட்டு மகிழ்ச்சி. கோவையின் கல்வி வரலாற்றிலே தவத்திரு சாந்தலிங்க அடிகளார் கல்லூரியின் சேவைக்கு ஒரு சிறந்த இடம் என்றும் உண்டு. தங்கள் கல்லூரியும், அதைச்சார்ந்த கல்வி நிலையங்களும், தழைத்தோங்கி வளர என் வாழ்த்துக்கள்.

கி. வேங்கட சுப்ரமணியன், எம். ஏ., பி. டி.
கல்வித்துறைத் துணை நெறியாளர்,
சென்னை.

• • •

இப்பெருநாள் நிகழ்ச்சி சிறப்பாக நடைபெறவும், தங்களின் அறப்பணி மேலும் மேலும் வளர்ந்தோங்கவும் நான் இறைவனை வழிபடுகின்றேன். தங்களின் அமைதி யான ஆக்கப்பணி–கல்விப்பணி-குறிப்பாக உடல் உழைப்புப்பணி-பலருக்கும் சிறந்த எடுத்துக்காட்டு.

டாக்டர் மு. அறம்,
செயலர்,
உலக சமாதானப்பணி, (ஆசியா) வாரணாசி

• • •

அன்பும் அருளும் அறிவும் பண்பும் நிரம்பிய தவத்திரு இராமசாமி அடிகளாரின் கல்லாடைப் பேற்றுத் திருமுழுக்கு விழா நன்கு நடைபெற இறைவன் திருவருள் புரிக. அவர்தம் தொண்டுகள் மேன்மேலும் சிறப்புறுவனவாக.

மு. வரதராசன்
தமிழ்ப் பேராசிரியர்–செனாய்நகர், சென்னை–30.

தங்கள் அன்பு கலந்த அழைப்பு வரப்பெற்று மகிழ்ந்தேன். தவத்திரு இராமசாமி அடிகளுக்குக் கல்லாடை வழங்கி, முடிசூட்டி, அருளாட்சி வழங்கும் விழா இனிது நிறைவேற எல்லாம்வல்ல இறைவனை வணங்கி வேண்டுகிறேன்.

கி ஆ. பெ. விசுவநாதம், திருச்சிராப்பள்ளி-8

ஃ ஃ ஃ

தவத்திரு இராமசாமி அடிகளார் அன்பு, அடக்கம், ஆள்வினையுடைமை, அறிவுடைமை, மனத்திண்மை முதலிய பண்புகள் நிரம்பப் பெற்றவர். தமிழ்இலக்கண இலக்கியப் புலமையும், தத்துவ ஞானமும் கைவரப் பெற்றவர். அவரது அரிய முயற்சியால் பேரூர்த் தமிழ்க் கல்லூரியும், பிறதமிழ்க் கல்லூரிகளும் சிறப்பிடம் பெற்றுள்ளன; தமிழ்க் கல்லூரிகளின் பேராசிரியர்கள் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்க்கலைக் குழுவிலும் (Board cf Studies) பல்கலைக் கழகத்தின் கல்வித்துறைக் குழுவிலும் (Academic Council) பல்கலைக்கழக ஆட்சிக்குழுவிலும் (Syndicate) இடம்பெற்றுள்ளனர். "எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார் திண்ணியராகப் பெறின்" என்ற திருக்குறளுக்கு அடிகளார் அவர்கள் தமது அரிய தமிழ்த் தொண்டால் சான்ருக அமைந்துள்ளார்.

இத்துணைப் பண்புகள் நிரம்பப்பெற்ற தவத்திரு இராமசாமி அடிகளார் பேரூர் மடாலயத்தின் தலைமைப்பதவியினைப் பெறுதற்குப் பல்லாற்ருனும் தகுதியுடையவராவர். அவர் முறையாகச் சிவபூசை செய்பவர். அவர் சிவபூசை செய்வதை யான் நேரில் கண்டு வியந்ததுண்டு. அண்மையில் பம்பாயில் தமிழகப் புலவர் குழு மாநாடு நடந்தபோது என்போன்ற புலவர்கள் சிவபூசையில் இருந்த அவரைவிட்டு விட்டுப் பம்பாய்ப் புகைவண்டி நிலையத்திற்குப் புறப்பட்டுச் சென்ருேம். இடையில் ரயிலில் ஒரு விபத்து நடந்தது. தண்டவாளம் கழற்றப்பட்டதால் இரயில் நின்றுவிட்டது. சிவபூசைக்காரரை விட்டுவிட்டு வந்த சுயநலக்காரர்களாகிய நாங்கள் எல்லோரும் மிகவும் கஷ்டப்பட்டு மற்ருெரு இரயிலில் ஏறி பம்பாய் சென்ட்ரல் நிலையத்திற்குச் சென்ருேம். சிவபூசையை முடித்துக்கொண்டு அடிகளார் திரு. நாராயணசாமிநாயுடு அவர்களுடன் பேருந்துவண்டி மூலம் எங்களுக்குமுன் அரைமணி நேரத்திற்கு முன்பாக சேரமான் பெருமான் நாயனர்போல பம்பாய் சென்ட்ரல் புகைவண்டி நிலையத்தை அடைந்தார்கள். அப்போதுதான் அடிகளாரின் சிவபூசையின் சிறப்பினைக்கண்டு வியந்தேன்.

சாந்தமே வடிவமாக உடைய தவத்திரு இராமசாமி அடிகளார் ஸ்ரீ சாந்தலிங்க சுவாமிகளின் திருமடத்தின் தலைவர் பதவியினைப் பெற்றுப் பல்லாண்டு வாழ்ந்து சிவநெறியைப் பரப்புதற்குப் பேரூர்ப் பெருமானுகிய ஸ்ரீ நடராஜப் பெருமானை யான் என் மனமொழி மெய்களான் இறைஞ்சுகிறேன்.

குறிப்பு :—ஸ்ரீ மாணிக்க வாசகர் முக்தியடைந்த திருநக்ஷத்திரமாகிய ஆனிமாதத்தில் அடிகளார் அருளாட்சி ஏற்றல் மிகவும் பொருத்தமாகும்.

பூ. ஆலாலசுந்தரம்
தமிழ்த்துறை, கிறித்துவக் கல்லூரி, சென்னை.

ஃ ஃ ஃ

தவத்திரு இராமசாமிஅடிகளார் அருளாட்சி ஏற்பு விழா 11—7—67ல் சிறப்பாக நடைபெற ஆண்டவனைப் பிரார்த்திக்கிறேன்.

கி. அரங்கசாமி முதலியார், பழநி.

௳

திருச்சிற்றம்பலம்

175 லாயிட்ஸ் நெடுஞ்சாலை,
சென்னை-14.

அருள்திரு சாந்தலிங்க சுவாமிகள் திருமடத்தின் அருளாட்சியைத் தவத்திரு இராமசாமி 11—7—67ல் தமது தலைவர் அருளாணையின் வண்ணம் ஏற்றுக்கொள்வதை முன்னிட்டு நிகழும் விழாபற்றிய அழைப்பு கிடைத்தது. பணிவார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இவ்விழா எல்லாச் சிறப்புடனும் இனிது நிறைவேறி விழுப் பயன் விளைக்க வேண்டும் என்று பிரார்த்திக்கிறேன்.

இவ்விழா நாள் மணிவாசகப் பெருமான் சிவஜோதியில் கலந்த ஒரு நாளாக அமைந்துள்ளது ஒரு பெரும் சிறப்பே.

World Vegitarian Conference என்னும் உலக ஸ்தாபனம் சுத்த உணவின் மேன்மையைப் பல நாடுகளில் பரப்பிவரும் பணியைச்செய்து வருவது. அது வரும் நவம்பர், டிசம்பர் மாதங்களில் நம் பாரத தேசத்திற்கு வந்து பல நகரங்களில் மாநாடுகள் நடத்த திட்டமிடப்பட்டுள்ளது. இஸ்ரேல், அரபு நாடுகளின் போர் மீண்டும் தொடங்காதிருந்தால் மேற்குறித்த உலக மாநாடு இந்தியாவில் நடைபெறுவது திண்ணம். அத்தடை ஒருகால் ஏற்படுமாயின் இந்தியாவில் பல மாகாணங்களில் இருந்தும் சுத்த உணவு சங்கப் பிரதிநிதிகள் பல நகரங்களில் கூட்டங்கள் நடத்துவர்.

இப்புனித நோக்கமுடைய பிறநாட்டு பெருமக்கட்கு அருள்திரு சாந்தலிங்க சுவாமிகள் அருளிச் செய்துள்ள கொலை மறுத்தலையும், பாம்பன் குமரகுருதாச சுவாமிகள் அருளிச் செய்த சிவயாதனு வியாசத்தையும்பற்றிய விவரங்களை ஆங்கிலத்தில் அறிவித்தல் பெரும் புண்ணியமாகும்.

பேரூர் பெருமானும் இவ்விருபெரும் ஆச்சாரியர்களும் இப்படி பல மொழிகளின் வாயிலாக இவர்களின் அரிய உபதேசங்களை உலகுக்குக் கிடைக்க திருவுளங்கொள்ள வேண்டும் என்றும் பிரார்த்திக்கிறேன். வணக்கம்.

ச. சச்சிதானந்தம் பிள்ளை.

ஃ ஃ ஃ

துறவறம் துலங்க, தூய்மை நலம் விளங்க, சைவமும் தமிழும் தழைத்தினிதோங்க, தவத்திரு இராமசாமியடிகள் துவராடை பூண்டு, திருமடத் தலைமை ஏற்று, பல்லாண்டு பல்லாண்டு சீலம் பேணி, ஞாலம் போற்றப் புனித வாழ்வு வாழ சிவமாய் விளங்கும் சாந்தலிங்க சுவாமிகள் திருவருள் புரிய வேண்டுமென்று பல்கால் நினைந்து வேண்டி வழுத்துகிறேன்.

சா. கணேசன், காரைக்குடி-1.

ஃ ஃ ஃ

விழுமிய விழாக் குறிப்புப் பெறும் பேறு பெற்றுள்ளேன்.
செந்தமிழும் சிவநெறியும் திருமடமும் சிறந்தோங்கி வாழ்க !

“ சான்றவருட் சாந்தலிங்கர் தந்த திருமடத்தின்
ஆன்றவருளாட்சி அரனருளால்—ஒன்று கொளும்
அன்பி ராமசாமி அடிகளார் பொன்னடிகள்
இன்புணர்த்தி வாழ்க இசைந்து.”

ப. இராமநாதன், திருவள்ளுவரகம், சென்னை.

உ
முருகன் துணை

'செந்தமிழும் சிவநெறியும் வளரத் திருப்பேரூரிற் சிவயோக நிலையில் அமர்ந்தருள் புரியும் சாந்தலிங்க சுவாமிகள் வழிமுறையில் விளங்கும் தவத்திரு ஆறுமுக சுவாமிகள் அவர்கள், பேரூர், தமிழ்க்கல்லூரியின் தலைவராகவும், பேரூர் சாந்தலிங்க சுவாமிகள் திருமடத்தின் இளவரசு எனவும் திகழும் தவத்திரு. இராமசாமி அடிகளார்க்குக் கல்லாடை வழங்கிப் பட்டாபிஷேகம் செய்து அவர்களைத் தமது திமருடத்தின் தலைவராக்கத் திருவுளம் பற்றியருளிய பெருந்தகைமையறிந்து மகிழ்ந்து அவர்கள் திருவடிகட்கு உளமார்ந்த வணக்கத்தினைத் தெரிவித்துக் கொள்கின்றேன். அவர்களது பெருங்கருணைத் திறத்தால் மடாலயத்தின் தலைவராக அருளாட்சியினை ஏற்றருளும் தவத்திரு. இராமசாமி அடிகளார் திருவடிகளுக்கு எனது உளமார்ந்த வணக்கத்தினைத் தெரிவித்துக் கொள்வதுடன் செந்தமிழ்ப் புலமையும் சிவநெறித் தொண்டும் மகவெனப் பல்லுயிரனைத்தையும் ஒக்கப்பார்க்கும் திருவருட் செல்வமும் நிரம்பிய அடிகளாரவர்கள் நாடு நலம் பெற மேற்கொண்டு செய்யும் திருப்பணிகள் யாவும் இனிது நிறைவேறி யாவர்க்கும் நற்பயன் அளிக்கும் வண்ணம் பேரூரர் பெருமானுகத் தில்லைச் சிற்றம்பலத்தில் ஆடல் புரிந்தருளும் அம்பலவாணன் அடிமலர்களை இறைஞ்சிப் போற்றுகின்றேன்.

அருளாட்சி விழாவைச் சிறப்புற நிகழ்த்தும் சத்வித்யா சன்மார்க்க சங்கத்தார்க்கு எனது நன்றியையும், பாராட்டினையும் தெரிவித்துக் கொள்கின்றேன்.

க. வெள்ளைவாரணன்
துணைப்பேராசிரியர், தமிழாராய்ச்சித்துறை,
அண்ணுமலைப் பல்கலைக்கழகம், அண்ணுமலைநகர்.

ஃ ஃ ஃ

தாங்கள் தங்கள் பெருநிலைக்கு ஏற்பக் கல்லாடை புனைந்து இளவரசுப் பட்டமும் பெறுவது அறிந்து பெருமகிழ்ச்சி அடைகின்றேன். தங்களுடைய தவவொழுக்கத்தால் திருப்பேரூர்ச் சாந்தலிங்க சுவாமிகள் திருமடம் பொலிவும் புகழும் பெற்றுத் திகழும் என்னும் நன்னம்பிக்கை உடையேன்.

இப்பெரிய பட்டத்தில் இருந்து ஆன்மாக்களுக்கு அருள்நெறி காட்டிச் சிறப்புறுக எனப் பொன்னம்பலவனது அருளை நினைந்து உருகுகிறேன்.

வித்துவான் செ. வேங்கடராமச் செட்டியார்,
விரிவுரையாளர், தமிழ் ஆராய்ச்சித் துறை,
அண்ணுமலைப் பல்கலைக்கழகம்.

ஃ ஃ ஃ

தாங்கள் பேரூர் சாந்தலிங்க சுவாமிகள் திருமடத்தின் அருளாட்சி பெறும் செய்தி அறிய மிக மகிழ்கின்றேன்.

தங்கள் அருளாட்சியில் முன்னிலும் அறச்செயல் ஓங்கவும், நாட்டில் தமிழ் மணமும் சிவமணமும் மிகக்கமழவும் செய்து பல்லாண்டு பல்லாண்டு தாங்கள் திகழ வேண்டுமென்று பேரூர் - ஆடல்வல்லானை நாளும் வழுத்துகின்றேன்.

திருமுறைக் கலைஞர்
வித்துவான் தி. பட்டுச்சாமி ஓதுவார்.

# சாந்தலிங்கர் தாண்மலர் வாழ்க

தாயான செந்தமிழ் தளர்ந்து சோர்ந்த
சமயத்தில் கல்லூரி தழைக்கச் செய்தீர்
வாய்மைநெறி தவருத காரா ளப்பேர்
மரபினிலே வந்துதித்தெம் அடிகளானீர்
மாயை வென்றீர் மயக்கறுத்தீர் வீரசைவ
மடத்துக்கே உரிமை உள்ள கர்த்தரானீர்
தூயசிந்தை அடிகளார் பெற்ற பேறு
துறவிகடாம் பெரும்பேருய்ச் சொல்ல லாமே.

உயர்நிலை, உயர் தொடக்கப்பள்ளி ஆசிரியர்கள்
கோவை—பேரூர், 11-7-67

* * *

சாந்தலிங்கர் தாண்மலர் வாழ்க

செஞ்சொற்புல வோர்கட்கினி தாய்வந்தரு ளாசான்
சேவைக்கொரு நாவுக்கர சேயென்றருளிர் வாசன்
அஞ்சாதெழு மதயானைக ளஞ்சும்படி யஞ்சின்
ஆட்டம்கெட ஒரு கோட்டியி லடக்கும் திறல் வல்லார்!
கஞ்சம் பொலி மலராமென வருகாவியில் மலரும்.
காயாசமொன் றுலின்றொரு காட்சிப் பெருமானுய்
எஞ்சும் புகழ் குருசாந்தலிங் கேசர் பதம்போற்றி
இன்றோர்அரு ளாசான்முடி யேற்றுனிவை கேண்மோ?

கவிஞர் காந்திதாசன்
ஆசிரியர் "பேச்சுமேடை"

* * *

சாந்தலிங்கர் தாண்மலர் வாழ்க

முந்தைமறை யெனும் வண்டு பண்கள் பாட
மூவாத ஞானமெனும் பசுந்தேன் மல்கச்
சந்தமுறு சிவகந்தம் பரந்து நாறத்
தக்கவிரு தயகமலம் கண்தி றப்பச்
சிந்தைகவர்ந் தெழுந்திட்ட சுடரே! ஞானச்
சிவமணியே! தவமணியே! குன்று அன்பாம்
மந்திரத்தை உணர்ந்திட்ட இராம சாமி
வள்ளலே! நின்னுட்சி பொலிந்து வாழி!

நன்னெறிக் கழகத்தார்
கோயமுத்தூர்.

அருளாட்சி ஏற்கும் அன்புசால் தலைவ!

சாந்தலிங்கர் திருமடத்தின் வரலாற்றில் ஒரு பொன்னாளாகிய இந் நன்னாளில் எங்கள் அன்புகனிந்த பாராட்டினையும், வாழ்த்தினையும், வணக்கத்தினையும் ஏற்றருள் வீராக, சாந்தலிங்கர் திருமடத்தின் நற்பணிகள் நாளும் வளர்ந்தோங்குக. தங்கள் அருளாட்சி சிறந்து விளங்குக என அருள்மிகு சாந்தலிங்கப் பெருமான் திருவடிகளை இறைஞ்சுகின்றோம்.

மாணவர் இலக்கிய மன்றம்

தவத்திரு. சாந்தலிங்க அடிகளார் உயர்நிலைப்பள்ளி.

* * *

தாங்கள் அருளாட்சி ஏற்கும் இந்நாள் தமிழகத்தின் பொன்னாளாகத் திகழும் நிலையில் அமையத் தனக்குவமையில்லாதான் தாள் பணிகின்றேன்.

M. SANKARALINGAM M A., M.L.C.,

Therakadputhoor, Thiruppathisaram (P.O.) Aramboly (Via)

* * *

அருளாட்சி ஏற்பு விழா அழைப்பு வந்தது. விழா சிறப்பதாக! தவத்திரு அடிகளார் அருளாட்சி அவனியில் மலர்ந்து நலம் பயப்பதாக! நன்மை சிறப்பதாக!

அ. மு. பரமசிவானந்தம்,

சென்னை-30.

• • •

அடிகளார் புலமைக் கருவூலம்; அடக்கத்தின் திருவுரு; ஆண்மைக்கு ஆகரம்; குணக்கடல். அவர்கள் ஏற்கும் அருளாட்சியால் திருமடம் சைவத்திருத்தொண்டும் தமிழ்ப் பற்றும் வளரக் கலங்கரை விளக்கமாய்க் கவின் பெற்றோங்கத் திருவருள் துணை நிற்க வேண்டுமென ஆண்டவன் திருவடிகளை மனமொழி மெய்களாற் சிந்தித்து வாழ்த்தி வந்திக்கின்றேன்.

மே. வீ. வேணுகோபால பிள்ளை

36, முத்தியாலு செட்டித் தெரு,

புரசைப்பாக்கம், சென்னை-7.

• • •

அம்மை அப்பனது பேர் அருளால் பல்லாண்டு அருளாட்சியினை இனிது நடத்த அவ்வம்மை அப்பனது பொன்னார் திருவடிகளை வந்தித்து வாழ்த்தி வணங்குகிறேன். விழாவும் பெருஞ் சிறப்புடன் நடக்கவும் அவ் விறைவனுடைய திருவடிகளைப் போற்றி வழிபடுகின்றேன்.

வித்துவான் பாலூர் கண்ணப்ப முதலியார், M.A.B.O.L.

தமிழ்த்துறைத் தலைவர், புதுக்கல்லூரி, சென்னை

சைவத்தின் அருள்விழிகள் இரண்டில் ஒன்ருய்ச்
சார்ந்திலங்கு புகழ்வீர சைவங் கண்ட
சைவநெறிப் பேராளன் சாந்த லிங்கன்
தண்ணருளாய் ஒளிவிளங்கும் பெருமை கொண்டே
சைவமெனும் உயர்நெறியை வளர்க்கும் பேரூர்
சண்முகத்தின் தமிழ்ப்பெயரைத் தாங்கும் மேன்மை
சைவகுலப் பேராளன் இராம சாமி
தனித்தலைவர் அருளாட்சி தாங்கக் கேட்டோம்

பேரருளின் வளங்காண்பான் ஏற்கும் ஆட்சி
பெருநெறியாம் சைவத்தை வளர்க்கும் மாட்சி
சேர நிதம் சிறந்தோங்க ! வாழ்க நாடு !
சிவஞான நெறிபெருக ! விழாவும் ஓங்க !
ஈரமுடை விழாக்காட்சி காண ஒண்ணேன்
எண்ணத்தால் காண்கின்றேன் வளர்க ஆட்சி !
தீரமுடன் பல்பணியும் சிறக்க வேண்டிச்
செந்தமிழால் வாழ்த்துகின்றேன் வாழ்க ! வாழ்க !

வித்துவான் இராம. சுப்ரமணியம்,
முதல்வர், மணலி தமிழ்க் கல்லூரி, சென்னை-1.

• • •

ஐயன்மீர்,

வழிபாட்டுக்குரிய தவத்திரு இராமசாமியடிகளாரின் அருளாட்சி, பொலிவும் பயனும் உடையதாய்ப் பொலிவதாக ! ஆட்சியேற்பு விழா அன்பரனைவர்க்கும் மகிழ்ச்சி தருவதாக.

நலமே விளைக.

அரசு நாராயணசாமி நாயுடு,
முதல்வர், ஜி. வேங்கடசாமி நாயுடு கல்லூரி,
கோவில்பட்டி, நெல்லை.

• • •

தங்களுக்கு சாந்தலிங்க சுவாமிகள் மடத்து மடாதிபதியாகப் பட்டாபிஷேகம் செய்து கல்லாடை வழங்கப்படுவது தெரிய மிக மகிழ்ச்சி. எங்கள் மனமார்ந்த வாழ்த்துக்களை ஏற்றுக்கொள்ளுங்கள்.

தாங்கள் இச்சீரிய பதவியை நெடுநாள் ஏற்றுச் சைவமும், தமிழும் ஓங்க நெடுநாள் உழைக்க இறைவன் திருவருள் பாலிப்பானாக.

தி. சு. அவிநாசிலிங்கஞ் செட்டியார்,
ஸ்ரீ இராமகிருஷ்ண மிஷன் வித்தியாலயம், கோயமுத்தூர்.

• • •

தவத்தீர், அருளாட்சி ஏற்பு விழா அழைப்பிதழ் வந்து சேர்ந்தது. விழா இனிதின் நிகழ்வுற இறையருள் முன்னுக.

தி.வே. கோபாலையர்,
முதல்வர், அரசர் கல்லூரி, திருவையாறு

தங்கள் அருளாட்சி ஏற்பு விழா அழைப்பிதழ் பெற்றுப் பெருமகிழ்ச்சி யடைகிறேன். சைவ ஆதீனங்களாகிய மடங்கள், சிறப்பாகத் தமிழ் மொழிக்கும் சைவ சமயத்திற்கும் அரும்பெரும் தொண்டுகளைச் செய்துள்ளன; செய்து வருகின்றன; செய்துகொண்டுவரும். தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தவச்சாலை எல்லா வகையிலும் நிறைவு பெற்றது. நற்றொண்டாற்றும் சீலமும், சிறப்பும் மிக்கது. பெரும் பணிகள் பல நடைபெற்று வருவதை நன்கு அறிவேன்.

வன்றொண்டரால் பாடல் பெற்ற திருத்தலத்தில் அருட்டிரு சாந்தலிங்க சுவாமிகளின் திருமடத்தில் பொற்புடை புண்ணியத்தின் அருளாட்சியை நல்லோரையில் ஏற்கின்றீர்கள்!

திருவருள், வல்லமை, வழிபாடு, மனோதிடம், தத்துவ ஞானம் பெற்றுத் திகழும் தாங்கள் அருளாட்சி ஏற்றுச் சிறப்பாக நற்றொண்டாற்ற இறையருளை இறைஞ்சுகின்றேன்!

வாழ்க அருளறம்! வளர்க நும் அருளாட்சி !!

Sri Ramakrishna Mission vidyalaya
Sri Ramakrishna Vidyalaya P.O.
Coimbatore Dt. S. India.

• • •

தாங்கள் அன்புடன் அனுப்பியருளிய தவத்திரு இராமசாமி அடிகளார் அருளாட்சி ஏற்பு விழா அழைப்பிதழ் வரப்பெற்று, யானும், கல்லூரிப் பேராசிரியர்களும், மாணவர்களும் மகிழ்ந்தோம். தவத்திரு அடிகளார் தமிழ் நாட்டிற்கும் சைவ சமயத்திற்கும் பல்லாண்டுகளாக நற்றொண்டாற்றி வந்திருப்பதைத் தமிழுலகம் நன்கறியும். அவர்கள் இப்பொழுது அருள்திரு சாந்தலிங்க சுவாமிகள் திருமடாலயத்தின் தலைவராக எழுந்தருளும் விழா, திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள் பேரருளால் இனிதே நிறைவேறுக.

தமிழ்ப் பெருப்புலவர்,
பேராசிரியர் சரவண ஆறுமுக முதலியார்.
ஸ்ரீ பழனியாண்டவர் இந்தியப் பண்பாட்டுக் கல்லூரி, பழநி.

• • •

தவத்திரு இராமசாமி அடிகளார் தம் அருளாட்சி ஏற்பு விழா அழைப்பிதழ் கிடைக்கப் பெற்று அக மகிழ்ந்தோம்.

தவத்திரு அடிகளார் தந்நல மற்றவர்கள், மன, மொழி, மெய்களால் வாய்மையாளர்கள். அகத்துறவும், புறத்துறவும் கொண்டு ஆன்றவிந்தடங்கிய சான்றோர்கள். அன்னார் திருமடத்தின் தலைவராய் அருளாட்சி ஏற்றல், ஏற்புடைத்தே. இனி சைவமும் தமிழும் தழைத்தினி தோங்கும்.

''உண்டாலம்ம'' எனும் புறத்துறைச் செய்யுளுக்கு எடுத்துக் காட்டாய் விளங்கும் நம் தவத்திரு அடிகளார் சாந்தலிங்க சுவாமிகள் திருமடத்தின் தலைவராய் அருளாட்சி ஏற்று, ஊழி பல்லூழி வாழ வேண்டுமென்று சுந்தரத் தமிழ்காத்த சொக்கநாதர் அங்கயற்கண்ணி தம் திருவடி மலர்களை என்றும் வேண்டுவோம்.

இரா. இளையநம்பி,
பொறுப்பாளர், பைந்தமிழ்க் கல்லூரி,
திண்டுக்கல்,

# பாராட்டுரைகள்

கோவை வழக்கறிஞர்

திரு. இரா. செங்கோட்டுவேலன் அவர்கள்

வரவேற்புரை

கும்பகோணம் பெரியபட்டம் சாரங்கபாணி தேசிக சுவாமிகள் அவர்களே! தொண்டை மண்டல ஆதீனகர்த்தர் அவர்களே! எங்கள் சிரவை ஆதீனகர்த்தர் தவத்திரு. சுந்தரம் அடிகள் அவர்களே! இன்று பட்டம் ஏற்கும் தவத்திரு இராமசாமி அடிகளார் அவர்களே! பெரியோர்களே! தாய்மார்களே! வணக்கம்.

இன்று நாமெல்லோரும் ஒரு சிறந்த காரியத்தை நிறைவேற்றக் கூடியிருக்கிருேம். நம்மிடையே கால் நூற்ருண்டுக் காலமாகச் சிவத்தொண்டுபுரிந்த நம் அடிகளார் அவர்களுக்கு இன்று பட்டமேற்பு விழா நடைபெறுகிறது. அதையொட்டிப் பாராட்டு நடத்த இருக்கிருேம்.

முடிசூடுதல், பட்டமேற்றல் என்ருலே அதற்குப் பின்னல் அரசோ அல்லது இராச்சியமோ ஏதோ ஒன்று இருக்கும். ஆனல் இதைச் சரியாகப்புரிந்து கொள்ளுவோமானல் இது மிகப் பெரிய பட்டம் என்பதும், இதற்குப்பின்னல் பெரிய சாம்ராஜ்யம் உள்ளதுஎன்பதும் விளங்கும். காலஞ்சென்ற தியாகராச சுவாமிகள் இதை ராம பக்தி சாம்ராச்சியம் என்று பாடிப் போனர்கள். அதேபோல் இன்று அடிகளார் பட்டமேற்க அருகதையுடையது சிவசக்தி சாம்ராஜ்யம் ஆகும். இது யாவருக்கும் கிடைக்கவொண்ணு ஒரு பெரிய சாம்ராச்சியம். அதற்கு அதிபராக நம் அடிகள் பட்டம் ஏற்பது நம் அனைவருக்கும் பெருமைதரும் காரியமாகும். அன்றியும் நம் அனைவரையும் உய்விக்கும் காரியமாகவும் அமைந்துள்ளது. நாம் அனைவரும் பக்திசெய்து வாழ்க்கையின் பயனை அடையநம் அடிகளார் வழி காட்டியாக அமைந்துள்ளார்கள்.

பெரியோர்களை நாம் வரவேற்பதன்மூலம் அவர்கள் எந்தவிதப் பலனையும் பெறுவதில்லை. நாம் தாம் அவர்களுடைய அருளினைப் பெற்றுப் பக்திக்கும், பெருமைக்கும் உரியவர்களாகிருேம். இந்த வகையில் இன்று இங்கு வந்திருக்கின்ற உங்கள் எல்லோரையும் வருக, வருக என்று வரவேற்கிறேன். வணக்கம்.

மயிலம் மடத்தின்

பொன்னுடையைப் போர்த்திய

திரு துரைசாமி அய்யர் அவர்கள் உரை:

அருள் வடிவமாக இங்கு எழுந்தருளியிருக்கும் சந்நிதானங்கள் அனைவருக்கும் இங்கு குழுமியுள்ள பெரியோர்கள் அனைவருக்கும் என்வணக்கத்தைக் கூறிக்கொண்டு சில செய்திகள் சொல்ல விழைகிறேன்.

பெரியோர்களே! இப்போது அடிகளார் அவர்களுக்குச் சாத்தப்பட்ட பொன்னுடை, மயிலம் மடம் பொம்மபுர ஆதீன கர்த்தர் தவத்திரு சிவஞான பாலைய சுவாமிகளுடையது. ஆதிகாலம் தொட்டு மயிலம் மடத்திற்கும், பேரூர் மடத்திற்கும் தொடர்பிருந்து வருவது உங்களுக்குத் தெரியும். தெரிந்ததை மீண்டும் ஞாபகப்படுத்துகிறேன்.

சாந்தலிங்க சுவாமிகளும், சிவப்பிரகாச சுவாமிகளும், பொம்மபுரம் வழியாகச் சென்று கொண்டிருந்தபோது, சாந்தலிங்க சுவாமிகள் சிவப்பிரகாசரிடம் சிவஞான பாலைய சுவாமிகளைப்பற்றிப் பாடும்படி கேட்க, அதற்கு அவர், 'நரனைப் பாடமாட்டேன்' என்று மறுத்துவிட்டார். இரவில் முருகப்பெருமான் சிவப்பிரகாசர் கனவில் தோன்றி சிவஞான பாலைய சுவாமிகளும் தாமும் ஒருவரே என்பதை உணர்த்தினர். அதன்பிறகு சிவப்பிரகாசர் சிவஞான பாலைய சுவாமிகள்மீது 'நெஞ்சுவிடுதூது' பாடினர். சின்னுட்களுக்குப் பின்னர் தம்முடைய தங்கையாகிய ஞானம்பிகையைச் சாந்தலிங்க சுவாமிகளுக்குத் திருமணம் செய்துகொடுத்தார். இவ்வாறு மயிலம் மடத்தின் பெரும்புலவராக விளங்கிய சிவப்பிரகாச சுவாமிகளுக்கும் இம்மடத்தின் ஆதிகுரவராகிய சாந்தலிங்க சுவாமிகளுக்கும் இருந்த தொடர்பு உங்களுக்குத் தெரிந்ததே!

மேலும் தொடர்புக்குரிய பல சான்றுகளும் பாடல்களும் உண்டு. அவற்றையெல்லாம் சொல்லக்காலம் போதவில்லை. இந்த அருளாட்சியில் அடிகள் அதிககாலம் வாழ்ந்திருந்து சைவ உலகத்திற்கும், தமிழுக்கும் சிறந்த சேவை செய்வார்களென்று நம்புகிறேன்.

தமிழ்க்கல்லூரிக் கழகத் தலைவர்,

கொடை வள்ளல்

திரு. நா. மகாலிங்கம் அவர்கள் உரை :

நமது இராமசாமியடிகள் அவர்கள் தலைமை யேற்றுச் சிறப்பிக்கும் இந்த நாள் ஒரு திருநாள் ஆகும். இந்தப் பட்டமேற்பின் மூலம் அவர்கள் கொங்குநாட்டிற்கு நல்லதொரு வழிகாட்டியாகத் திகழ்வார்கள் என நான் நம்புகிறேன். காலையி லிருந்து இதுவரை பெரும் திரளாகக்கூடிய இக் கூட்டத்திலிருந்து இந்தவிழாவை நாம் எவ்வாறு மதிக்கிறோம் என்பது தெளிவாக விளங்குகிறது மேலும் நம்முடைய அழைப்பினை ஏற்று இவ் விழாவைச் சிறப்பிக்கக் குன்றக்குடி அடிகளார் அவர்களும், காஞ்சிபுரம், கும்பகோணம், மயிலம் ஆகிய மடங்களின் குருமார்களும் இங்கு எழுந் தருளியுள்ளார்கள். இவர்கள் எல்லோரும் இங்கு வருகை தந்துள்ளது நம் எல்லோர்க்கும் பெருமையையும் மகிழ்ச்சியையும் அளிக் கின்றது.

கொங்குநாடு பற்றிய பல செய்திகள் இப் போது வெளியே தெரியாமல் இருந்து வருகிறது. கடையெழு வள்ளல்களின் பெருமைகளைப்பற்றி மேடையிலும், பிற இடங்களிலும் போற்றுபவர் கூட அவ்வள்ளல்கள் கொங்குநாட்டினரே என் பதைச் சொல்லுவதில்லை. கொங்கு நாடு வள் ளல்கள் வாழ்ந்தநாடு மட்டுமல்ல, பெரும்புலமை வாய்ந்த நாடுமாகும். நம் சாந்தலிங்கசுவாமிகள் பல நூல்கள் இயற்றியுள்ளனர். தமிழ் நாட்டின் சிறந்த காப்பியமாகத் திகழும் பெருங்கதை கொங்குவேளால் இயற்றப்பட்டதாகும். மேலும் தக்கை ராமாயணமும் கொங்குநாட்டில் தோன் றிய நூலாகும். இந்நூலைவெளியிட நம் ஈரோடு தெய்வசிகாமணிக் கவுண்டர் அவர்கள் முயன்று வருகிறார்கள். அவர்கள் அதை வெளியிட வேண்டுமென இந்த நாளில் கேட்டுக் கொள் கிறேன். மேலும் நம் சாந்தலிங்கர் தமிழ்க் கல்லூரியில் பயிலும் மாணவ, மாணவியர்கள் அனைவரும் கொங்குநாட்டின் பிரதிநிதிகளாக இந்நூல்களைப் பயின்று கொங்கு நாட்டின் சிறப் பைத் தமிழகத்திற்கு உணர்த்த வேண்டும் என் றும் இந்த நேரத்தில் கேட்டுக் கொள்கிறேன். இவ்வாறு தமிழ்நாட்டின் சிறந்த பகுதியாக இன் றும் கொங்கு நாடு திகழ்கிறது. இதனுடைய கலை, இலக்கியச் சிறப்பை மேலும் பரப்ப வேண்டியது சிறப்பான செயலாகும். அடிகள் அவர்கள் அதற்கு மிகவும் பொருத்தமானவர் கள். ஆழ்ந்த புலமையும், அனுபவமும் நிரம்பிய வர்கள். அவர்கள் கொங்கு நாட்டிற்கு நல்ல வழிகாட்டியாக விளங்க வேண்டுமென்றும் அவர் கள் செய்யும் செயல்களுக்குக் கொங்குநாட்டு மக்கள் எல்லோரும் தங்கள் ஒத்துழைப்பைத் தர வேண்டுமென்றும் இந்தச் சமயத்தில் கேட்டுக் கொள்கிறேன்.

முன்பு கோவையில் 'இண்டர்மீடியட்' என் னும் அரைப் பட்டப் படிப்பே இருந்தது. இன்று தொழில் கல்லூரிகளையும் சேர்த்து 15 கல்லூரி கள் உள்ளன. இவற்றிலுள்ள தமிழாசிரியர்களை யெல்லாம் ஒன்று கூட்டிப் பழைய சாத்திரங்களை யும், கல்வெட்டுக்களையும், பழம் சாத்திரம், இலக் கியங்களையும் ஆராய்ந்து நம் பெருமையை வெளியிடுவது சிறப்புடையதாகும். நம் அடிக ளார் பல ஆண்டுகளாகச் சிறப்பாகக் கல்வி நிலையங்கள் அமைத்துக் கொங்கு நாட்டிற்குச் சேவை செய்துவருகிறார்கள்.

நம்முடைய அடிகளார் அவர்கள் மடத்தி னுடைய தலைமையை ஏற்கும் இந்த விழா, நாம் எல்லோரும் மகிழ்ச்சியோடும், பெருமையோடும் கொண்டாடுதற்குரிய விழாவாகும். சமய வளர்ச் சிக்கு ஒரு சிறப்பான அறிகுயாகும். அந்தக் காலத்தில் குடும்பத்தில் வெறுப்பேற்பட்டால் சந்நியாசம் கொள்வது வழக்கமாக இருந்தது. ஆனால் இது அப்படியல்ல; உலக நன்மைக்காக சந்நியாசம் கொள்வது. நம்முடைய நாட்டில் 40 கோடி மக்கள் இந்துக்களாக உள்ளோம். ஆனால் அவர்களுக்குப் பணிபுரியும் துறவியர் எண்ணிக்கை மிகவும் குறைவு. விவேகானந்தர் 'நாட்டில் மக்களுக்கு உழைக்கும் துறவியர் அதிகம் வேண்டும்' என்றும் அத்தகைய துறவி கள் 50 பேர் கூடினால் உலகில் பெரும் புரட்சி யையே செய்துவிடலாம் என்றும் கூறியுள்ளார். எனவே இதுபோல் துறவு நிலையேற்கும் விழாக் கள் நம் சமுதாயத்தில் இன்னும் அதிகம் நடை பெற வேண்டும். கிறித்துவ சமயத்தில் அது போல் குருமார்களாகவும், கன்னிகளாகவும் மாறுவதற்குப் பெரும் விழாவாகவே கொண் டாடி அவர்களுடைய மடத்திற்கு அனுப்பி வைக்கின்றனர். இதுபோன்ற ஒரு நிலை இந்து சமயத்திலேயும் உருவாக வேண்டும். அப்போது தான் அடிகளார் பட்டம் ஏற்கிறார்கள் என்றால் அவருக்குப் பின்னால் செல்ல ஒரு பட்டாளம் தயாராக முடியும். இந்த நாளிலே இங்கு வருகை தந்திருந்து நம் சமயத்தின் பெருமையைச் சிறப் பித்த எல்லோருக்கும் வணக்கத்தைக் கூறிக் கொண்டு பட்டீசுரப் பெருமானின் திருவருளை வேண்டிக்கொண்டு விடைபெறுகிறேன். வணக்கம்.

செந்தமிழ்ச் செம்மல்

திரு. பூ. சா. கோ. கோவிந்தசாமி நாயுடு அவர்கள் உரை :

அடிகளார் அவர்களே! பெருமக்களே! இன்று நம்முடைய இராமசாமி அடிகள் அரு ளாட்சி யேற்கும் விழா சமய வளர்ச்சியின் சிறப் பான அறிகுறி என மகாலிங்கம் அவர்கள் சொன் னதை அப்படியே நான் ஒத்துக் கொள்ளு கிறேன். கோவை நன்னெறிக் கழகத்தின் தலை வன் என்ற முறையில் அடிகளாருக்கு நன்னெறிக்

கழகத்தின் பணிவார்ந்த வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழகத்தில் சைவத்திரு மடங்களே தமிழை வளர்த்துவருகின்றன. தமிழும் சைவமும் தழைத்தினிது ஓங்குக என்பதைக் குறிக்கோளாகக் கொண்டு இம்மடங்கள் தமிழ்க் கல்லூரிகளை நடத்துகின்றன. தருமபுர ஆதீனம் பல்வேறு நூல்களை வெளியிட்டுள்ளது என்றால் அது மிகையாகாது. அதுபோல இன்று அருளாட்சி யேற்கும் நம்முடைய அடிகள் தமிழ்ப் புலமை மிக்கவர், தமிழ்க் கல்லூரி அமைத்துச் சிறந்த சேவை புரிபவர். இவர்கள் தாம் ஏற்கும் அருளாட்சியின் மூலமாகக் கொங்குநாட்டின் பெருமையை உயரச் செய்வார்கள் என்று நம்புகிறேன். மேலும் கொங்குநாட்டின் வரலாற்றை வெளிக் கொணரவும், கொங்குநாட்டுப் பெருமக்களின் நூல்களை வெளியிடவும் பெரிதும் முயல்வார்கள் எனவும் எண்ணுகிறேன். அவர்கள் நெடுங்காலம் இவ்வருளாட்சியில் தங்கியிருந்து, இம் மடத்திற்கும் தமிழ்ப்பணிக்கும் ஆவனபுரிய இறையருள் அவர்களுக்குக் கிடைக்க வேண்டுமெனக் கேட்டுக் கொண்டு என் சிறு உரையை முடிக்கிறேன். வணக்கம்.

### அரசினர் கலைக்கல்லூரித் துணைத்தலைவர்

### திரு. கா. மீனாட்சி சுந்தரனார் உரை :

உலகிலே இருநெறிகள் உள்ளன. ஒன்றைப் பெரும்பாலோர் பின்பற்றுகின்றனர். ஒன்றைச் சிறுபான்மையோர் பின் பற்றுகின்றனர். இந்த இரண்டிலே ஒன்று மிக அருமையான நெறி பின் பற்றுவதற்கு அரிய நெறி; இளமைத் துடிப்பைக் கட்டுப்படுத்தி. நெறிப்படுத்தி, ஒழுங்கு படுத்திச் செல்லும் நெறி இருக்கிறதே, அது எளிதாக அமையாது.

நாடிநரம்புகளைக் கட்டுப்படுத்தி ஒழுங்கான வழியில் செலுத்துவது மிகவும் கடினமான நெறி அந்த நெறியில் செல்வதற்கு மிகுந்த பயிற்சியும், மனக்கட்டுப்பாடும் வேண்டும். இந்த நெறியில் செல்பவர்களைப் பற்றி வள்ளுவர், 'துறந்தார் பெருமை துணைக் கூறின் வையத்து இறந்தாரை எண்ணிக் கொண்டற்று' என்று கூறியுள்ளார். அந்நெறியைப் பின் பற்றிச் செல்லும் முறையில் நம்முடைய அடிகள் ஒரு வகுப்பிலிருந்து தேறி மற்றொரு வகுப்பிற்கு மாறுகிறார்கள்—என்றே சொல்லவேண்டும். அப்படிப்பட்ட இந்த நேரத்தில் அவர்களை வாழ்த்தவோ, அல்லது பாராட்டவோ நான் அருகதை உடையவனல்லன்; சில சொற்கள் கூறி என்னுடைய அன்பைத் தெரிவித்துக் கொள்ள விழைகிறேன்.

இந்த நெறியில் செல்பவர்களெல்லாம் இப்போது தமிழில் ஆழ்ந்த பயிற்சி யுடையவர்களாக அமைந்திருக்கிறார்கள். முன்பு இப்படி இல்லை என்று நான் சொல்லவில்லை; இடையில் சில காலம் இல்லாமல் இருந்தது. ஆனால் இப்போது பெரும் பாலும் தமிழில் பெரும்பயிற்சி யுடையவர்களே இந்நெறியில் செல்லுகின்றனர். அதன் பயனாக மொழியில் பல ஆக்கம் ஏற்பட்டுள்ளது. ஸ்ரீலஸ்ரீ போய் 'தவத்திரு' என்ற சொல் ஆட்சிக்கு வந்திருக்கிறது. அதுபோலப் பழமையான சொல்லாகிய அடிகள் என்பதும் மீண்டும் வழக்கிற்கு வந்துள்ளது. சமயப்பற்றே அற்று விடுமோ என்றிருந்த சூழலில் இப்படிப்பட்ட விழா நடைபெறுவது நமக்கு ஆறுதல் தருகிறது. நம்முடைய அடிகள் மொழிவன்மை யுடையவர்கள். இவர்கள் இன்று ஏற்கும் அருளாட்சி நம் எல்லோரையும் கவர்ந்ததற்குச் சான்றாக இங்கே பல தெய்விகப் பேரவைகளின் வாழ்த்துக்கள் படிக்கப் பெற்றன என்பதை நாம் அறிவோம்.

அடிகளைப் போன்றவர்கள் இந்த நெறியில் சென்று வாழ்க்கையின் உண்மைகளை அலசிப் பார்த்துக் கூறுகின்ற போது, நம்மை யறியாமலேயே அப்படிப்பட்ட விழாக்களில் நமக்கு ஓர் ஈர்ப்பு ஏற்படுகிறது. அவ்வாறு—செல்லும் அடிகளுக்கு என் அன்பையும், வணக்கத்தையும் தெரிவித்துக் கொண்டு இறைப் பற்றிலும், மான சீகத்திலும் மிக நம்பிக்கை யுடைய என் தந்தையார் முருகானந்த சுவாமிகளின் அன்பு வாழ்த்தையும் கூறி என்உரையை முற்று வித்துக் கொள்கிறேன். வணக்கம்.

### அரசினர் கலைக்கல்லூரி விரிவுரையாளர்

### திரு. ப. சு. மணியம் அவர்கள் உரை :

தவத்துறை செல்லற்கு அருளுருத்தாங்கு—கண்மணி குளிர்ப்ப—உளம் உவப்ப—உவக்க—விற்றிருக்கும் நெஞ்சம் கவர்ந்த அடிகள் அவர்களே! ஞான நாடக மாடி, ஞான நாடகம் ஆட்டுவிக்கக் காத்திருக்கும் ஞானக்குருமார்களே! என் மனதுக்கினிய செம்மனச் செல்வர்களே! செல்வியர்களே ! தெய்வ மணங்கமழும் தாய்மார்களே! வணக்கம்.

தெய்வ ஒண்டீந்தமிழின் இசையென நடுவிலே அடிகள் விற்றிருக்கிறார்கள். அவர்களை வாழ்த்த ஞான நாடகம் ஆட்டுவிக்கும் ஞானமா முனிவர்கள் விற்றிருக்கிறார்கள். அடுத்து அடிகளைப் பாராட்ட, அருளாளர் மகாலிங்க அய்யா உள்ளிட்ட நாங்கள் வந்து நிற்கிறோம். இந்த நல்ல நாளிலே இரு சொற்களைச் சொல்லி என் உரையை முடிக்கிறேன்.

அடிகள் அவர்கள் பல ஆண்டுகளுக்கு முன்னால் மயிலம் கல்லூரியிற் பயின்று ஆசிரிய நிலையில் இங்கு வருகிறபோது, இரண்டொரு முறை கலந்துபேசும் வாய்ப்புக்கிட்டியது. அப்போது அடிகளிடம் அருட்கலைக் கழகத்தின்

சார்பில் ஒரு தமிழ்க் கல்லூரி ஏற்படுத்தவேண்டு மென என் எண்ணத்தை வெளியிட்டேன். அடிகள் தம்முடைய தூயநெஞ்சால்—புரைபடா ஒழுக்கால் தலைவர்களோடு கூடித் தமிழ்க் கல்லூரி அமைத்தார்கள். எனவே அருளுருத் தாங்கி யமர்ந்திருக்கும் தவத்திரு அடிகள் அவர்களே! நான் அன்று சொன்ன சொல் நின்றது. ஆதலால் செய்தது கூறிப் பாராட்டினேன். இனி செய்வதுபற்றி ஒரு சொல் கூறி முடிக்கின்றேன்.

'அருட்செல்வம் செல்வத்துட் செல்வம்' என்பது தமிழ்மா மறை; 'நல்லாற்றன் நாடி அருளாள்க, பல்லாற்றுற் றேரினும் அஃதே துணை' என்பதும் தமிழ்மாமறை. இங்கு வந்திருக்கும் மக்கள் இனித் தாங்கள் செய்யவேண்டுவதுபற்றிப் பல கருத்துக்களை எடுத்துக் கூறினர்கள். நான் கூறிக்கொள்வது இதுதான். உலகில் மக்கள் சேர்ந்து செல்லுதற்குப் பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க நெறிவேண்டும். அதற்கு இலக்கணமோ, இலக்கியமோ, வேறு மரபு நூல்களோ துணை போகாது. சமய நூல் ஒன்றே துணைபோகும்.

அத்தகைய பொய்தீர்ந்த ஒழுக்க நெறியை மக்கள் தம் நினைவிலும் சொல்லிலும் செயலிலும் கொண்டுவாழச் சமயநெறியில் செல்லும் நீங்கள் எங்களை நல்வழிப்படுத்த வேண்டும். 'நிற்கும் நன்னிலை நிற்கப் பெற்றால் அருள் வர்க்கமின்றி மனிதரில்லை ஐயா' இன்னும் கோடி கோடி சமய மடங்கள் தோன்றினும், சொற்பொழிவுகள் நிகழினும் நமக்கு வேண்டியது நம்மைப் பொய்தீர் ஒழுக்க நெறிக்கு அழைத்துச் செல்லும் செயல் ஒன்றேயாகும். எனவே இந்த நெறியை ஊற்றமாகப் பிடித்து எங்களை அந்நெறிக்கு அழைத்துச் செல்லத் தமிழ்க்கல்லூரியின் சார்பிலே ஒரு சமய ஆராய்ச்சிக்கூடம் சமைக்க வேண்டும். இதுபற்றிக் கோவை கிழார் அவர்களோடு ஒருமுறை என்னிடம் தாங்கள் சொன்னது எனக்கு நினைவிருக்கிறது. அந்தக்கூடம் மகாலிங்க அய்யா முதலியவர்களை உள்ளிட்ட நிலையில் மக்கள்தம் அறிவு நிலையில்—அன்பு நிலையில்—அருள்நிலையில் — பொய்தீர் ஒழுக்க நெறியைக் கடைப்பிடிக்கும் வண்ணம் அமைய வேண்டும் என்பது என் ஆசை.

ஆகவே செல்வ அடிகள் அவர்களே! நாங்கள் பொன்னும் பொருளும் போகமும் பெற்று வாழ நீங்கள் அன்பும் அருளும் வளர்த்துப் பெத்தர்களாகிய நாங்கள் முத்தர்களாக மாறும் வண்ணம் பொய்தீர் ஒழுக்கநெறியை வளர்த்து இறைவனுடைய திருவடி நிழலிலே என்ஞான்றும் தேங்கித் திளைத்து வாழ வேண்டுமென இறைவனை வணங்கி விடை பெறுகிறேன். வணக்கம்.

வேளாண்மைக் கல்லூரி, தமிழ்ப் பேராசிரியர் திரு. பி. ஆர். மீனுட்சிசுந்தரனுர் உரை:

பெருமக்களே! தாய்மார்களே! இன்று நடைபெறும் இந்தப் பெரிய நிகழ்ச்சியிலே பாராட்டிப் பேசுவதற்கு என்னை அழைத்தது வியப்பாக உள்ளது. இன்று அடிகள் தொழத் தக்க நிலையில் விளங்குகிருர்கள். எனவே அவர்களைப் பாராட்டிப் பேசுவது நமக்குப் பொருந்தாது. மெய்கண்டார் கூற்றுப்படி அவர்கள் திருமேனி உருவப் பொலிவு அரனெனத் தொழத் தக்க நிலையில் அமைந்துள்ளது. அவர்கள் இன்று நம் அனைவராலும் வணங்கும் மூர்த்தியாக, அத்தகைய திருமேனியராக விளங்குகிருர்கள். இதை நாடும், சைவ உலகமும், சைவ சமயப் பெருமக்களும், அவர்கள் வழியாக உலகமும் ஏற்றுக் கொள்கிறது.

ஆகவே மாணிக்கவாசகர் சொன்னது போல, 'சிவமாக்கி எனையாண்ட' என்ற நிலையும் இதுவே என நான் கருதுகின்றேன். அத்தகைய பெருநிலையில் தமிழகத்தின் திருமடங்கள் இயங்கி வருகின்றன. நம் அடிகளும் மக்களை அத்தகைய சிவமாக்கி ஆளும் வகையில் இன்று அமைந்துள்ளார்கள்; அவர்களை வணங்கி வழிபட வேண்டியது நம் கடமை என்பதை இங்கு நான் சொல்லிக் கொள்கிறேன்.

பெரியோர்களே! எனக்கும் அடிகளுக்கும் ஆறு ஆண்டுகளாகத் தொடர்பிருந்து வருகிறது. அவர்கள் அருள்நெறியிற் செல்லக் கூடியவர்கள். நான் பல்வேறு நெறிகளில் செல்லக் கூடியவன். என்றாலும் மக்கள் மாட்டு இரக்கங்கொண்டு மெய்ந்நெறியைப் பரப்ப அடிகள் தம்மையே அர்ப்பணித்துக் கொண்டவர்கள். அத்தகைய அருளீர்ப்பால்தான் நான் அவர்களிடம் தொடர்பு கொண்டுள்ளேன். மக்களை நன்னெறியில் செலுத்துவிக்கும் ஆற்றல் அடிகளிடம் உண்டு. தமிழகத்தின் எல்லா நிகழ்ச்சிகளிலும் கலந்து கொண்டு அடிகள் அவ்வாற்றலைச் செயல்படுத்துவதை நாம் அறிவோம். இங்கு நம் மகாலிங்கம் போன்றவர்கள் அடிகள் செய்ய வேண்டிய பல காரியங்களை எடுத்துச் சொன்னுர்கள். அவர்கள் சொன்னவைகளெல்லாம் இதற்கு முன்பே அடிகள் பல இடங்களில் கூறி வந்தவைகளே: எனவே வருங்காலத்தில் கொங்குநாட்டிற்கு மட்டுமின்றித் தமிழகத்திற்கும் தனிப் பெருமையாகத் தமிழும் சைவமும் தழைத்தினி தோங்க அடிகள் பல செம்மையான காரியங்களை ஆற்றுவார்கள் என நம்புகிறேன். அவர்களது அருட்பணிக்கும் பொதுமக்களாகிய நாம் நம்முடைய ஒத்துழைப்பை நல்க வேண்டுமென்றும் கேட்டுக் கொள்கிறேன். அடிகள் அவர்கள் அருள் வெளிப்பாடாக இன்று ஏற்கும் இவ்வருளாட்சியில் நீண்டநாட்கள் வீற்றிருந்து வாழ எல்லாம் வல்ல இறைவனை வேண்டி வணங்குகிறேன்.

## தமிழ்க்கல்லூரிக் கழகச் செயலர்

## திரு. கு. வேங்கடாசலம் அவர்கள் உரை

தாய்மார்களே! அன்பர்களே!

திரு. மகாலிங்கம் அவர்கள் 'விவேகானந்தர் 50 வாலிபர்கள் இருந்தால்போதும்; இந்த உலகத்தையே மாற்றி விடுவேன்' என்று கூறியதைப்பற்றிச் சொன்னார்கள்! எத்தகைய வாலிபர்கள்? இதுபோல் வாழ்க்கையையே உதறித் தள்ளிவிட்டு, உலகத்திற்கு நான் என்று முன்வரும் வாலிபர்கள். அந்த ரீதியில் அடிகளார் இன்று ஒரு கட்டத்திலிருந்து இன்னொரு கட்டத்திற்குக் காலெடுத்து வைக்கிறார்கள். பேராசிரியரவர்கள் சொன்னார்கள்; ஒரு வகுப்பிலிருந்து அடுத்த வகுப்பிற்கு மாறுகிறார்கள் என்று. ஆம்! உண்மைதான். அடிகள் இன்று சாதாரண நிலையிருந்து தலைவராக ஆகி யிருக்கின்றார்கள்.

அடிகள் காவியுடை அணிவதன் மூலம் என்னைப் போன்றவர்களுக்குப் பெரிய பொறுப்பு—தூக்க முடியாத பொறுப்பு ஏற்பட்டுவிடுமோ என்று பயமாக இருக்கிறது. பயப்படக் கூடாது தான். சமயத்திற்கும் பயத்திற்கும் வெகுதூரம். பயமின்மையே சமயம். என்றாலும் சிறிது நடுக்கம் ஏற்படுகிறது. ஏனென்றால் காவியுடை அணிவது எவ்வளவு பெரிய பொறுப்பு வாய்ந்தது என்பதை நாம் சிந்தனை செய்யவேண்டும். அடிகளார் இந்தப் பத்துப் பன்னிரண்டு ஆண்டுகளாக மக்களோடு வாழ்ந்து, மக்களை அறிந்து, துன்பங்களை ஏற்றுத் தம்முடைய ஆத்மவாழ்வை ஈடேற்றி, இன்று நாமெல்லோரும் காணும்வகையில் ஒரு படியிலிருந்து மேல்படிக்கு மாறுகின்றார்கள். இத்தகைய நாளைப்பற்றி நாமெல்லாம் நன்கு சிந்திக்க வேண்டும்.

உடம்பைப் பாதுகாக்கிறது மிருகம். உடம்பைப் பாதுகாத்து மனதைப் பண்படுத்துவது மனிதனுடைய கடமை. உடம்பைப் பாதுகாத்து மனதைப் பண்படுத்தி ஆத்மாவை ஒளியுடையதாக்குதற்குரிய நாளாகும் இந்த நாள். இந்த மூன்றையும் சேர்த்து நாம் நல்வழியில் செல்வதற்கான சிந்தனையைத் தூண்டும் நாளே இந் நன்னாள். அத்தகைய எண்ணத்தை இது நம்மிடம் எவ்வாறு தூண்டியுள்ளது என்பதை அறிவிப்பதே இங்கு கூடியுள்ள கூட்டத்தின் எண்ணிக்கை.

ஒவ்வொரு குடும்பத்திலும், 'ஒரு மகனை நான் உலகத்திற்காகப் பெற்று அளித்துவிட்டேன்' என்று கூறுகிறபோதுதான் அடிகளாரைப் போன்றவர்கள் செய்யும் தொண்டு உலகிற்குப் பயனுள்ளதாக அமையும்; அல்லாமல் தனியார் ஒருவர் சென்று குகையில் தவஞ் செய்து, அதனால் பெருமை சேர்க்க இயலாது. மகாத்மா, 'மக்களுடன் வாழ்ந்திருந்து அவர்களுடைய துன்பங்களை அனுபவித்து, அத்துன்பத்திலே ஒரு இன்பம் காணவே விரும்புகிறேன்' என்று சொன்னார்.

அவ்வாறு உலகத்தோடு வாழ்ந்து உலகப் பற்றின்றி இறைவனையே நினைத்துவாழும் வாழ்க்கையே சிறப்புடையது. இராமகிருட்டிண பரமஹம்சரும்கூடச் சொல்லவில்லையா? குழந்தை திண்ணைக்காலைப் பிடித்துக்கொண்டு கீழே விழாமல் சுற்றி விளையாடுவதுபோல, ஆண்டவனாகிய திண்ணைக் காலைப் பிடித்துக்கொண்டு, உலகப்பற்றில் விழுந்து விடாமல் வாழவேண்டும். அத்தகைய அருள்விளையாட்டை மேற்கொள்ளும்வகையில் முயற்சியை மேற்கொள்ளச் சிந்தனையைத் தூண்டும் வகையில்—நம்மெல்லோருக்கும் இந்த நல்ல நாள் அமைந்திருக்கிறது. இத்தகைய நாளிலே ஆசி கூறவும், அன்பை வெளிப்படுத்தவும், சைவக் குருமார்களும், பெரியோர்களும், தாய்மார்களும் ஆயிரக்கணக்கானவர்கள் இங்கு வந்துள்ளார்கள். அனைவர் சார்பாகவும் இவ்வருளாட்சி இனிது நிறைவேற வேண்டிக்கொண்டு விடைபெறுகின்றேன். வணக்கம்.

## திருவண்ணாமலை, குன்றக்குடி ஆதீன கர்த்தர்

## தவத்திரு குன்றக்குடி அடிகளார்

## அவர்கள் உரை

நம்முடைய அன்புக்கும், மதிப்புக்கும் உரிய இராமசாமி அடிகளார் அவர்கள் இம்மடத்தின் ஆட்சிப் பொறுப்பை இன்று ஏற்றுக்கொள்ளுகிறார்கள். என்னைப் பொறுத்தவரை இப் பொறுப்பை அவர்கள் என்றோ ஏற்றுக்கொண்டார்கள் என்றே சொல்லவேண்டும். அதற்குரிய சடங்காக இன்று இவ்விழா நடைபெறுகிறது. 1952-இல் அடிகளாரின் உறவும் நட்பும் கிடைத்தது. நண்பர் மகாலிங்கம் அவர்கள் சொன்னது போல எண்ணிய கருத்துக்களை ஏற்றவண்ணம் முடிக்க அடிகள் துணைநின்றார்கள். ஒருவேளை வரலாற்றிலே இந்நிகழ்ச்சிகளெல்லாம் இன்று குறிப்பிடப்பிடாமற் போனாலும், நீண்டு நிலைத்த சான்றாக இவர்களுடைய சாதனைகள் அமையும் என்பதை நாம் மறக்க முடியாது.

இவர்களாற்றிய சாதனைகளில் முதலாவது இவர்கள் நல்ல மரபிலே நல்ல சூழலிலே இந்த மடத்தின் ஆட்சிப் பொறுப்பை ஏற்கிறார்கள். இந்த மாதிரி திருமடங்களையும், பெரிய மடங்களோடு சேர்த்து ஒன்றாக்கி, எல்லா மடங்களும் சேர்ந்த பேரமைப்பாகத் தெய்விகப் பேரவை அமைந்துள்ளது. அந்தத் திருவமைப்பில் இயற்கையாகவே உணர்வுடையவர்களுக்கு நாளும் பொருந்தும் என்பார்கள். நாளை எதிர் பார்த்துக்கொண்டிருப்பதைவிட நாள் வந்து பொருந்துவது சிறப்பு. உதகையிலே பேரவைக் கூட்டத்திற்கு வந்திருந்தபோது இந்நிகழ்ச்சியைக் கூறி என் வசதிக்கேற்ப நாள் கேட்டார்

கள். நான் என் வழிபடு கடவுளாய மாணிக்க வாசகரின் ஆனி மகநாளைச் சொன்னேன். அதுவே சாந்தலிங்கரின் நாளாகவும் விளங்கு வதை அறிந்து மகிழ்ந்தேன். இந்த நாளில் அவர் களுக்கு நான் எடுத்துரைப்பதோ, இன்னது செய்க எனச் சொல்லுதலோ ஒன்றுமில்லை; அது என்னுடைய பொறுப்புமல்ல; ஏற்கனவே இவற்றையெல்லாம் அவர்கள் உணர்ந்தவர்கள். அவர்கள் என்ன உணர்ந்திருக்கிறார்கள் என்பது எனக்கும், நான் என்ன உணர்ந்திருக்கிறேன் என்பது அவர்களுக்கும் தெரியும். அவர் களுடைய பெரிய சாதனையின் பயனாகத் தமிழக மடங்கள் எல்லாம் ஒன்றுகூடி, பல அறைகளை யுடைய மாளிகையாக விளங்குகிறது.

அவற்றின் செயல் முறைகளைப்பற்றி மூன் றாண்டுகளாக நான் இவர்களிடம் கூறி வந் தேன். ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு துறை யில் ஆர்வமும் விருப்பமும் இருக்கிறது. எனவே ஒன்றுபட்ட மடங்கள் தங்களுக்குள் பணிகளைப் பகுத்துக்கொண்டு செயல்பட்டால் அது சிறப் பாக இருக்கும். எந்த மடத்தின் நிர்வாகமாக இருந்தாலும் சரி அதை ஒரு மடமே எடுத்துக் கொள்வது; அதேபோல ஒரு மடம் சொற் பொழிவுத் துறையை எடுத்துக்கொள்வது— என்று வேலைகள் பகுத்துக் கொள்ளப்படுமானால் சிறப்பாக இயங்க முடியும். அல்லாமல் எல்லா வற்றையும் ஒருவரே செய்வது என்பது கடினமே யாகும். கடந்த மூன்றாண்டுகளாக நான் இவர்க ளிடம் குன்றக்குடி மடத்தின் நிர்வாகப் பொறுப்பை நீங்களே ஏற்றுக்கொள்ளுங்கள்; நான் சொற்பொழிவு செய்பவனாகமட்டும் இருக் கிறேன் என்று கூறினேன். ஆனால் அதை இவர்கள் இதுவரை தட்டிக் கழித்துவிட்டார்கள். திரு. வேங்கடாசலம் அவர்கள் சொன்னது போல, இனி வெளியே செல்ல வேண்டிய வேலை கள் இவர்களுக்குக் குறையுமாதலால், அத்த கைய நிர்வாகப் பொறுப்பை ஏற்றுக்கொள்ள முடியும் என்றே எண்ணுகிறேன்

19-ஆம் நூற்றாண்டில் திருமடங்கள் சந்திப் பதே அரிதாக இருந்தது. ஆனால் இந்த நூற் றாண்டில் அப்படியல்ல; திருமடங்களுக்குள் நெருங்கிய சந்திப்பு ஏற்பட்டுள்ளது. இந்த மடத் திற்கும் என் மடத்திற்கும் ஏற்பட்டுள்ள அன்னி யோன்னியமான நட்பினாலே-உறவினாலே-உண் டாகின்ற மிகப் பெரிய சாதனைகள் இந்தத் தலை முறையில் சைவ உலகத்திற்கு மட்டுமன்றித் தமி ழுலகிற்கும் பேருதவியாக இருக்குமென நம்பு கிறேன். நமக்கு முன்இருந்த காலம் சமய உல கைப் பொறுத்தவரையில் மிகச் சிக்கலான கால மேயாகும். ஆர அமர ஆராய்ந்துபார்த்தால் இன்னும் கடுமையான உழைப்பும், நமக்கேகூட அதிகமான ஆன்மப்பயிற்சியும், தவ வலிமையும் தேவை என்பது தோன்றுகிறது. அதையெல் லாம் உணர்ந்து நாம்செயலில் இறங்கவேண்டும். இந்தத் திருமடத்திற்கு இவர்கள் பொறுப்பேற் றிருப்பது மகிழ்ச்சிக்குரியது மட்டுமல்ல; வரவேற் பதற்குமுரியது. கொங்குநாட்டிற்கு மட்டுமின்றித் தமிழுலகத்திற்கும் சிறப்பைத் தரக்கூடிய ஒரு நிகழ்ச்சியாகும்.

அவர்களிடம் ஒரேஒரு செய்தியைச் சொல் லவே நான் கூடுவது வழக்கம். நீங்கள் எடுத் துக்கொள்ளும் காரியங்களுக்கு உங்களது சொந்த நெஞ்சம்போல் துணைபுரிவோம். அதே வகையில் முழு ஒத்துழைப்பையும் தருவோம் என்று உறுதி கூறிக் கொள்ளுகின்றோம். இப்படிப்பட்ட காரியங்களுக்கு நம்முடைய ஒத் துழைப்பு என்ன என்பதையே நாம் கூறவேண் டும். குன்றக்குடி மடத்திற்கும், இந்த மடத்திற் கும் தொடர்புகள் உள்ளன. அவற்றில் வேறு பாடுகள் இல்லை. அவ்வாறு சில வேறுபடுகள் இருந்தால் அது காலத்திற்கு ஏற்பக் காரிய ஆக் கம் பற்றிய மாறுதல்களாகவே இருக்கும். இவர் களது அருளாட்சியின்மூலம் இருமடத்தின் தொடர்புகளும் மேலும் வலுப்படும் நீடு நின்று நிலவும் என்று எண்ணுகிறேன்.

நான் வள்ளல் பாரியிடம் ஒரு தனிப்பட்ட பற்றுடையவன். பாரியின் முன்னோர்கள் கூடக் கொங்குநாட்டிலிருந்துதான் எங்கள் பறம்பு நாட் டிற்கு வந்தனர் என்றுநான் அண்மையில் ஆய்ந் தறிந்தேன். எனவே அன்றைக்கே எங்கள் வள்ளன்மைக்குக் காரணமாகக் கொங்குநாடு இருந்திருக்கிறது என்பதை நினைத்துப் பெருமை யும் மகிழ்ச்சியும் அடைகின்றேன். மீண்டும் அதே வள்ளன்மை இப்பட்டத்தின்மூலம் மேலும் வளரும் என்று எண்ணுகிறேன். கொங்குநாட் டையும், பக்கத்திலுள்ள பாண்டிய நாட்டையும் தமிழ்-இனம்; தமிழ்-உலகம்-இவற்றின் வளர்ச் சிக்காக இளங்கோவடிகள் ஒன்றுபடுத்தப் பெரி தும் முயன்றே கண்ணகியை அடிப்படையாக வைத்துச் சிலப்பதிகாரம் தீட்டினார். கொங்கு நாட்டு வரலாற்றைத் தனியாக எழுதமுடியாது; சோழ பாண்டியநாட்டு வரலாறுகளை இணைத்தே எழுதவேண்டும். இவ்வாறு பழங்காலத்திலேயே தமிழகம் இணைந்துகிடந்தது. அத்தகை இனிய சூழலை மேலும் இந்த அருளாட்சியேற்பின் வாயிலாக இவர்கள் உருவாக்குவார்கள் என்று கருதுகிறேன்.

இளையான் குடிமாற நாயனார் புராணத்தில் சேக்கிழார் சுவாமிகள் 'சோறிட்டுச் சோறுபெற் றார்' என்று குறிப்பிட்டுள்ளார்கள். சோறு என் றால் உணவு, திருவடிப்பேறு என்று இருபொருள் உண்டு. உடலுக்கு உணவு சோறு; அதுபோல உயிருக்கு உணவு திருவடிப்பேறு. இந்த இரண்டுவிதச் சோறுகளைத் தமிழகத் திருமடங் கள் மக்களுக்கு நல்கி வருகின்றன. அத்தகைய சிறப்பை இவர்களுடைய அருளாட்சியின்மூலம் உலகம் மேலும் பெறவேண்டும்—என்று கூறிக் கொண்டு தமிழும், அதோடு கூடியுறையும் திரு வருள்போலவும் இவர்களது அருளாட்சி நிலவ வேண்டுமென வேண்டிக் கொள்கிறேன்.

வீரசைவர்கள் என்போர் இறைவனை விடாமல் தம்முடனேயே உடன்வைத்துள்ளவர்கள். இலிங்க தாரணம் செய்துகொண்டவர்கள் இலிங்கம் உண்ணாமல் தாம் உண்ணமாட்டார்கள். ஒரு காலத்தில் சைவசித்தாந்த மடங்கள் தூய தமிழ்மரபில் இருந்தன. பின் மாறிப்போயின. ஆனால் வீரசைவ மடங்கள் என்றும் தம் மரபிலிருந்து பிறழவேயில்லை; எனவே அண்மைக்காலமாக நான் அவர்களால் கொண்டாடப்பெறும் பசவேசர் முதலியவர்களுடைய விழாக்கள் போன்றவற்றில் வலியச்சென்று கலந்துகொள்கிறேன். ஆக வீரசைவமடங்கள் சாதி முதலிய குறைகளை ஒழித்து இயங்குகின்றன. இறைவனுடைய நிறையை உணரும்போது நம் குறைகளையும் உணர்ந்து ஒதுக்கல் வேண்டும். அதுதான் உண்மை. எனவேதான் ஒப்புநோக்கும் முறையில் மணிவாசகர், 'ஆயநான் மறையவனும் நீயேயாதல் அறிந்துயான் யாவரினும் கடையனேன் ஆதலையும் நோக்கிக்கண்டு' என்று பாடினார். ஒப்புநோக்குவது இழிவுபடுத்துவதற்கு அல்ல; இழிந்தநிலையில் இருப்பதை ஏற்றிச் செல்வதற்காக என்று ஆன்றோர்கள் கூறுவார்கள். அத்தகைய உயர்ந்த நிலையில்தான் இன்று இவர்கள் அருளாட்சி ஏற்றார்கள். பெரும்பேருக நம் சுந்தரம் அடிகள் அவர்களுக்கு வலக்கையாக விளங்குகிறார்கள். தூரத்தில் இருப்பதால் நான் வலக்கையோ இடக்கையோ, என்பது எனக்குத் தெரியவில்லை என்றாலும் தோழமையைப் பெற்றுள்ளோம். மேலும் நண்பர் மகாலிங்கம் அவர்கள் சொன்னதுபோலத் தம் பின்னே செல்லும் தகுதியுடைய படையையும் இவர்கள் பெற்றிருக்கிறார்கள்; அப்படை இன்னும் பெருகும் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

இப்படித் தமிழகத்தின் திருமடங்கள் இணையும்போது ஏற்படும் ஒரு வழக்கையும் இங்கு நினைவுபடுத்த விரும்புகிறேன். அஃதாவது சைவசமய மரபுப்படி, அருளாட்சி யேற்பவர்களின் பெயரோடு தங்கள் மடத்தின் ஆதிகுரு முதல்வரின் பெயரினையும் இணைத்துச் சொல்வது மரபு. அஃதாவது ஆதிகுரவரின் திருமேனி இன்று இந்தத் திருமேனி உருவில் பிறந்திருக்கிறது என்பது அதன் பொருள். அதுபோல இன்று இம்மடத்தின் குருமுதல்வரின் பெயரோடு இணைத்து இனி இவர்கள் பெயர் 'சாந்தலிங்க இராமசாமியடிகள்' என்றே வழப்பெறும். சாந்தம் என்பது இவர்களுக்கு இயற்கையாகவே பொருந்தியுள்ளது. சில இடங்களில் நானும் இவர்களும் கலந்துகொண்ட நிகழ்ச்சிகளில் என்னை ஒரு தந்தை போல எடுத்தும் நிறுத்தியும் வழிநடத்திச் சென்றிருக்கின்றார்கள். அதற்கு இவர்களது ஆழ்ந்த அமைதியும் பயிற்சியுமே காரணம், எனவே, இன்றிலிருந்து இவர்கள் 'சாந்தலிங்க இராமசாமியடிகள்' என்று வழங்கப் பெறுவார்கள். அதன் மூலம் நம் சாந்தலிங்க அடிகளாரே இன்று இந் தத்திருமேனியில் எழுந்தருளிவந்துள்ளதாக நாம் எண்ணி வணங்குதற்குரியவர்களாகின்றோம்.

இன்று சாந்தலிங்கரின் 'கொலை மறுத்தல்' (உரை நடை) என்ற நூலையும் வெளியிடுவது இதற்கு மிகவும் சிறப்புத் தருகிறது. கொல்லாமை சைவ சமயத்தின் கொள்கை மட்டுமல்ல; சைவத்திற்கு உயிர் நாடி. அன்புநாடி. சைவத்திலே வீடுபேற்றுக்கும் ஓரறிவு உயிர் என்ற வேற்றுமையில்லை. எனவே கொல்லாமை என்பது சைவ சமயத்தின் ஒழுக்கமுமாகும். இன்றைய உலகின் சூழல் மிகவும் கெட்டிருக்கிறது. எனவே இந்தச் சமயத்தில் இந்நூலை வெளியிடுவது மிகவும் சிறப்பு. கொலை மறுத்தல் எல்லா உயிர்களும் இறைவனுடைய அன்புக்குப் பாத்திரமானவைகள் என்பதைச் சொல்லுகிறது. நச்சுப்பாம்புகூடத் தன்னைப் பாதுகாத்துக்கொள்ளவே கடிக்கிறது; நஞ்சும் மருந்தாகப் பயன்படுகிறது என்பதன்மூலம் இறைவன் படைப்புக்கள் யாவும் உயர்ந்தவையே என்றும், புலால் உண்பதால் தீமையில்லை என்னும் பிறசமயங்களை மறுத்தும் பல உண்மைகளை சாந்தலிங்கர் இந்நூலில் நிலை நாட்டியுள்ளார். கொலை மறுத்தல் இன்று, மிக அவசியமான ஒழுக்கம். மனிதரையே மனிதர்கொன்று கொள்ளும் இந் நாளில் இவ்வருளாட்சி யின்போது இந்நூலை வெளியிடுவதால் இங்கிருந்து உலக சமாதானம் தோற்றுவிக்கப்படுகிறது என்று நான் தெரிவித்துக்கொண்டு, உலகம் நீடுநெறி வாழ்க என இந்நூலை வெளியிட்டுவிடைபெறுகிறேன்.

### தொண்டைமண்டல ஆதீனகர்த்தர்

### தவத்திரு ஞானப்பிரகாச சுவாமிகள்

பெரியோர்களே! கொங்குநாடு எல்லாவளங்களும் பொங்கு நாடு. இந்நாட்டின்கண் நீடுநிலை பெறும்வண்ணம் சாந்தலிங்கர் நான்குநூல்களைப் பாடியுள்ளார். அதிலே ஒன்றுதான் இவ்விழாவில் வெயிடப்பெற்ற கொலைமறுத்தல். நம் அடிகள் அருளாட்சி ஏற்கும் இவ்விழா. நம்மெல்லோருடைய உள்ளத்திலும் பேரின்பத்தை உண்டாக்கியிருக்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. இத்தகைய திருக்காட்சியைக் காணமுடியுமோ முடியாதோ என்று ஐயுற்றிருந்த எங்களை அவிநாசியப்பன் திருவருள் கூட்டிவைத்தது. இன்றைய நிகழ்ச்சியில் நீங்களெல்லாம் அடைந்த களிப்பைக் காட்டிலும் நாங்களடைந்த அருட்களிப்புக்கு அளவேயில்லை இங்கு இறைவாழ்த்தாகத் திருநாவுக்கரசரின் 'வேதியா வேதகீதா' என்ற பாடல் பாடப்பெற்றது. அதில் 'ஒருங்கி நின் கழல்கள் காணப் பாதியோர் பெண்ணை வைத்தாய்' என்று கூறப்பெறுகிறது. உள்ளம் ஒருங்க உயிர் ஒருங்க நின்திருவடிகள் காண, பாதியிலே பெண்ணை வைத்தாய்' என்றால் பொருள் விளங்குகிறதா என்று பார்க்க வேண்டும். திருநாவுக்கரசர் அப்படியருளியதற்குச்

சிறந்த நோக்கமிருக்கிறது. அதுதான் இன்றைக்கு நடந்த வைபவம் என்பதை நீங்கள் அறிந்துகொண்டால் நல்லது.

இங்கே நம் அடிகளார் இன்றைக்குப் பாதியில் ஒருபெண்ணை வைத்துக்கொண்டார். அதற்குக் காரணமென்னவென்றால், ஒருங்கி அந்த பாதியுடையவன் கழலைக் காண்பதற்காக இது தான் அறியவேண்டிய உண்மை. யான்என்பதும் எனது என்பதும் அற்ற நிலைதான் திருவடி. அது சிவானந்த அனுபவம் என்று சொல்லப்படும். 'யான் எனது என்று அற்ற இடமே திருவடியாம் என்பது கந்தர் கலிவெண்பா. 'யான் எனது என்று அறநின்றது அடியாம்' என்று சாத்திரம் கூறுகிறது. அந்தத் திருவடி சிவானந்த அனுபவம் என்று உயிர்களுக்கு உரியது. பரமனை நோக்கச் சிவானந்தம் என்று சொல்லப்படும். அதைப் பெறுவதற்காக நீ பாதியிலே பெண்ணை வைத்தாய் என்றால், அகத்தே வைத்திருந்த ஞானத்தைப் புறத்தே தோற்றினாய் என்பது பொருள். இன்று இவர்கள் வாங்கிய கல்லாடை எவ்வளவு நல்லாடை என்பது அனுபவம் உடையவர்களுக்குத்தான் தெரியும். மற்றவர்களுக்குத் தெரியாது.

சாந்தலிங்க சுவாமிகள் வைராக்கிய தீபம் 34-ம் பாடலிலே துறவு என்ற சொல்லை உயர்ந்த பொருளிலே ஆண்டிருக்கிறார்கள். துறத்தல் தொழில் மட்டுமல்ல; கோலம் மட்டுமல்ல; அதனால் வரும் ஞானத்தைப்பற்றி இப்பாடலில் சொல்லியிருக்கிறார்கள். அதற்கு உரையெழுதிய சிதம்பர சுவாமிகள் 'ஞானம்' என்றே உரை எழுதியுள்ளார்கள். அந்த முறையிலே ஞானத்தைப் பெறுவதற்கு இது ஒரு சிறந்த சாதனம். திருநாவுக்கரசர் வீடு பெறவேண்டுமானால் துறந்தேதீரவேண்டும் என்கிறார்கள். அந்தக் கருத்தில் உடன்பாடுடைய சாந்தலிங்கரும் அப்பாட்டில் துறவையே சிறப்பித்துள்ளார். சிறப்பு என்பதற்கு அன்பு என்ற பொருள் மெய்க்கண்ட சாத்திரத்தில் கூறப்பெறுகிறது. அதற்கு என்ன வேண்டுமென்றால் துறவுதான் வேண்டுமென்று 'துறந்தார்க்குத் தூநெறியாய் நின்றான்தன்னை' என்று நாவுக்கரசர் பாடியுள்ளார்.

இவ்வாறு அன்புநிலைபெற்று, உலகை வாழ்விக்க நம் அடிகள் ஏற்கும் இவ்வருளாட்சி நீடு நிலை பெறுவதாகுக.

அடுத்து, கும்பகோணம் பெரியமடம் தவத்திரு சாரங்கபாணி தேசிக சுவாமிகள் கன்னட நூலாகிய பிரபுலிங்க லீலைக்கும், தமிழ் நூலாகிய பிரபுங்க லீலைக்கும் உள்ள கருத்து ஒற்றுமைகளை எடுத்துக்கூறி, சாந்தலிங்க சுவாமிகளின் நூல்களோடு அவற்றை ஒப்பிட்டுக் கூறினார்கள்.

அடுத்து காஞ்சி ஞானப்பிரகாசர் திருமடம், திரு. துரைசாமி அய்யர், கவியரசு கு. நடேசக் கவுண்டர், சிரவை கௌமாரமடாலயம், ஆகியோர் பொன்னாடை போர்த்திச் சந்நிதானங்களைச் சிறப்பித்தனர். உடுமலை புதுக்கம்பன் பூமி பாலகதாசு அவர்கள் வாழ்த்துரைக்குப் பின் மருதமலை அருள்நெறிக் கிருத்திகைக் கழகம், விளாங்குறிச்சி, சௌரிபாளையம், பரமசிவன் கோயில் முதலிய ஊர்களிலுள்ள தெய்வீகப் பேரவைகள், செல்லாண்டியம்மன் கோயில் திருப்பணிக்குழு, பேரூர்புலவர் பேரவை, இரத்தின கிரித் திருப்பணிக்குழு, பழனி அருள்நெறித் திருக்கூட்டம் ஆகிய சங்கத்தினரால் 30-க்கும் மேற்பட்ட வாழ்த்துப்பாக்கள் பாடப்பெற்றன. கோவை மாவட்டத் தமிழாசிரியர் சார்பாக திரு. துரைசாமி நாயுடு அவர்களால் மலர்மாலை அணிவிக்கப்பெற்றது.

அடுத்து, மகாசந்நிதானம் அவர்களால் இலக்கண நிறைகடல் பண்டித கந்தசாமிப் பிள்ளை அவர்களுக்கு 'முதுபெரும் புலவர்' என்ற பட்டமும், கோவை, கவியரசு திரு. கு. நடேச கவுண்டர், அவர்களுக்குத் 'திருமுறைச்செல்வர்; என்ற பட்டமும், திரு. மாணிக்கவாசகம் அவர்களுக்கு, 'சோதிடமணி' என்ற பட்டமும் வழங்கிச் சிறப்பித்தார்கள். பட்டம் பெற்றவர்களது வாழ்த்துரைக்குப்பின், தவத்திரு சுந்தரம் அடிகளார் நன்றியுரையோடு அருளாட்சியேற்பு விழா இனிது நிறைவுபெற்றது.

---

எவர் தமக்கு மட்டுமே சமைத்துக் கொள்கிறார்களோ அவர்கள் பாவத்தை உண்கிறார்கள்.

—பகவத்கீதை

❀ ❀ ❀

அன்பே இன்ப ஊற்று. பிறவிக்குக் காரணம் ஆசையே?

—புத்தர்

❀ ❀ ❀

மனித வாழ்க்கை ஒரு கண்ணாடி வளையல்.

—காந்தியடிகள்

# ஆண்டாள் திருக்கோயில் அரிய சாசனங்கள்

கோவைகிழார்-இராமச்சந்திரஞ் செட்டியார் B.A, B.L,

ஸ்ரீவில்லிபுத்தூர் சூடிக்கொடுத்த நாச்சியார் திருக்கோயில் மிகமிகப் புகழ்பெற்ற திவ்வியதேசம் (ஒரு கோயில்) ஆகும். அத்திவ்விய தேசத்திற்குக் கணக்கற்ற மக்கள் ஆண்டு முழுதும் போய் வணங்குகிறார்கள் அத்திவ்விய தேசம் பெரியாழ்வாரும் அவருடைய திருமகள் ஆண்டாளும் அவதரித்து மிகச் சிறந்த பாசுரங்களை அருளிச் செய்த புனித இடமாகும். அங்கே ஆண்டாள் கோயில், வடபத்திரசாயி கோயில் என்ற இரண்டு திருக்கோயில்கள் இருக்கின்றன. அவைகளில் நிரம்பக் கல்வெட்டுக்கள் இருக்கின்றன. ஆண்டாள் கோயில் சுவர்களில் காணும் கல்வெட்டுக்கள் சிறந்த வகையில் எழுதப்பட்டுள்ளன. அவைகளின் அருமை பெருமைகளைப் பொதுமக்கள் அறிய வகையில்லாதபடியால் சில அரிய குறிப்புக்களை இங்கே எழுதுவோம்.

கி. பி. 1450 முதல் ஒரு நூற்றாண்டு வரையில் வாணர் என்ற குலத்தார்கள் ஸ்ரீவில்லிபுத்தூர்ப் பகுதியில் குறுநில மன்னர்களாக ஆண்டு வந்தார்கள். அவர்கள் பெயர்களும் பட்டங்களும் மிகக் கம்பீரமாக இருக்கின்றன. மகாபலி வாணாதிராசர் என்பது பொதுப்பெயர். (1) திருமாலிருஞ்சோலை நின்றான் (1350 சகம்), (2) சுந்தரத்தோளுடையார் (1374), (3) உறங்காவில்லி தாசன் (1375), (4) திருமாலிருஞ்சோலை நின்றான் வாணாதிராயன் (1399), (5) சுந்தரத்தோளுடையான் மாவலி வாணாதிராயர் (1450-1468).

இப்பெயர்களை வகித்த தலைவர்கள் ஆண்டாள் கோயிலுக்குப் பல தான தருமங்களைச் செய்துள்ளார்கள். அவ்வம்சத்தார் ஆளுகையில் சுமார் ஒரு நூற்றாண்டுக்கு மேலாகவே திருக்கோயில் விளங்கிக்கொண்டிருந்தது.

ஆண்டாள் திருக்கோயிலில் மூலத்தானத்திற்கு முன் உள்ள மண்டபத்தில் தெற்குச் சுவரில் உள்ள ஒரு கல்வெட்டு (584/26) சூடிக்கொடுத்த நாச்சியார் திருக்கோயில் மகா மண்டபத்தைச் சுந்தரத் தோளுடையார் சார்வபௌம மகாபலி வாணாதிராஜன் கட்டினதாகக் கூறுகிறது. அஃதாவது இன்றைக்கு ஐந்து நூற்றாண்டுகளுக்குமுன் கோயில் முன் மகா மண்டபத்தைப் புதுப்பித்தோ, எளிதில் எளிதாக்கியோ, அம்மன்னன் கட்டி யிருக்கலாம்.

இனி அந்தக் கல்வெட்டின் கீழ் இரண்டு பகுதிகளாக மற்றொரு சிறந்த கல்வெட்டு ஒன்று சகம் 1375 ஸ்ரீமுக ஆண்டில் (1454 மார்ச், 13) உறங்கா வில்லி தாசன் என்ற மகாபலி வாணாதிராயர் என்ற தலைவனால் பொறிக்கப்பட்டுத் திடியன் என்ற திருவரங்க நல்லூரைக் கோயிலுக்குத் தானம் தந்த செய்தி கூறுகிறது. (577-1926).

இந்தக் கல்வெட்டின் அமைப்பு வெகு விசித்திரமானது. புதுவை (ஸ்ரீவில்லிபுத்தூர்) விஷ்ணுசித்தர் கோதைக்கு அரங்கநாதர் அனுப்பிப் பிரணயப் பத்திரம் ஒன்று அரங்கப் பெருநகரில் சேரனை வென்றான் மண்டபத்தில் சுந்தர பாண்டியன் பந்தலின் கீழ் அரியராயன் கட்டிலில் வீற்றிருக்கும்போது தானம் செய்யப்பட்டதாம். அரசன் தன்னையே அரங்கநாதனாகப் பாவனை செய்த நிலையில் அது வரையப்பட்டிருக்கிறது. முன்னுரையாக நாச்சியார் பெருமாள்மீது கொண்ட திவ்விய காதல் நிலை கூறி இடையிடையே நாச்சியார் திருமொழியிலுள்ள பாசுரங்களில் சிறந்த பகுதிகளைச் சேர்த்து வரையப்பட்டுள்ளது. காதல் விளைவாக அரங்கநாதர் ஆண்டாளுக்குக் கொடுத்தருளிய வரிசைகளில் திடியன் என்ற ஊரை தேவதானமாகக் கொடுத்தாகப் புனையப்பட்டுள்ளது. இதனை இக்காலத்துக் கவிதா முறை என்று கொள்ளவேண்டும்.

திருக்கோயிலில் பொறிக்கப்பட்ட சாசனம் பிழைபடப் பிரதி செய்யப்பட்டபடியால் அதன் திருத்தமான வடிவத்தில் இங்கே கொடுக்கப்படும்.

ஷரத்து

(ஏதத் திரை லோக்ய நிர்ம்மாணத்ராண சம்கார காரணக ஸ்ரீமன் ஸ்ரீரங்கநாதஸ்ய சாசனம் சாஸ்வதம் பரம்)

(இ - ள்) மூவுலகங்களுக்கும் ஆக்கல், அளித்தல், அழித்தல் ஆகியவற்றின் காரணமான ஸ்ரீரங்கநாதருடைய இந்தச் சாசனம் சாசுவதமாகச் சிறந்து விளங்கட்டும்.

1. “ பொருப்பன்ன மாடம் பொலிந்து
தோன்றும் புதுவையர் கோன்

2. விஷ்ணுசித்தன் கோதைக்கு
நாம் வரக்காட்டின பிரணய பத்திரிகை.

3. பத்தர்களும் பகவர்களும் பழமொழிவாய்
முனிவர்களும் பரந்த நாடும்
சித்தர்களும் தொழுதிறைஞ்சத் திசை
விளக்காய் நிற்கின்ற

4. நல்லார்கள் வாழும் நளிர் அரங்கப்
பெருநகருள்
நம்வீட்டில் சோலை வென்றுன்
மண்டபத்துச் சுந்தரபாண்டியன்
பந்தல் கீழ் அரியராயன்கட்டிலில்
இருந்து உம்பரும், தும்புரு
நாரதரும் வந்து முகம் காட்ட
அவர்களுக்கு அழகோலக்கம்
கொடுத்து இருக்கச் செய்தே,
நம்வீட்டில் குடவர், கோவணவர்
பூவிடுவர், தழை விடுவர், தண்ணீர்
சுமப்பார், தண்டெடுப்பார், அனுக்கர்
கணக்கர் மற்றும் நம் காரியத்துக்குக்
கடவர் எல்லோரும் வந்து நம்கோதை
வீட்டினின்றும் அர்ச்சகர் குடவர்
கோவணவர் தண்டெடுப்பார் ஸ்ரீராமா
நுஜ உடையார் வந்தார்கள் என்று
நாமும் சர்வ பரிகாரமும் அனைத்துக்
கொடுத்துள்ளாரையும் எதிரே போக
விட்டு, தம் வீட்டில் உள்ளாரையும்
கூட்டிக் காண்பித்துக் கொண்டு
தாம் வரக் காட்டின சம்மானமும்
சுவகரிக்கும் அடைவிலே சுவீகரித்தோம்.
தாம் வரக் காட்டின சாசனமும் வாசித்துக்
காட்ட அறிந்துகொண்டோம். தாம்
சொல்லிவரக் காட்டின படியாவது :
நாம்.பதினாறுமாயிரவர் தேவிமாருட
னே, பெரியமண்டபத்தில் விநோதித்து
இருந்தோமென்று தம் சுற்றத்துத்தோழிமார்
நமக்குச் சொல்ல அப்பொழுது தாம்
புண்ணிற் புளி பெய்தாற் போலேயும்
வேலாற் துன்னம் பெய்தாற்போலேயும்
நெஞ்சூடுருவ வேவுண்டு நிலையும்
தளர்ந்து,
கொள்ளும் பயனொன்றில்லாத கொங்கை
தன்னைக் கிழங்கோடும்
அள்ளிப்பறித்திட்டவன் மார்பிலெறிந்
தென்னழலைத் தீர்வேனே
என்றும் உள்ளே உருகி நைந்து
தாம் நம்மைப் பொறுத்த மிலி என்றும்
புறம்போல் உள்ளும் கரியான்
பெண்ணின் வருத்த மறியாத பெருமான்
வஞ்சகக் கள்வன், மாமாயன், பாம்பணை
யார்க்குத் தம் பாம்புபோல் நாவும்
இரண்டுளவாய்த்(து) நாணிலி
என்றும் தாய் சொல்லி வரக்காட்டினது
தாம் மாமியார் மக்களாகையாலும்
நாம் மாமனார் மக்களாகையாலும்
நம் திறத்தூடல் கண்டுவப்ப வேண்டிச்
சொன்னதாயிருக்கும்
நாம் முப்பத்து மூவர் அமரர்க்கும் முன்
சென்று கப்பம் தவிர்ப்பது
காரியம் ஆகவும் தேவரகசியமாகவும்
பெரியமண்டபத்தில் இருந்தோம்.
தாம் மணவாளர் வைத்த பரிசிலே
இருந்தோம் என்றும் நாங்கள்
எம்மில் இருந்து ஒட்டி அகச்சங்கம்
நானுமவனு மறிந்து மென்றும்
பாசிதூர்ந்து கிடந்த பார்மகட்குப்
[பண்டொருநாள்
மாசுடம்பில் நீர்வாரமானமிலாப் பன்றியாம்
தேசுடைய தேவர் திருவரங்கச் செல்வனார்
பேசியிருப்பறைகள் பேர்க்கவும் பேராவே
திண்ணார்ந்திருந்த சிசுபாலன் தேசழிந்து
அண்ணாந் திருக்கவே யாங்கவனைக்
பெண்ணாளன் [கைப்பிடித்த
என்றும் செம்மையுடைய திருவரங்கர
மென்றும்

---

[1] 1-4 நாச்சியார் திருமொழி 1-10 பா. [2] 5-8 பெரியாழ்வார் திருமொழி 4-9-6. [3] நாச்சியார்
[4] திருமொழி 11-5.

நாச்சியார் திருமொழி 7-9. திருப்பாவை 11 பா. நாச்சியார் திருமொழி 13-1, 13-2, 3-3.

13 - 8 13 - 8 14 - 6 14 - 7 13 - 1 10 - 3 3 - 8 2 - 1 திருப்பாவை - 9 நாச்சியார் திருமொழி 4 - 11 திருப்பாவை 20 நாச்சியார் திருமொழி 5 - 8 நாச்சி. திருமொழி 11 - 8 நாச்சியார் திருமொழி 11 - 9 11 - 10

சொன்னபடியே நாம் தம்மையல்லது
வேண்டுவதில்லை. தம் வீட்டில் உள்ளவர்
களைத் தாங்க நிறுத்தி நில்லாமல்
வரக் காட்டச் சொன்னபடியே
அவர்களுக்கு வேண்டு சத்காரங்
களும் செய்து தமக்கு நாம் என்றும்
பல்லக்கும் நாம் இருக்கும் குடையும்
நாம் பூணும் கண்டமாலை ஆபரண
ங்களும் பட்டு பருத்தி சுகந்த
திரவியங்களும் வேண்டுமட்டும் கொடுத்து,
தமக்கு அடுக்களைப் புறமாக நமக்கு

1. பூர்வம் நடந்து வருகிற சீர்மையில் விட்ட சகாப்தம் கூடஎஎ௱[1] மேல் செல்லா நின்ற ஸ்ரீ முக வருஷம் மீன ஞாயிற்றுப் பூர்வ
2. பக்ஷத்து ஏகாதசியும் புதவாரமும் பெற்ற உத்தரத்து நாள்[2]
3. உறங்காவில்லி தாசன் ஆன மகாபலி வாணதி ராயர் சீர்மையான மதுரை மண்டலத்து முட்ட நாட்டுத்[3]
4. திடியன் ஆன திருவரங்க நல்லூர் எல்லையாவது :—[4]
5. மேலெல்லை-புத்தூர் மலைக்கும் வயிரவன் பற்றுக்கும் கிழக்கு, வட வெல்லை-வாரந்தூர்

தானம் செய்தசொத்தின் எல்லை.[5]

பற்றுக்கும் தெற்கு, கீழெல்லை-கருமாத்தூ
வில் குளத்துக்கு மேற்கு, தென்னெல்லை—
புளியஞ் சோலைக்கும் குத்துக் கல்லுக்கும்
வடக்கு

இந்நான் கெல்லைக்கும் உள்பட்ட மாவடை
மரவடை பட்டடை பதி முதல் மற்றும்
எப்பேர்ப்பட்ட சமஸ்தப்பிராப்திகளும்
கைக்கொண்டு கல்லிலும், செம்பிலும்
வெட்டிக் கொள்ளவும். இப்படிக்கு
திருவாய் மொழிந்தருளினமைக்கு
அருளால் திருமந்திரஓலை நாயகர்.

கல்வெட்டில் நாச்சியார் திருமொழிகளி லிருந்து எடுத்தாளப்பட்ட சொற்றொடர்கள் அடிக்குறிப்புக்களில் காட்டப்படுகின்றன.

மேலே எடுத்துக்காட்டிய உறங்காவில்லி தாசன் சாசனத்தின்கீழ் மற்றொரு சாசனம் திரு மாலிருஞ்சோலை நின்ருரான மாவலி வாணதி ராயர் தான சாசனம் ஆகப் பொறிக்கப்பட்டுள் ளது. அதன்படி (578-1926) மாங்குடி ஆன சுந்தரத்தோள் நல்லூர் என்ற கிராமத்தை சகம் 1399 ஏவிளம்பி வைகாசி 20 தேதியில் (1477-மே 16 வெள்ளி) சூடிக்கொடுத்த நாச்சியாருக்கு ஒவ்வொரு ஆண்டும் ஆடித்திருவிழா நடத்துவ தற்காக அம்மன்னன் தானம் செய்தான். தானக் கிராமத்தின் நான்கு எல்லைகள் குறித்தும் ' எல்லை களுக்குட்பட்ட நன்செய், புன்செய் மாவிடை மரவிடை கீழ் நோக்கிய கிணறுமேல் நோக்கிய மர மும் மற்றும் எப்பேர்ப்பட்ட சமஸ்த பிராப்தி களும்'' தந்ததாகக் கண்டிருக்கிறது. அரச னுடைய பட்டங்கள் நிரம்பக் கொடுக்கப்பட்டுள் ளன.

அதே இடத்தில் எழுதப்பட்ட வேறொரு கல்வெட்டு (580-1926) சகம் 1545-ஜூன் 16) ஆண்டில் பராக்கிரம பாண்டியன் ஆணைப்படி காளிங்கராயன் உலகுடைய பெருமாளின் பொருட்டுப் பொறிக்கப்பட்டது. இந்தக் கல் வெட்டிலும் நாச்சியார் திருமொழியிலிருந்து சில அடிகள் சேர்க்கப்பட்டுள்ளன

ஏதத் ஸ்ரீவிஷ்ணுசித்தஸ்ய
துகிது ஜகதாம் ஹிதம்
தேவியாயா : ஸ்ரீரங்கநாதஸ்ய
கோதயா : திவ்ய சாசனம்.

(இ - ள் : விஷ்ணு சித்தருடைய திருமக ளாரும் ஸ்ரீரங்கநாதருடைய தேவியாரும் ஆன கோதையின் திவ்விய மங்கலமானசாசனம் ஜகத் துக்கு இதத்தைக் கொடுக்கட்டும்)

1. நம்யதாஸ்தானமான மென்னடையன்னம் பரந்து விளையாடும் வில்விபுத்தூரில்[1]
2. நம்வீட்டில் முத்துடைத்தாமம் நிரைதாழ்ந்தபந்தர்க் கீழ் அழகிய மணவாளன் பள்ளிக் கட்டிலிருந்து நாமும் நம் வடிபெருங்கோயிலில் பள்ளி கொண்டருளிய பரமஸ்வாமி களும் நம் அடியார்க்கு ஒலக்கம் கொடுத்து இருக்கச்செய்தே,[2]
.........  .............முதலியன.

இந்தச் சாசனத்திலும் நாச்சியார் திரு மொழியில் உள்ள சொற்கள் ஆளப்பட்டுள்ளன. இதைப்போல திவ்யப்பிரபந்தங்களில் உள்ள திருவாக்குகளை எடுத்து ஆளுவது ஒரு சிறந்த வழக்கமாக 500 ஆண்டுகளுக்குமுன் இருந்தது என்று நாச்சியார் திருக்கோயில் கல்வெட்டுக்கள் காட்டுகின்றன.

(தொடர்ச்சி அடுத்த பக்கம் பார்க்க)

---

[1] (1375 சதகம்;) [2] (13-3-1454) [3] (தானம் செய்த மன்னன்.) [4] (தான ஊர்.) [5] தானம் சொத்தின் எல்லை.

[1] (நாச்சியார் திருமொழி 5-5) [2] (நாச்சியார் திருமொழி 6-6)

# கூட்டு வழிபாடு

ம. சூரியராசு, பி.ஏ., பி எல்.,

உதவி ஆணையாளர், இந்துமத அறநிலைய (ஆட்சித்)துறை, கோயம்புத்தூர்.

மனித வாழ்க்கை என்பது உண்பதும் உடுப்பதும் உழைப்பதும் ஒரு சில கேளிக்கைகளில் மனதைச் செலுத்துவதும் தானா? என்று சிந்திப்போமானால் அத்தகைய வாழ்க்கை பயனுள்ளதாகவோ பூரண மடைந்ததாகவோ அமைந்ததன்று என்பதை உணர்வோம். வாழ்க்கை எத்தகைய சீரிய முறையில் பொருளாதார வளம் பெற்று எல்லா வசதிகளும் பெற்றுப் பலரும் கண்டு பொறாமை கொள்ளும் அளவுக்கு அமைந்ததாயினும் மன நிம்மதியின்றி வாழ்வு செயல்படுமானால் அத்தகையோரது வாழ்க்கை நிறைவு பெற்றதாகவோ பயனுள்ளதாகவோ அமையாது. அப்படியானால் மனிதனுடைய வாழ்க்கை உலகியல் வாழ்க்கையோடு மட்டும் இயைந்தது என்று கொள்ள முடியாதல்லவா? மேலும் மனிதனுடைய சக்தியால் எல்லாவிதமான நலன்களையும் நிறைவையும் பெறமுடியும் என்பது உண்மையானால் எல்லாவித வசதியுடன் கூடிய ஒருவன் மனநிறைவையும் பெற்றிருக்க முடியுமல்லவா? மற்ற எல்லா விதத்திலும் நிறைவைப் பெறக்கூடிய ஒருமனிதன் மனநிறைவை மாத்திரம் உலகியல் பொருட்களால் அடையமுடியாது என்பதை உணரும்போது மனித சக்திக்கும் அப்பாற்பட்ட சக்தி ஒன்று உண்டு என்பதையும் அத்தகைய சக்தியும் தன் மனநிலையும் ஒருநிலைப்பாட்டால்தான் மன அமைதிகொண்ட நிறை வாழ்க்கை பெறமுடியும் என்பதையும் உணர்கின்றான்.

அத்தகைய மனோநிலை பெறுவதற்கு உரிய வழி என்ன? என்று சிந்தித்தால் அத்தகையவழி நம் முன்னோர்களால் கடைப்பிடிக்கப்பட்டும் ஞானச்சாரியார்களால் உபதேசிக்கப் பட்டும், அவ்வழி கடைப்பிடித்தோரால் உணர்ந்து போற்றப்பட்டதுமான இறைவழிபாடு ஒன்றுதான் என்பதுவிளங்கும். சமயத்திற்குச் சமயம் வழிபாடு முறைகள் மாறுபடலாம். ஆனாலும் கொண்ட கருத்தும் செயலும் இறைவழிபாடாகிய ஒன்றே ஒன்றுதான். வழிபாட்டில் முழுப்பயனும் அடையக்கூடிய நிலை தன் மனநிலை முழுவதும் ஒருநிலைப்பட்டு இறைவன்பால் ஈர்க்கப்பட்ட நிலையில்தான் முடியும். இத்தகைய மனநிலை அடைய அதற்கு எம்முறை எளியதாகவும் விரைவில் பயன்பெறத்தக்கதாகவும் அமையும் என்றுபார்க்குமிடத்து அங்கேதான் மற்ற எம்முறை வழிபாட்டுக்கும் மேலானதாகக் கூட்டு வழிபாடு முறை அமைவதை உணர்கின்றோம்.

விழித்தது முதல் படுக்கும்வரை திட்டமான ஒழுங்குடன் வாழ்க்கை அமைதல் அவசியம். அதில் வழிபாட்டைத் தகுந்த காலத்தில் உரிய சூழ்நிலையில் அமைத்துக்கொள்வது அவசியமா

---

ஸ்ரீ வில்லிபுத்தூர் நாச்சியார் கோயிலிலும் வடபத்திரசாயி கோயிலிலும் 60 கல்வெட்டுக்கள் வரை பிரதி எடுக்கப்பட்டுள்ளன. அவைகளில் பாண்டியர், திருவிதாங்கூர், விஜயநகரத்தார், மதுரைநாயக்கர் முதலிய அரச வம்சத்தினர்களின் கல்வெட்டுக்கள் இருக்கின்றன. பெரும்பாலும் அவை கோயிலுக்குச் செய்த தான தருமங்களைப் பற்றியே கூறுகின்றன.

இவைகளில் நம் கட்டுரைக்காக எடுத்துக்கொண்ட கல்வெட்டுக்கள் நான்கு. அவைகளின் சுருக்கம் பின்வருமாறு.

1. •மகாமண்டபம் கட்டினது. சுந்தரத்தோளுடைய சார்வபௌம மகாபலி வாணாதிராஜன்.

2. •திடியன்—திருவரங்க நல்லூர்—தானம் உறங்காவில்லிதாசன் மாவலி வாணாதிராயர் பிரணயப்பத்திரிகை—மேற்கோள்கள்.

3. *மாங்குடி—சுந்தரத்தோள் நல்லூர் தானம்—திருமாலிருஞ்சோலை நின்றார்—மாவலி வாணாதிராயர்.

4. •பராக்கிரம பாண்டியன் ஆணைப்படி காளிங்கராயனுக்கு—நிலமும் வீட்டிடமும் தந்தது.

முன்னமே சொன்னபடி திவ்வியப்பிரபந்தப் பாசுரச் சொற்றொடர்கள் ஆங்காங்கே எடுத்தாளப்பட்டன.

•(584-1926) (577-1926) (13-8-1454) (578-1925) 1477-5-16) (580-1926 (143-6-18)



உயர் திரு. ரா. க. சண்முகம் செட்டியார் அவர்கள்
தமிழ்க்கல்லூரிக் கழகத்தின் முதல் தலைவர்.



உயர்திரு. வெ. சி. சுப்பைய கவுண்டர் அவர்கள்
தமிழ்க் கல்லூரிக் கழகத்தின் இரண்டாவது தலைவர்.

கும். ஒழுங்கில்லா வாழ்க்கைத் திட்டமும், குறிக்கோள் இல்லாக் கொள்கையும், பண்பில்லா மனமும், தூய்மையில்லா அறிவும் இன்ப வாழ்வை அளிக்காது. கூட்டு வழிபாட்டின் மூலம் ஒழுங்கான திட்டமிட்ட வாழ்வையும் பிறவிப் பயனுன முத்தியையும், தூய்மையான நற்பண்புகளுடன் கூடிய பயனுள்ள வாழ்வையும் அடைய முடிகின்றது.

வழிபாட்டின் அங்கங்கள் தோத்திரம், பாராயணம், சமயபோதனை, வாழ்த்து, மூர்த்தி வழிபாடு, மோனத்தியானம் என்பனவாம். சமயாச்சாரியார்களும், ஞானச்சாரியார்களும் நமக்குத் தந்த பதிகங்களின் பொருளை உணர்ந்து இனிய குரலில் மனமுருக ஓதினுல் அதன் பயனைக் கூறவும் இயலுமோ! அத்தகைய தோத்திரப் பாடல்களை வழிபாட்டுக் கூட்டத்தார் அனைவரும் ஒருங்கே பாடும்பொழுது பங்கு பெறுவோர் அனைவருடைய உள்ளத்திலும் ஒருவகை உள்ளக் கிளுகிளுப்பும் உணர்ச்சியும் பெருகுவதை அனுபவிக்க இயலுகின்றது. அதே சமயத்தில் அத்தகைய பதிகங்களின் நுண்பொருள்களை ஐயம் திரிபறக்கற்ற பெரியோர்களைக் கொண்டு எடுத்துரைக்கச் சொல்லித் தெளியவும், ஒருவர்க்கொருவர் தத்துவ விசாரங்களைப் பரிமாறிக் கொள்ளவும் கூட்டு வழிபாட்டினுல் தான் இயலும். "கற்றது கைம்மண் அளவு, கல்லாதது உலகளவு" என்பது சமய அறிவுக்கும் பொருந்துமாதலால் நம் சமய சாத்திரங்களிலும் தோத்திரங்களிலும் உள்ள நுண் பொருள்களைக் கற்ருர் வாயிலாகத் தெரிந்துகொள்வதற்கு ஓர் நிலைக்களமாக விளங்குவது கூட்டு வழிபாட்டுத் தலமாகும்.

இவை எல்லாவற்றுக்கும் மேலாக வழிபாட்டின் பெரும்பயனை அடைவதற்கு இன்றியமையாத ஒன்று மனம் ஒரு நிலைப் படுவதாகும். பண்பில்லா மனம் பலதிசைகளிலும் ஈர்க்கப்படுவது இயற்கையே. அத்தகைய சிதறும் சத்தியை இறைவன்பால் ஈர்த்து அப்பெரும் சத்தியோடு இணைத்து ஒருநிலைப்படுத்துவது என்பது அயராது செய்யும் முயற்சினுல்தான் இயலுமே தவிர இலகுவில் அமையக்கூடிய ஒன்று அன்று. அத்தகைய நிலையைப் பெற நல்லவர் சகவாசமும் துணையும் வேண்டும். அமைதியான சூழ்நிலையும் வேண்டும். அச்சூழ்நிலை நல்லதுணையை வல்ல துணையாக ஆக்கும். அப்பொழுது "காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி' என்ற நிலைக்கேற்ப உள்ளத்தே நினைந்து உணர்வோடும், தூய அன்போடும். பரந்த எண்ணங்களோடும் அமைதியான சூழ்நிலையில் இலகுவில் ஒருமைப்பாட்டுடன் கூடிய மன அமைதியை அனுபவிக்க இயலுகின்றது.

இத்தகைய பெரும் பயன் விளைவிக்கும் கூட்டு வழிபாடு இல்லங்கள்தோறும், கிராமங்கள் நகரங்களில் உள்ள ஆலயங்கள் தோறும் ஆரம்பிக்கப்பட்டுச் செவ்வனே நடைபெறவேண்டும் என்ற உயரிய நோக்கத்துடன் ஆரம்பிக்கப்பட்டிருக்கும் தெய்விகப் பேரவை இதற்கு ஓர் உறுதுணையாக அமையும் என்பதில் ஐயமில்லை. இத்தகைய கூட்டு வழிபாடு தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க்கல்லூரியின் ஓர் அங்கமாகப் பல ஆண்டுக்காலமாக இயங்கி வருவது மிகவும் பாராட்டுதற்குரியதாகும். கல்லூரி வாழ்க்கை முடிந்த பின்னும் மாணவமாணவிகள் அனைவரும் தங்கள் வாழ்வின் ஓர் அங்கமாகக் கூட்டு வழிபாட்டை நடத்திவரவேண்டும் என்பதே என் அவாவும் வேண்டுகோளும் ஆகும்.

---

உள்ளத்தில் நிகழும் இன்ப துன்பக் குறிப்பை முகங்காட்டும்.

—திருவள்ளுவர்

⁂ ⁂ ⁂

பணமும் பட்டமும் மனிதரால் விரும்பப்படுகின்றன என்பதற்காகத் தீமையின் துணைகொண்டு அவற்றைத் தேடிக் கொள்ளாதே.

—கன்பூஷியஸ்

⁂ ⁂ ⁂

எது அநீதி? கோபமோ, அச்சமோ, இன்பமோ, துன்பமோ, பொருமையோ, ஆசையோ நம்மை ஆட்டி வைக்கும்போது நாம் செய்யும் செயல்களுக்குப் பெயர் தான் அநீதி.

—பிளேடோ

# நற்றிணை நயம்

[திரு. ந. முத்துக்குமாரசுவாமி, எம்.ஏ., பி.எல்.,

துணைமுதல்வர், த. சா. அ. தமிழ்க் கல்லூரி, பேரூர்.]

கட்பொறி வாயிலாக உணரும் தன்மைத் தான உயிரைச் சாரும் பல்கலைகளிலும் பொருட் செறிவாலும், கலைத்தன்மையாலும், நிலைபேறுண் மையாலும் சிறந்தது கவிதைக் கலையேயாகும். ஓரிலக்கியத்தின் சிறப்பு அது நுவலும் பொருளில் மட்டுமன்று, மரபு நிலைவழாச் சொற்கள் அலங் காரங்கள், உவமைகள் முதலிய உறுப்புக்களின் துணையோடு நுவலும் பொருளைத் திறம்படக் கூறுதற்கேற்ப அமையும். இச்சிறப்புக்களை அகத் தடக்கிய நந்தமி ழிலக்கியங்களிற் றலையாயின சங்க விலக்கியங் களேயாம். திராவிடப் பிரகாசி கையாசிரியர் சங்க விலக்கியங்களின் சிறப் பினைக் கூறும்

"நக்கீரர் முதலிய கடைச்சங்கப் புலவர்கள் அகத்தியமென்று முதனிலையுந் தொல்காப்பிய முதலிய வதன்வழி நூல்களையும் விழிகளாகக் கொண்டு முத்தமிழ் நன்குணராய்ந்து செந்தமி ழிலக்கியம் பல செய்திட்டார். அவரியற்றிய சங்கச் செந்தமிழிலக்கியங்கள் சொல்வளம் பொருள்வளந்துறுமிக் கற்போர் நெஞ்சங் கவர்ந்து மேனிலத்தோரும் விழையு நானிலச் செவியமிர்தாய் இகபர நல்கி மிக விளங்குவன பிற்காலத்து நாலுமுரையுந் தமிழுலகம் பெட் புறச் செய்து தமிழாசிரியர் பெருமை பெறுதற்குச் செந்தமிழ்ப்பிரமாண வரம்பாய் நிலவா நின்றன இந்தச் சந்தச் செந்தமிழிலக்கியங்களெனின் அவற்றின் றெய்வச் சொற்பொருட் சிறப்பு இப்பரிசிற்றென்று முற்ற வெடுத்தியம்பல் எளி தன்று". என்னும் இப்பகுதி ஈண்டு நினைவு கூரத் தக்கது.

பிற்காலத்துத் தோன்றிய நற்றமிழ் நல்லா சிரியர் தம் கற்பனைகட்கு ஊற்றுகவும், அருஞ் சொற் களஞ்சியமாகவும் சங்க விலக்கியங்கள் அமைந்து கிடத்தலின், இக் கவிவாணர்கள் சங்கச் சான்றோர் எனப்பாராட்டப் பெற்றனர். சங்க நூற் பயிற்சி சிறிதுமின்மையாலே இற்றை நாள் புன் கவிகள்;

> " செஞ்சொ லொன்று மில்லாமற்
> சீருங் கட்டுஞ் சேராமல்
> சிறந்த பொருளும் பயவாமல்
> செவ்வே சந்தி பொருந்தாமல்
> நெஞ்சங் கவரு மணியின்றி
> நிறைந்த புலமை யில்லோர்கள் "

தாம் விரும்பியவாறு பாவெனக் கீறிக் கவிராய ரென்றும் மறுமலர்ச்சிக் கவியென்றுந் தருக்கித் திரிகின்றனர்.

சங்கநூற் பாடல்கள் மக்களின் இன்பத் துன்பங்களை, வாழ்க்கையின் பல்வேறு அநுபவங் களை, நிகழ்ச்சிகளை இயற்கை இறந்த உவமை கற்பனைகளா னன்றிக் கட்புலனுகும் சுற்றுச் சூழ் நிலைகளிலுள்ள பொருட்களின் பின்னணியில் தக்க செஞ் சொற்களாற் கூறி, கற்போர் நெஞ்சம் மேம்பாடுறச் செய்கின்றன. இயற்கையை மட் டுமோ அல்லது மக்கள் உண்டுடுத்துறங்கும்சாமா னிய வாழ்க்கையை மட்டுமோ, அன்றி எதார்த்த வாதம் (Realism) என்னும் போர்வையின் கீழ் மக்களின் ஆபாசங்களை வண்ணக்கலவையோடு காட்டும் புன்மை சங்கச் சான்றோர்களின் தங்கச் செய்யுட்களிற் காணப்படாதது தற்கால "நவீன கவிராயர்கள்" மனத்திருத்த வேண்டும்.

சங்கச் செய்யுட்களுள் நற்றிணை, அக நானூறு—குறுந்தொகை இரண்டிற்கு மிடைப் பட்டதால் ஒன்பதடி முதல் பன்னிரண்டடி எல்லையுள்ள அகவற்பாக்களால் ஆனது, பொருட் சுவை மிக்கது, உணர்ச்சியுள்ளது, சுவையில் தெவிட்டாதது.

பாண்டியன் அறிவுடை நம்பியின் "படைப் புப் பல படைத்துப் பலரோடுண்ணும்" என்னும் புறப்பாடலை அநுபவியாத தமிழரிரார். இம் மன்னர் நற்றிணை வரிசையிலும் தம் பெயருக் கேற்பச் சுவைமிக்கதோர் அறிவுடைப் பாடலை யாத்துள்ளார்.

தலைவன் தலைவியோடு களவொழுக்கத்தில் வாழ்ந்து, கரவுள்ளத்தோடு வரையாது காலத்தை நீட்டிக்கின்றான். ஊரார் அலரெழுப்புகின்றனர். தலைவியின் அவலநிலையைத் தலைவனுக்கு எடுத் தியம்பித் தன்னையவன் மறந்தாலும், அதனுல் தனக்கு எத்துணைப் பழியும் அவமானமும் ஏற் பட்டாலும் அவற்குப் பூண்ட கற்புக் கடம் வழு வாது நெறி நிற்கும் மாண்பினை எடுத்துரைக்கின் றாள் தோழி; அவலச் சுவைக்குச் செய்யுள் சிறந்த தோரெடுத்துக் காட்டாம்.

பெண் மக்களுக்கு உயிரினும் சிறந்தன கற்பும் நாணு மாகும். குலப் பெண்டிரை அல்லா ரிடமிருந்து வேறுபடுப்பது இவ்விரண்டு பண்பு களேயன்றே ?

''அச்சமும் நாணும் மடனும் முந்துறுதல்
நிச்சமும் பெண்பாற் குரிய என்ப''

எனத் தொல்லாசிரியர் தலைமகட் குரியதோர் இலக்கணம் உணர்த்தினர். இருவர் கண்ணுற்றுக் காதல் கூர்ந்த வழியும் அச்சத்தானுதல், நாணத்தானுதல், மடத்தானுதல் புணர்ச்சிக் கிசையாது நின்று வரைந்தெய்துதல் வேண்டும்,—இப் பண்புகள் நாடோறும் முந்துறுதல் பெண்டிருக் கியல்பாகலான், களவொழுக்கத்தில் பயிலும் தலைமகள் மெய்யுறு புணர்ச்சிக் குடம்படின், அது, தலைவன் 'பிரியேன், பிரியிற்றரியேன்' என்று கூறிய நன்மொழி பிழையான் என்று தேறி, விதி முந்துவிக்க அவன் மாட்டளி செய்தாளாகும்.

ஆயின் தலைவன் உயிர்வாழ்தல் வேண்டும் எனும் அருளுள்ளத்தால் மெய்யுறு புணர்ச்சிக் குடம்படும் தலைவி எத்தகைய தியாகத்தை அவனுக்காகச் செய்கின்ருள் என ஓர்தல் வேண்டும். உயிரினும் சிறந்ததான நாணையும் கற்பையும் அவனுக் களிக்கின்ருள்.

'' உயிரினுஞ் சிறந்தன்று நாணே; நாணினுஞ்
செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று '
என்று தொல்லாசிரியரும்;

''தாயிற் சிறந்தன்று நாண், தையலாருக்கு,
அந்நாண்
தகைசால் வேயிற் சிறந்த மென்ருேளி
திண்கற்பின் விழுமிதன்று ''

என்று திருக்கோவையாசிரியரும் கூறியவாறு, பெண்டிர் உயிரினும் ஒம்பற்பாலது நாணுடைமை; ஆயினும் கற்பினுக் கிழுக்கு வருமேயானல் நாணையும் உயிரையும் விட்டாகிலும் கற்பினைக் காத்துக்கொள்ள வேண்டிய கடப்பாடுடையர் என்பது தேற்றம்.

தலைவியால் உயிரினும் மேலாகப் போற்றப் பட்டு வரும் ஒரு பொருளைத் தலைவன் ஆரத் துய்த்துவிட்டு, 'பூவி னன்ன நலம் புதிதுண்டு' விட்டு, நன்றியற்ற வகைத் தலைவியின் அவல நிலையை யுணராதவனுக, உணர்வதில் கருத்தில்லாத வனுக ஏதிலாளன் போலவிருந்தால், அவள்தன் பருவரல் நெஞ்சம், நம்மனேரால் உள்ளத்தால் உணரலேயன்றிச் சொல்லாலியம்ப வும் கூடுமோ?

இத்தகைய நிலையில்தா னிருந்தாள் பாண்டியன் அறிவுடை நம்பி கூறும் தலைவி. அவனுடைய பரிபவத்தைத் தலைவனுக் கிடித்துக் கூறி வரைவு கடாவுகிருள் தோழி. நன்றி கொன்ற கொடிய செயலைச் செய்திருப்பினும், தலைவியால் வரிந்து கொள்ளப்பட்டவன் என்ற காரணத் திற்காக,

''முழங்குதிரை கொழீஇய மூரி யெக்கர்
நுணங்கு துகில் நுடக்கம் போலக் கணங்கொள
ஊதை தூற்றும் உரவு நீர்ச் சேர்ப்ப!'' என
அழகுற விளித்து, ''சேர்ப்பனே! தலைவியின் பூவின் அன்ன புதுநலம் உண்டு, இவளைப் புணர்ந்தவச் செய்தியினை மறந்து, தலைவியின் நிலையை மதியா தொழுகுகின்ருய். ஆனல் யாங்கள், உனக்கு நேர்ந்த நெஞ்சத்தில் உன் பெருமையற்ற நடத்தையால் விளைந்த வருத்தத்தைத் தாங்கி, மாசில் கற்புடைக் குலமட மகளொருத்தி தான் அரிதில் நோற்றுப் பெற்ற மகவைப் பேய்பிடுங்க இழந்தது போல், சேணும் எம்மோடு வந்த நாணும் விட்டோம். அலர் தூற்றுவதாக விவ்வூர்'' என்று தோழி கூறுவது போல் அமைந்துள்ளது இப்பாடல்.

தலைவியின் பேரவலம் ''மாசில் கற்பின் மடவோள் குழவி போய் வாங்கக் கைவிட்டாங்குச் சேணும் எம்மோடு வந்த நாணும் விட்டோம்'' என்ற அடிகளால் உணர்த்தப்படுன்றது.

கற்பிற் பெற்றெடுத்த குழவி பெற்றவளுக்குப் பெருஞ் செல்வம்; இன்ப வாழ்வின் சின்னம்; உயிரினும் மேலானது; தானழிந்தாகிலும், தான் பெற்ற மகவுக்கு வாழ்வளிக்க வேண்டு மென்பது தான் கற்புடைத் தாயரியல்பு. இயல்பாகக் கற்பிற் பிறந்த குழந்தை மீதுதான் தாயார்க்கும் மற்றையோருக்கும் உண்மை அன்பு இருக்கும். திருவிசைப்பா வாசிரியர் இறைவன் தம்பால் வைத்த பேரருளைக் கூறும்போது—''கலைகள் தம் பொருளும் அறிவுமா யென்னைக் கற்பினிற் பெற்றெடுத் தெனக்கே முலைகள்தந் தருளும் தாயினும் நல்ல முக்கணுன்'' என்கிருர். இதைக் காட்டிலும் கற்புடை அன்னைக்குத் தன் மகவின் மேலுள்ள அன்பை விளக்கிவிட முடியாது. இவ்வாறு நெடுநாள் நோற்றுக் கற்பின் வழிநின்று பெற்றெடுத்த மகவைப் பேயிடம் தன் கண்காண இழந்தால் அவ்வன்னை நெஞ்சு என்ன பாடுபடும்? அவ்வன்னையின் நிலையில் தா னுள்ளாள் தலைவி, தலைவன் என்னும் பேய்பிடுங்கச் சேணும்வந்த தன் நாணத்தையும் கற்பையும் இழந்த பிறகு.

''சேணும் எம்மோடு வந்த நாணும் விட்டோம்'' என்றதில் பேய் வாங்க மகவைக் கைவிட்ட அன்னையின் கையறு நிலை நன்கு தெளிவாகின்றது. அழகு பெண்டிருக்குப் பருவம் வருங்கால் வருவது; பின் அழிவது. இடையில் தோன்றி இடையில் அழியக் கூடியது ஆனல் நாணம் பெண்டிரின் உயிர்க்குணம்; பிறந்த பொழுது உடன் தோன்றி மகளிர் வளர வளரத் தானும் உடன் வளர்வது சாநாள் வரை உடனுறைவது. திருக்கோவையார். ''.................. மற்றென் கண்மணிபோன்றொரு நாள் பிரியாது யிரிற் பழகியுடன் வளர்ந்த வரு நாணழிய வழல் சேர் மெழுகொத் தழிகின்றதே ''—என்றது காண்க. எனவே சாயலும் நாணமும் அவர் கொண்டார்' என்பது போலாது அழியக் கூடிய

# "சேனாவரையர் உரை மறுக்குந் திறம்"

[புலவர் மொ. இராசன், நீலமலை]

**முன்னுரை :**

தொல்காப்பியத்தி லுள்ள மூன்று அதிகாரங் களில் சொல்லதிகாரம் ஒன்றே உரை பல பெற்ற பெருமை உடையது. அப்பல உரைகளில், வட நூற்கடலை நிலை கண்டறிந்த சேனாவரையர் உரையே மிகச் சிறந்ததாக விளங்குகின்றது. அவர் உரைத்திறன் பலவற்றுள்ளும் பிறர் மனம் வருந்தா வண்ணம் பிறர் உரையினை மறுக்கும் திறம் குறிப்பிடத் தக்கது. அங்ஙனம் மறுக்குங்கால், தம் கருத்தால் மறுத்தலும், மாறுபட உரை கூறிய அவ்வாசிரியர் உரை கொண்டே மறுத்தலும், நூலாசிரியர்க்குக் கருத்தன்று என மறுத்தலும், இலக்கியச் சான்றுகளை எடுத்துக் காட்டி மறுத்தலும் என நான்கு வகையாக மறுக்கிறார். அம்முறையினை ஈண்டுக் காண்போமாக.

**தம் கருத்தால் மறுத்தல் :**

"செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல்" என்னும் நூற்பாவில் செப்பு, செவ்வன் இறை, இறைபயப்பது என இருவகைப்படும் என்பர். வினா எதிர் வினாதல், ஏவல், மறுத்தல், உற்றது உரைத்தல், உறுவது கூறல், உடம்படுதல் என அறுவகைப்படும் என்பர். அவ்வாறு உரையாசிரியர் கூறியது, பிறர் மதம் மேற்கொண்டு கூறியதன்றி, அவர்க்கது கருத்தன்றென மறுப்பர். அவ்வாறு மறுக்கும்போது தம் கருத்தால் மறுக்கின்றார். அஃதாவது, 'உயிர் எத்தன்மைத்து' என்ற வழி 'உணர் தற்றன்மைத்து' என்றல் முதலாயின அவ்வாறு வகைப்படுத்தியவற்றுள் அடங்காமையானும், அவர் வகைப்படுத்தியவற்றில் மறுத்தலும், உடம்படுதலும் வினவப்பட்டார் கண்ணன்றி ஏவப்பட்டார் கண்ணும் ஆகலானும் அவர்க்கது கருத்தன்றென மறுக்கின்றார்.

**உரையாசிரியரின் கருத்துக்கொண்டே மறுத்தல் :**

"உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே" என்னும் நூற்பாவில் 'ஆயிரு திணையின்' என்பதற்குச் சேனாவரையர், சொல் நிகழ்ச்சிக்குப் பொருள் இடமாகலின், ஆயிரு திணையின் கண்ணும் என ஏழாம் வேற்றுமை யுருபை விரிக்க வேண்டும் என்று கூறுகின்றார். ஆனால் உரையாசிரியர், 'இன்' சாரியை வேற்றுமை உருபு பற்றியும் பற்றாதும் நிற்கும் என்று இரண்டாம் வேற்றுமை உருபு விரித்துக் கூறுகின்றார். இதை மறுக்குமிடத்து உரையாசிரியர் உரையைக் கொண்டே மறுக்கின்றார். 'சாரியை உள்வழிச் சாரியை கெடுதலும், சாரியை உள்வழித் தன்னுருபு நிலையலும்' என்று இரண்டாவதற்குத் திரிபு ஓதினமையானும், 'செலவினும் வரவினும் தரவினும் கொடையினும்' என்புழியும் பிறாண்டு மெல்லாம் ஏழாவது விரிதற்கேற்பப் பொருளுரைத்தமையானும் உரையாசிரியர் உரை பொருந்தாதென அவர் கருத்தைக் கொண்டே மறுக்கின்றார்.

---

சாயல் போனாலும் தொலையட்டும் 'தாயிற் சிறந்த நாணும். நாணிற் சிறந்த கற்பும் உன்னாலழிந்தவே யெனத் தோழி பரிதவிக்கின்றாள். நாணும் விட்டோம்' எனவே கற்பும் விட்டோம் என்று பின்னையதைச் சொல்லாமல் விட்டதனால் அது மனத்தாலும் கருதரிய இழப்பு என்பதைப் பெற வைக்கும் தோழியின் அறிவே யறிவு. சொன்னால் வாய்சுடும், நினைத்தால் நெஞ்சு சுடும் அத்தகைய தன்றோ தலைவியின் இழப்பு

இனி 'அலர்க விவ்வூரே' என்ற இரண்டு சொற்களில் 'தொனி'யாக அமைந்துள்ள கருத்தை நோக்குங்கால் எம் முயிருக்குப் பற்றுக்கோடாக வமைந்திருந்த நாணும் கற்பும் போனபின் எமக்கிவ்வூர் அலர் தூற்றுவதுபற்றி யாது கவலை? நன்கு அலர்தூற்றி மகிழட்டும் இவ்வூர் என்னும் விரக்தி ஒலிக்கின்றதல்லவா.

'இழிவே இழவே அசைவே வறுமையென
விளிவில் கொள்கை அழுகை நான்கே'

என்ற மெய்ப்பாட்டியற் சூத்திரத்துள் 'இழவே' என்ற செரல்லிற்கு 'உயிரானும் பொருளானும் இழத்தல்' என்று பொருள் கூறிச் செயிறியத்தை மேற்கோள் காட்டுவர் உரையாசிரியர்: செயிற்றியம் அழுகை தோன்றும் இடங்களைக் கூறுகின்றது. அவற்றுட் சில;

1. நிலைமை யிழந்து நீங்குதுணை யுடைமை
2. தலைமை சான்ற தன்னிலை யழிதல்
3. சார் பிழைத்துக் கலங்கல்.

இவற்றைத் தலைவியின் நிலையோடு பொருத்திக் காண்க. பிரியேன், பிரியிற்றரியேன்' என்று தலைவன் கூறிய பொய்ச் சூளுரையை நம்பி உயிரினும் மேலான நாணத்தையும் கற்பையும் இழந்து, தன்னிலையிழந்து, தான் சார்தற்கிடம் என நினைத்த தலைவனைப் பிழைத்த தலைவியே இம்மெய்ப் பாட்டிற்குச் சிறந்த எடுத்துக் காட்டாம்.

நூலாசிரியர் கருத்தால் மறுத்தல்

"எப்பொருளாயினும் அல்லது இல்லெனில்
அப்பொருளல்லாப் பிறிது பொருள் கூறல்"

என்னும் நூற்பாவில் 'அப்பொருளல்லாப் பிறிது பொருள்' என்பதற்குச் சேனாவரையர், அப்பொருள் தன்னையே கூறாது, அப்பொருளல்லாத பிறிது பொருள் கூறுக என்பர். ஆனால் உரையாசிரியரோ, அதற்கு இனப் பொருளையே கூற வேண்டும் என்பர். அதை மறுக்குமிடத்து உரையாசிரியர் கருத்து நூலாசிரியர்க்கே கருத்தன்றென மறுக்கின்றார். உரையாசிரியர் கூறுவது போல் இனப்பொருள் கூறுவதே ஆசிரியர்க்குக் கருத்தாயின், ஆசிரியர், 'பிறிது பொருள் கூறல்' என்னாது 'இனப் பொருள் கூறல்' என்பர் அவ்வாறு கூறாததால் ஆசிரியர்க்கு அது கருத்தன்று எனவே உரையாசிரியர்க்கும் அது கருத்தன்று என மறுக்கின்றார்.

இலக்கியச் சான்று காட்டி மறுத்தல்.

"செலவினும் வரவினும் கொடையினும்
நிலை பெறத் தோன்றும் அந்நாற் சொல்லும்"

என்று தொடங்கும் நூற்பாவில் கூறும் அந்நான்கு சொல்லும், வருதலையும் செல்லுதலையும், தருதலையும், கொடுத்தலையும் குறிக்கும் எனப் பொருள் கூறுவர் சேனாவரையர். ஆனால் உரையாசிரியர், அந்நான்கு சொல்லும் கொடைப் பொருளன என்று கூறுவர். அதை மறுக்குமிடத்து இலக்கியத்தினைச் சான்று காட்டி மறுக்கின்றார். அம் மறுப்பாவது, "தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது" என்பதில் 'வாராது' என்பதை உரையாசிரியர் அமைத்தாராகலின் அவர்க்கது கருத்தன்றென்க. என்னை? 'வாராது' என்பது ஆண்டுக் கொடைப் பொருளில் வந்ததன்று ஆகலின்.

இந்நான்கு முறையினையும் ஒரே இடத்தில் கூறி மறுத்தல்.

"வியங்கோள் எண்ணுப்பெயர் திணைவிரவு வரையார்' என்னும் நூற்பாவிற்கு வியங்கோளோடு தொடரும் எண்ணுப் பெயர் திணைவிராய் வருதல் வரையார் என்பர் சேனாவரையர். ஆனால் உரையாசிரியர், எண்ணென்றது உறழென்றது ஆயிரண்டும் இனனென்றல் வேண்டுமென்பது இலக்கண மாகலான் 'யானு மென்னெஃகமும் சாறும்' என்புழியும் 'ஆவுமாயனும் செல்க' என்புழியும் இனனல்லாதன உடன் எண்ணப்படுதலின் வழு என்றும், அதனை அமைத்துக் கொள்க என்றும் உரைகூறுவர். இக் கருத்தினைச் சேனாவரையர் மறுக்குமிடத்து மேற்காட்டிய நான்கு முறைகளையும் முறைப்பட வைத்து மறுக்கின்றார். அஃதாவது: மேற்காட்டிய எடுத்துக்காட்டில் 'யானும் என்னெஃகமும் சாறும்' என்புழி வினைமுதலும் கருவியும் ஆகிய இயைபும், 'ஆவுமாயனும்' என்புழி மேய்ப்பானும் மேய்க்கப் படுவனவுமாகிய இயைபும் உண்மையால் அவை இனம் எனப்பட்டு உடன் எண்ணப்படும். இது தன் கருத்தினைக் கூறி மறுப்பது.

அடுத்து, 'யானை தேர் குதிரை காலாள் எறிந்தான்' என இடையியலில் உரையாசிரியரே திணைவிராய் வந்த எடுத்துக்காட்டினைக் காட்டுவர். எனவே இவ்விடத்தில் உரையாசிரியர் கூறும் உரை பொருந்தாது என உரையாசிரியரின் கருத்தினைக் கொண்டே மறுக்கின்றார்.

மேலும், பிற இடங்களிலும் எண்ணுத்திணை விரவுப்பெயர் அஃறிணை முடிபின' என ஆசிரியர்க்குத் திணைவிராய் முடிபு கோடற்கண் ஆராய்ச்சி ஆகலான், இவ்விடத்தில் உரையாசிரியர் உரை பொருந்தாது என ஆசிரியர் கருத்தினைக் கொண்டு மறுக்கின்றார்.

அடுத்து,

"நெடு நல் யானையும் தேரும் மாவும்
படையமை மறவரும் உடையம் யாம்"

எனவும், "இரு மனப் பெண்டிரும் கள்ளும் கவறும்" எனவும் திணைவிராய் வருதல் இலக்கியங்களில் பயின்று வருவதால் உரையாசிரியர் கூறும் உரை இவ்விடத்திற்குப் பொருந்தாதென இலக்கியச் சான்றுகள் காட்டி மறுக்கின்றார்.

முடிவுரை :

இவ்வாறு இந்நான்கு முறைகளையும் தனித்தனி இடங்களில் கூறியும், ஒரே இடத்தில் இந்நான்கு முறைகளையும் முறையே கூறியும் மறுத்துள்ளமை கண்டு கொள்க. இத்திறம் சேனாவரையர்க்கே உரித்தாகும். இத்தகைய சிறந்த உரையினைப் பல காலும் பயின்று இன்புறுவோமாக.

---

புலன்களுக்கு அடிமையானால் விலங்காவான். புலன்களை அடிமைப்படுத்தினால் ஞானியாவான்.

—அன்பன்

# "தோய்வு"

[புலவர் துரை. இராசசேகரன், வேட்டைக்காரன் புதூர்.]

உலகந் தோன்றி எவ்வளவோ காலமாயிற்று. அன்று முதல் இன்று வரை உயிரினங்கள் வாழ்கின்றன. அவ்வுயிரினத்துள் மக்கட்பெயரோடு நாமும் வாழ்ந்து வருகிறோம். நம்முடைய வாழ்நாட்களையெல்லாம் வாழ்ந்த நாட்களாகக் கருத முடியவில்லை. எத்துணை எத்துணையோ மாறுபட்ட சந்திப்புக்கள் நம்வாழ்வில் இடம் பெறுகின்றன. அவற்றில் எந்த அளவிற்கு நமக்குத் தோய்வு ஏற்பட்டதோ அந்த அளவை மட்டுந்தான் நம் வாழ்வாகக் கருதுதல் வேண்டும். நாம் காணும் அனைத்துமோ அல்லது நம்மை வந்து காணுகின்ற வாழ்வுகளோ முழுவதும் நம்மிடம் இடம் பெறுவதில்லை. இடம் பெற்றவற்றை நினைத்துப் பார்த்தால் கோடிக்குச் சிலவே நமக்குத் தோய்வுகளாக அமைகின்றன. எனவே தான் தோய்வு என்பதைப் பற்றி எழுதத் துணிந்தேன்.

மனம் என்ற ஒன்றுதான் நமக்குத் தோய்வு ஏற்படுவதற்குக் கருவியாக அமைகிறது. இம்மனம் நாம் தோன்றுங்கால் தோன்றிய ஒன்று, தோன்றியது மட்டுமன்று தானாகவே சிலவற்றை மதிக்கும் இயல்பினையும் உடையது. அம்மனத்தின் மதிப்புக்கு இலக்கானவை அதற்கும் நமக்கும் துன்பத்தையும் இன்பத்தையும் தந்தன. இன்பத்தை அவாவியோ அல்லது துன்பத்தை வெறுத்தோ நாம் மனத்தை நோக்கி இந்த வருவாய் வேண்டாமென்று சொன்னாலும் அது தன்னியல்பைச் செயல்படுத்தாமல் இருப்பதில்லை.

தலைவனைப் பிரிந்து வாடுகிறாள் ஒரு தலைவி. இந்த வேளையில் அவன், தனக்கு இன்பம் செய்ய மாட்டான் என்பதையும் நன்கு அறிந்துள்ளாள். ஆனால் அவள் மனம் மட்டும் அவனை நினைக்க மறக்கவில்லை. பிரிவால் ஏற்பட்ட தனிமை பொறுக்கமாட்டாத அவள், தலைவன் தன்னினை விற்கு வாராதிருத்தல் வேண்டுமென்று போராடுகிறாள். சூழ இருந்த தோழியர் வருந்தாதே என்று தேற்றுகின்றனர். அதனைக் கேட்ட தலைவி நான் எங்ஙனம் வருந்தாதிருப்பேன் எனக்கு வருந்த விருப்பம் இல்லை. நான் மறக்க முயன்றாலும் என்மனம் எனக்குச் சில எண்ணங்களைத் தந்து வருந்தச் செய்கிறது என்று கூறுகிறாள். இவ் விளக்கத்திற்குக் கருவாக அமைந்ததே கீழ்க் காணும் பாடல்,

> "உள்ளி னுள்ளம் வேமே யுள்ளா
> திருப்பினெம் மளவைத் தன்றே வருத்தி
> வான்றோய் வற்றே காமஞ்
> சான்றோ ரல்லர்யா மரீஇ யோரே"
>
> [குறு—கட்உ]

இதிலிருந்து நம்மனம் நம்விருப்பத்திற்கேற்ற வற்றையே நினைப்பதில்லை என்பது தெரிகிறது. எனவே மனமானது தன் ஆட்சியைச் செயல்படுத்துகிறது.

இத்தகைய ஒருமனமில்லாத போழ்து நமக்கும் தோய்வைப் பெற வாயில் திறக்கப்படுவதில்லை. இந்த நிலையில் மனம் என்ற ஒன்று வேண்டப்படுவதா? வேண்டாமென மறுக்கற்பாலதா? என்று சிந்திக்க வேண்டியிருக்கிறது. வந்து பொருந்தும் இன்பதுன்பங்களை நிலையாக அனுபவிக்கும் பொறுப்பை உணர்ச்சிக்குக் கொடுத்து விடுகிறது. என்ன கொடுத்தோம் என்று நினைத்துப் பார்ப்பதற்குக்கூட அதற்கு நேரமில்லை. ஒன்றைக் கொடுத்து முடிவதற்குள்ளாகக் கோடிக்கணக்கில் கொடுப்பதற்குத் தன்னைத் தகுதியுடையதாக ஆக்கிக்கொள்கிறது. அடுத்து மனம் கொடுத்த கொடையை உணர்ச்சி ஏற்றுசுவை, ஒளி ஊறு ஓசை நாற்றமென்ற ஐம்புலன்கள் வழியே வெளிப்போந்து மெய் வாய் கண் மூக்கு செவி என்பனவற்றைத் தனதாக்கிக் கொள்கிறது. இங்கு அவற்றால் நாம் படும் இன்ப துன்பங்கட்கு அளவேயில்லை. பிறகு உணர்ச்சியானது தன் பொறுப்பை உள்ளமென்ற ஒன்றின்பால் ஒப்புவித்துத் தன்னை மறைத்துக் கொள்கிறது. அது என்ன செய்யும் பாவம்! அதை ஆளாக்கிய மனம் மறைந்ததைப் போலவே அதுவும் மறைந்துவிடுவது இயற்கை தானே! ஈண்டுக் கூறிய உள்ளத்திற்கு உணர்ச்சி மனம் வாயிலாகப் பெற்றுக் கொடுத்த பேறுகள்தாம் நமக்குத் தோய்வுகளாக மாறுகின்றன. மனத்திடத்து மறந்து ஆறுதல் பெற்றோம். உணர்ச்சியிடத்தும் ஓய்வு பெற்றோம். ஆனால் இந்த உள்ளத்திடம் வந்த பிறகு அங்கு நிறைந்திருக்கும் இன்ப துன்பங்களில் நாம் தோய்வது என்றுமே தவிர்க்க முடியாததாக இருக்கிறது. இறுதியில் தோய்வுதான் நாம் என்ற நிலைக்கு வந்து விடுகிறோம். இவ்விடத்து நமக்கும் தோய்விற்கும் வேறுபாடேயில்லை. இடையே உணர்வு என்ற ஒன்றுமட்டும் நீரினுள் மீன் நனையாமல் நீந்துமாறு நமக்கும் தோய்விற்கும் இடையே மின்னிக் கொண்டிருக்கிறது. இந்த ஒன்றையும் இழந்தபோதுதான் நாம் செயலற்றவர்களாகி விடுகின்றோம். இத்தோய் வைத்தான் ஒரு பெரியவர், "பூண்ட ஐம்புலனில் புலப்படா இன்பம் புணர்ந்து மெய்யுணர்வினைப் பொங்க" என்று பாடுகிறார். இவ்வாறு நாம் தோய்ந்த தோய்வுகளைத்தான் நாம் வாழ்வாகக் கணக்கிடுகிறோம். கணக்கிடல் வேண்டும். இந்த நிலையில் நம் வாழ்க்கையைக் கணக்கிட்டுப் பருப்பொருளாக

நோக்கினால், நாம் வாழ்ந்த வாழ்க்கைப் பகுதியில், உண்மையான வாழ்வு எந்த அளவிற்குக் குறைந்த அளவினதாக இருக்கிறது என்பது தெள்ளிதின் புலப்படும். இதை உணர்ந்து சரி செய்து கொள்ளத்தான் 'தோய்வு' என்பதை எழுதத் தலைப்பட்டேன்.

மேற்கண்டவற்றை உணர்ந்த பிறகு நமக்குச் சில தோன்றுகின்றன. மனம் எவ்வளவு விரைவாக நினைக்கிறதோ அவ்வளவு விரைவாக மறத்தலையும் உடையது. மனம் தந்த பொருளான தன்னை வெகு விரைவில் மாற்றிக்கொள்வது உணர்ச்சி. அது வானத்து மின்னல்போல் தோன்றி மறையும் இயல்பையுடையது. உள்ளம் என்பது தன் இருப்பைக் காட்டாமல் வெகு ஆழத்தில் கிடக்கும் இயல்புடையது; இந்த ஆழத்தைச் சந்திக்கும் ஆற்றல் மனத்திற்கில்லை. எனவே தான் தன்னினும் பல பங்கு விரைவும் ஆற்றலுமுடைய உணர்ச்சியிடத்து ஒப்புவித்து உள்ளத்திற்குச் சேருமாறு செய்கிறது. உள்ளம் தனக்குக் கீழ் வேறெந்த இடமும் இல்லாத காரணத்தால் உணர்ச்சி கொடுத்த எல்லாவற்றையும் தானே ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று. இந்த நிலையில் அவ்வுள்ளம் முழுவதுமாக இருந்த உயிர் அதில் தோயாமல் இருக்க முடியவில்லை. தோய்ந்தாலும் தான் இன்னதிலே தோய்ந்தோம் என்று அனுபவியாமல் இருப்பதற்குத் தடையாக உணர்வு என்பது இடைநின்று உணர்த்திக்கொண்டிருந்தது. மனத்தைப் போல மறப்பதும், உணர்ச்சியைப் போல ஓய்வதும், உள்ளத்தைப்போல் தன்னியல் பிழப்பதும் உணர்வுக்கில்லை. அதுசெய்துவரும் உணர்த்தற்றொழிலிற்கு ஓய்வே கிடையாது. இந்த உணர்வுதான் உயிருக்கு மிக அண்மையான ஒன்றாக உள்ளது. எனவேதான் உயிர் உணருந் தன்மைத்து எனச் சான்றோர் சொல்லிப் போந்தனர்.

இந்த நிலையினதாகிய தோய்வு நமக்கு எவ்வாறு அமைகிறதோ அதற்கேற்பத் தான் நாம் உலகத்தைப் பார்க்கிறோம்; பார்க்க வேண்டும். இந்த அரிய வாய்ப்புப் பலருக்குக் கிட்டுவதேயில்லை. காரணம் இத்துறையில் அவர்கள் விரிந்த தன்மையே. இன்று நாமெல்லாம் எந்த அளவிற்கு விரிந்திருக்கிறோம் என்று நினைத்துப் பார்த்தால் மிக மேல்மட்டத்தில் மிதந்துகொண்டிருக்கும் மனத்தளவு கூட விரியவில்லை என்பது புலப்படும். விரிந்திருப்பின் நினைப்பும் மறப்பும் வருவதும் போவதுமாக இருந்திருக்குமே! இந்த மனமளவுகூட விரியாத நாம் உணர்ச்சியிழந்தவர்களாய் உள்ள மற்றவர்களாய், உணர்வையிழந்தவர்களாய்த் தவிக்கிறோம். இத்தகு காரணத்தாற்றான் நம்மைச் சூழ்ந்திருக்கும் உலகம் நம்மை விழுங்குகிறது ; இந்த நிலை மாறவேண்டுமானால், உணர்வின் எல்லை வரை நாம் காணும் உலகம் விரிந்தாக வேண்டியிருக்கிறது. இங்கே எழுவதுதான் பெரும் போராட்டம். இப்போராட்டத்தின் எச்சங்களே நம்முடைய ஏக்கங்களும், கனவுகளுமாக இருக்கின்றன. இந்த நிலையெல்லாம் மாறி உணர்ந்து உலகை நோக்குபவர்களாக நாம் மாறவேண்டும். பொருளை நோக்கி உணர்பவர்களாக இருத்தல் கூடாது. இன்று நாம் போய்க் கொண்டிருக்கும் போக்கில் இவையெல்லாம் இயலுமா? என்றெண்ணி இத்துறையில் ஓய்ந்து விடுவது பெருமை தராது. முயன்று உழைத்துப் பார்ப்போம். இறுதியில் வெற்றி பெறுவோம்.

---

வேண்டத்தக்கது அறிவோனும் வேண்ட முழுவதும் தருவோனும் நலமாண்ட ஆண்டவன்.

—மணிவாசகர்

⁂ ⁂ ⁂

இனிதினிது தனிமையினிது. கொடிது கொடிது இளமையில் வறுமை.

—ஔவையார்

⁂ ⁂ ⁂

தன்னை அறிந்திடும் தத்துவஞானி முன்னைப் பிறப்பின் முடிச்சவிழ்ப்பான்.

—திருமூலர்

* * * * *

மனிதனின் இறுதியில்கூட வருவது புண்ணியமும் பாவமுமே!

—பட்டினத்தடிகள்

# "மெய்ப்பாடு"

[புலவர் கு. கோ. முருகன், பேரூர்.]

செந்நினகரன்பால் முத்தமிழும் கேட்டே அறிந்த அகத்தியரின் இயற்றமிழ் மாணாக்கரிற் றலை சிறந்த தொல்காப்பியரா லியற்றப்பட்ட தொல்காப்பியம் இறையருளால் முழுதும் கிடைக்கப்பெற்றுள்ளோம். அதன் பொருள் அதிகாரத்திலிருந்து நாம் அறியும் பல அரிய செய்திகளுள் ஒன்று மெய்ப்பாடாகும். மெய்ப்பாடு கூறும் போது தொல்காப்பியர் நாடக நூலார் வேண்டும் மெய்ப்பாட்டின் வகைகளை விளக்குகின்றார். அவ்வகைகளை மட்டும் பேராசிரியரோடு கலந்து இங்குக்காண்போம்.

மெய்ப்பாடு:—உலகத்தார் உள்ள நிகழ்ச்சி ஆண்டு (உள்ளத்து) நிகழ்ந்தவாறே புறத்தார்க்குப் புலப்படுவதோராற்றான் வெளிப்படுப்பது, ஆதலால் மெய்ப்பாடாவது பொருட்பாடு என்று பொருள் காண்பர் பேராசிரியர். இளம்பூரணரோ ஒருவன்கண் நிகழும் அச்சம் முதலிய, காண்பார்க்கு அவன் மாட்டு நிகழும் சத்துவங்களினால் புலனாதலால், மெய்யின்கண்தோன்றுவது மெய்ப்பாடு என்பர். 'மெய்' என்பதை முன்னவர் 'பொருள்' என்றும் பின்னவர் 'மெய்' என்றும் உரை கூறி வேறுபடுவர்.

நாடக நூலார் வேண்டும் பகுதியினைத் தொல்காப்பியர்,

"பண்ணைத்தோன்றிய எண்ணான்கு
பொருளும்
கண்ணிய புறனேநானான்கென்ப." எனவும்

"நாலிரண் டாகும் பாலுமா ருண்டே."

எனவும் கூறிச்செல்கின்றார். இந்நூற்பாக்களின் கருத்து: இன்ப விளையாட்டினுள் தோன்றிய எண்ணான்கு பொருளும் கருதியபகுதிகள் நாடக ஆசிரியர்க்கு நானான்காய் அடங்கும்; அவ்வாறு நானான்காதலே அன்றி எட்டாதலும் உண்டு என்பதாகும்.

இனி இப்பகுதிகள் எல்லாம், இவை யிவை என்பதனை மேலே நோக்குவோம். அப்பகுதிகள் இவை என்பதில் இளம்பூரணரும் பேராசிரியரும் சிறிது மாறுபடுவர். அம்மாறுபாடுகளை ஆங்காங்குக் காண்போம்.

முப்பத்திரண்டாவன:— இளம்பூரணர் கூறும் வகை—ஒன்பது மெய்ப்பாடுகளில் சமநிலை ஒழிந்த எட்டு மெய்ப்பாடுகளையும் எடுத்துக், கொண்டு அவற்றிற்கு ஏதுவாகத் தொல்காப்பியர், பின் கூறுகின்ற 'எள்ளல் இளமை' முதலாக 'விளையாட்டு, ஈருக உள்ள முப்பத்திரண்டு என்பது இளம்பூரணர் கூறும்வகை.

பேராசிரியரும் எட்டு மெய்ப்பாடுகளே கொள்வர். ஆனால் அவை, இளம்பூரணர் கூறியவற்றில் சமநிலையினை ஒழித்து, உருத்திரத்தினைக் கூட்டியவையாம். இவ்வெட்டு மெய்ப்பாடுகளோடும், சுவைக்கப்படும் சுவைப் பொருள், அதனை நுகர்ந்த பொறியுணர்வு அல்லது சுவை, அது காரணமாக உளத்து நிகழும் குறிப்பு, அக்குறிப்புக்காரணமாக மெய்யின்கண் தோன்றும் சத்துவம் அல்லது விறலி, என்றநான்கினையும் கூட்டி உறழ முப்பத்திரண்டாம் என்பர் பேராசிரியர்.

இனி சுவைப்பொருள் முதலிய நான்கினை இவையென்பதனைக் காண்போம் காணுமுன், அறிய வேண்டிய ஒரு செய்தியினை முதலில் காண்போம்.

சுவையென்பது கரும்பு முதலிய சுவைப் பொருளை நுகர்ந்த நாவாகிய பொறி உணரும் இனிப்பு கைப்பு முதலியவைகளே. ஆனால் நகை முதலியவற்றையும் நாம் நகைச்சுவை, அழுகைச்சுவை என—சுவை எனப்பெயரிட்டு வழங்குகின்றோம். வேம்பு சுவைத்தவன் உளத்து வெறுப்பு முதலிய குறிப்பும், அது காரணமாகப் புறத்துத் தலை நடுக்கம் முதலியவும் நிகழும். இது போலவே அஞ்சத்தக்கனபிற கண்டவழி கண்டானும், குறிப்பும் மெய்ந்நடுக்க முதலியவும் எய்துவதால், இவ்வொப்புமை காரணமாக அச்சம் நகை முதலியவற்றைச் சுவை என்பனவாகப் பெயரிட்டு அழைக்கின்றோம். எனவே இவ்வாறு வழங்குவதை 'ஒப்பினானாய பெயர்' என்பதை அறியவேண்டும். இதை அறிந்தபின், சுவைப் பொருள் முதலிய நான்கினையும் அறுசுவைப் பகுதியோடு ஒப்பித்து விளங்கிக்கொள்வோம்.

1. சுவைப்பொருள்:—சுவைக்கப் படுகின்ற-சுவைக்கு ஏதுவாய-சுவையையுடைய பொருள். வேம்பு என்ற பொருள் கைப்புச்சுவைக்கு ஏதுவாய்ச் சுவைக்கப்படுவதாய் இருத்தலால் சுவை பொருள் எனப்படும், அதுபோல, அச்சம் முதலிய மெய்ப்பாடுகள் ஒருவன்கண் நிகழ ஏதுவாக விளங்குகின்ற அரிமா, அரவு, முதலிய சுவைப் பொருள் எனப்பெறும்.

இவற்றையெல்லாம், சுவைப்பொருள் அல்லது சுவைகோடல்என்று கூறுவது பொருந்துமாற்றைச் சிறிது நோக்குவோம். ஒருவனுக்கு அச்சம் தோன்றவேண்டுமாயின் அவன் அஞ்சத்தக்கனவான அரிமாமுதலியவற்றைக் காண்டல்



உயர்திரு. நா. மகாலிங்கம் B.Sc., M.I.E., அவர்கள்
தமிழ்க் கல்லூரிக் கழகத்தின் இன்றைய தலைவர்.



உயர்திரு. கோவைகிழார்
ம. இராமச்சந்திரஞ் செட்டியார் B.A., B.L., அவர்கள்.



← உயர்திரு. கு. வேங்கடாசலம் அவர்கள், பீ.ஏ., எம்.இடி.,
கல்லூரிக் கழகச் செயலாளர், கல்லூரிப் பொறுப்பாளர்.





உயர்திரு. வெ. சு. சின்னசாமி கவுண்டர் அவர்கள்
கல்லூரிக் கழகத்தின் துணைத்தலைவர்.

# "செங்கோட்டு வேலவன்"

புலவர் - இரத்தினம் (வட்டூர், சேலம் மாவட்டம்)

ஆன்மாக்கள் உய்யும் பொருட்டுச் சிறிய பணி செய்வோர்க்கும் பெரிய அருள் புரியும் கலி யுகவரதனுகிய முருகக்கடவுள் எழுந்தருளிய தலங்கள் நம் செந்தமிழ் நாட்டில் பல உள. அவைபெரும்பாலும் மலைகளாகும்.

சீர் கெழு செந்திலுஞ் செங்கோடும்
வெண்குன்றும்
ஏரகமும் நீங்கா விறைவன்........."
(குன்றக்குரவை)

எனச் சிலம்பு கூறுகிறது. இதில், "செங்கோடு" என்பது, திருச்செங்கோடாகும் என்று அரும்பத வுரையாசிரியர் கூறிப் போந்தார். சிலப்பதிகாரம் கி. பி. இரண்டாம் நூற்றுண்டைச் சேர்ந்த தென்பர். இதனுல் செங்கோட்டில் முருகன் எழுந்தருளிய பழமை புலனுகிறது, "குன்றுதோ ருடலும் நின்றதன் பண்பே' என்று நக்கீரர் பேசுவார். திருமுருகாற்றுப் படையை நாடோ றும் ஓதினுல் முருகன் மனக்கவலையை நீக்கி, நாம் நினைத்த பொருளெல்லாம் தருவானென்று கூறுவர் சான்றோர். அறுபடை வீட்டிலொன் ருகிய குன்றுதோருடலில் "திருங்செங்கோடும்" ஒன்ருகும். இச் செங்கோடு, கொங்கேழ் சிவத் தலங்களில் ஒன்ருகும். இங்கு திருஞான சம்பந்த சுவாமிகள் மாதொரு பாகனைப் (அர்த்த நாரீசுரர்) பற்றி இரண்டு பதிகங்கள் பாடியருளி னுர். இங்குள்ள முருகனே அருணகிரியாரை மிகமிக ஈர்த்தவன். இம் முருகனுக்குச் 'செங் கோட்டுவேலவன்" என்று பெயர். அவன் வேலேந்திய திருக்கரத்தோடும் ஒரு முகத்தோ டும் குன்றிலுறைகின்ருன். அருணகிரியார் கந்த ரலங்காரம், கந்தரநுபூதி, திருப்புகழ் ஆகிய நூல் களில் செங்கோடன் அருட்பெருக்கைக் கூறு கிருர். அந்நூலின் துணைகொண்டு அவனரு ளால் அவன்தாள் வணங்கி அவனைப்பற்றி ஒரு சிறிது கூற விழைகின்றேன்.

கந்தரலங்காரத்தில் அவனுடைய மென்மை யான மலர் போன்ற திருவடிகள் விழிக்குத் துணையாகும்; நம்முடைய மொழிக்குத் துணையா வது "முருகா" வெனும் மூன்றெழுத்து மந்திரமா கும்; நாம் செய்த பழி நீங்கத் துணையாக விருப் பன குமரனின் ஈராறு தோள்களாகும்; நாம் அஞ்சி அஞ்சிச் செல்கின்ற வழிக்குத் துணையா வது செங்கோடனின் வேலும் மயிலுமேயாகும். இதனை,

"விழிக்குத் துணை திரு மென்மலர்ப்
பாதங்கள் மெய்ம்மை குன்று
மொழிக்குத் துணைமுரு காவெனு
நாமங்கள் முன்பு செய்த
பழிக்குத் துணையவன் பன்னிரு
தோளும் பயந்த தனி
வழிக்குத் துணைவடி வேலுஞ்
செங்கோடன் மயூரமுமே."

என்று பாடியுய்வித்தார்.

இன்ப துன்பத்திலிருந்து விலகி, நன்மை தீமையெல்லாம் அவனருட் செயலென்று நிற்கும் நாளெந்நாள் வருவது அது வரும்படியாக "செங்கோடனெ"ன்று சொல்கின்ருயல்லை; குன்றமெட்டுங் கிழித்த வேலென்கிலை; நெஞ்சே! உனக்கு எவ்வாறு முத்தி கிட்டுமென்று நெஞ்சை நோக்கிக் கூறுகிருர். இதனை,

"சுழித்தோடு மாற்றின் பெருக்கானது
செல்வந் துன்ப மின்பங்
கழித்தோடு கின்றதெக் காலநெஞ்
சேகரிக் கோட்டு முத்தைக்
கொழித்தோடு காவிரிச் செங்கோட
னென்கிலை குன்றமெட்டுங்
கிழித்தோடு வேலென்கிலை
யெங்ஙனே முத்தி கிட்டுவதே."

என்னும் பாடலால் அறியலாம்.

சேந்தனும் கந்தனும் செங்கோட்டு வெற் பனும் செஞ்சுடர் வேல் வேந்தனும், செந்தமிழ் விரித்தோனும் வள்ளி மணுளனும் மணம் பொருந்திய கடம்பமாலையைஅணிந்தவனும் கார் மயிலை ஊர்தியாக யுடையவனுமாகிய முருகக் கடவுளை, எப்பொழுதும் மறவாதவர்க்கு ஒருசிறி தும் குறைவில்லை என்பதனை,

"சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு
வெற்பனைச் செஞ்சுடர்வேல்
வேந்தனைச் செந்தமிழ் நூல்விரித்தோனை
விளங்கு வள்ளி
காந்தனைக் கந்தக் கடம்பனைக்
கார்மயில் வாகனனைச்
சாந்துணைப் போதுமற வாதவர்க்
கொருதாழ் வில்லையே."

எனக் கந்தரலங்காரத்தில் பாடியருளினுர்.

இனிக், கந்தரநுபூதியில் நாம் இறந்து போனுல் சுற்றத்தினர் கூடி அழும்படிப் பய னின்றிச் சாகாமல் எடுத்த உடல் பிறவிப் பயனை அடையும் வண்ணம் மெய்ப்பொருளைத் திரு வருள் புரிந்தருளினுர் நாகாசல வேலன். வணங்குவோருக்கு நால்வகைக் கவிகளும் எளி

தில் பாடும்படி கொடை கொடுக்கும் வள்ளலே தேவலோகத்திற்குத் தலைவனே, எனுங் கருத்தமைய

"கூகா வெனவென் கிளைகூடி யழப்
போகா வகை மெய்ப்பொருள் பேசியவா
நாகா சலவே லவநா லுகவித்
தியாகா சுரலோ கசிகா மணியே."

என்று கூறினர்.

திருப்புகழில், மங்கையர் ஆசைவலையில முந்தி மங்காமல், உந்தன் திருவருள் தருவாயாக என்று பாடியுள்ளார். அப்பாடல்,

"பந்தாடி அங்கம் நொந்தார் பரிந்த
பைந்தார் புனைந்த குழல்மீதே
பண்பார் சுரும்பு பண்பாடு கின்ற
பங்கேருகம் கொள்முகம் மீதே
மந்தாரம் மன்றல் சந்தாரம் ஒன்றி
வன்பாதகஞ்செய் முலைமீதே
மண்டாசை கொண்டு விண்டாவி நைந்து
மங்காமல் உன்தன் அருள்தாராய்.
கந்தா அரன்தன் மைந்தா விலங்கு
கன்று முகுந்தன் மருகோனே
கண்டார் புகழ்ந்த நன்கார் மடந்தை
கந்தா அரம்பை மணவாளா
செந்தா தடர்ந்த கொந்தார் கடம்பு
திண்டோள் நிரம்ப அணிவோனே
திண்கோடரங்கள் எண்கோடுறங்கு
செங்கோடமர்ந்த பெருமாளே."

செந்நிறம் பொருந்திய-அடியாரின் பகைவரிடத்தில் சினத்தையுடைய-கூர்மை பொருந்திய வேலும், கண்டாரால் விரும்பப்படுகின்ற அழகிய முகமும், பன்னிரு தோளும், தாமரைமலர் மணத்தையும், முத்துக்களையும் சொரியும் நீர்நிலைகளையுடைய செங்கோடனைக் குமரா என்று எங்கே நினைப்பினும் அங்கே என்முன் நிற்பனென்னும் பொருள்பட,

"செங்கே ழடுத்த சினவடி வேலுந்
திருமுகமும்
பங்கே நிரைத்தநற் பன்னிரு
தோளும் பதுமமலர்க்
கொங்கே தரளஞ் சொரியுஞ்
செங்கோடைக் குமரனென
எங்கே நினைப்பினு மங்கேயென்
முன்வந் தெதிர்நிற்பனே.

எனப்பாடி யுய்வித்தார்.

பிற்கால நூலாகிய திருச்செங்கோட்டுக் கலம்பகம், யமகக் காதலென்னும் நூல்களிலிருந்து முறையே ஒவ்வொரு செய்யுள் காட்டுவோம்.

முருகனுக்குரிய பல பெயர்களிலொன்றாகிய "செட்டி"யென்னும் பெயர்கொண்டு சிலேடை நயம்படக் கூறுகிறார்.

மூன்று பெண்கள் அம்மானை விளையாடுகிறார்கள். அவர்களில் ஒருத்தி, மேகம் அடர்ந்த மிகப்பெரிய செங்கோட்டு மலையில் வாழ்கின்ற சுப்ரமணியக்கடவுள், கடையில்லாத செட்டியார் என்று கூற, கடையில்லாத செட்டியாராக இருந்தால், மிகப்பெரிய பொருள் தருவாரோ என்று வினவுகின்றாள். அதற்கு, மூன்றுமவள், பணம் கொடுப்பவர்க்கு மிகப் பெரிய பொருள் தருவார் என்றும், கற்பகத்தருவின் அடியில் உள்ள தேவர்க்குத் தேவலோகம் தருவார் என்றும், இருபொருள்படக் கூறுகிறாள் அப்பாடல் :—

"மால் அடர்ந்த செங்கோட்டு மாமலைவாழ்
சுப்ரமண்யச்
சீலர் கடை இல்லாத செட்டியார்
அம்மானை
சீலர் கடை இல்லாத செட்டியார்
ஆமாயின்
சாலவிரும் பண்டம் தருவாரோ
அம்மானை
தருவார் புனிதர்க்குத் தருவார் காண்
அம்மானை."

(திருச்செங்கோட்டுக் கலம்பகம்)

இதில் முதல் மூன்றடிக்குப் பொருள் வெளிப்படை. இறுதி இரண்டடிக்கு இரு விதமாகப் பொருள் கொள்ளலாம்.

(சால + இரும் பண்டம் = மிகப்பெரிய
பண்டம்)
சாலவிரும்பு + அண்டம் = மிக விரும்புகின்ற
தேவலோகம்
தருவார்—கொடுப்பார்
தரு + ஆர்—கற்பகத்தரு

இனி, யமகக் காதலில்,

வேழ முகத்தையுடைய நாரிவிநாயகனும் (செங்கோட்டு விநாயகனுக்கு 'நாரி விநாயகன்' என்று பெயர்) பழநியின்கண் எழுந்தருளிய (இந்திரனுடைய) யானை முகத்திலிருந்து தோன்றிய தெய்வயானை அம்மைக்குச் சிறந்த கணவனும் காப்பாற்றுவார்கள். (வி + நாயகன் வி—சிறந்த நாயகன்—கணவன்) இதனை,

"வேழ முகநாரி விநாயகனும் தென்பழனி
வேழ முகநாரி விநாயகனும் காப்பாமே."

மேலும்,

திருமாலுக்கு, மருகனும் (சங்கு + அரி) உமையம்மைக்கு மகனும் (சங்கரி—உமையம்மை கணபதிக்குத் தம்பியுமாகிய (சம் + கரி)வன், சண்முகனென்று கூறுகிறார். தமிழ்நாட்டில், யமக அந்தாதி போன்ற நூல்கள் தோன்றியதேயன்றி, யமகக்காதல் கொங்கு நாட்டிற்கே யுரியதாகும்.

"சங்கரிக்குத் தன் மருகன் சங்கரிக்குத்
தன் தனயன்
சங்கரிக்குத் தம்பியுமே தானான
சண்முகனார்."

இதுகாறும் கூறியவாற்றால், செங்கோடு சிவத்தலமாக விளங்குவதோடு, முருகத்தலமாக விளங்குகின்ற தென்பதூஉம்; செங்கோட்டின் காலப்பழமையும்; செங்கோடன் அருட்கடலில் திளைத்து அழுந்தும் அருணகிரியார், அவனைப் பலவாறாகப் புகழ்ந்து, எவ்வாறு வணங்குகின்றாரென்பதூஉம் திருச்செங்கோட்டுக் கலம்பகம், யமகக்காதல் முதலிய நூல்கள் இன்னவாறு கூறுகிறதென்பதூஉம், பிறவும், பெற்றாம்.

# "சேனாவரையர் காட்டும் உவமைகள்"

[புலவர் கோ. சரசுவதி, கோவை]

முன்னுரை

உயர்தனிச் செம்மொழியாம் நம் தமிழ் மொழிக்குக் கண்ணின் கருமணியாய்த் திகழும் தொல்காப்பியத்தின் சொல்லதிகாரத்திற்கு உரைகண்ட சான்றோரில் ஒருவர் சேனாவரையர். இவர் தாம் எடுத்துக் கூறும் கருத்துக்களை, அவ்வக் கருத்துக்களுக்கேற்ப உவமை காட்டி விளக்கும் திறனுடையவர். தாம் கூறும் இலக்கணத்திற்கு இலக்கியமேயன்றி இலக்கணத்தையும் உவமையாகக் காட்டுதல், ஒரே உவமையைப் பல இடங்களில் கூறிப் பல கருத்துக்களை விளக்குதல் ஆகியன இவரிடமிருந்த ஒரு தனிச் சிறப்பாகும். அங்ஙனம் காட்டும் உவமைகள், வழக்கு செய்யுள் ஆகியவற்றில் இவருக்கிருந்த பயிற்சித்திறனையும், இசைநூற் புலமையினையும் எடுத்துக் காட்டவல்லன. எனவே, அத்தகைய உவமைகள் சிலவற்றை எடுத்துக் காட்டி, அவற்றின் கருத்துக்களை, ஈண்டு யான் ஒரு சிறிது கூற விழைகிறேன்.

வழக்கில் வரும் உவமைகள்

"நொய்யும் நுறுங்கும் களைந்து அரிசி அமைத்தாரை, அரிசியாக்கினர் என்பவாகலின்."

"உயர்திணை யென்மனார் மக்கட்சுட்டே" என்னும் முதற் சூத்திரத்துள் கிளவியாக்கத்திற்குப் பெயர்க் காரணம் கூறுதற்கு இவ்வுவமையை எடுத்துக் காட்டியுள்ளார். அஃதாவது, நொய்யினையும் நுறுங்கினையும் களைந்து அரிசி அமைத்தாரை அரிசியாக்கினர் என்று கூறுகிறோம். அதுபோல வழுக்களைந்து சொற்களை ஆக்கிக்கொண்டமையான் இவ்வோத்துக் கிளவியாக்கமாயிற்று எனக் கிளவியாக்கத்திற்குப் பெயர்க் காரணம் கூறுகிறார். ஆக்கம்—அமைத்துக்கோடல்.

"அறமாவது அழுக்காறின்மை என்றாற் போல"

"னஃகான் ஒற்றே ஆடூஉ அறிசொல்" என்னும் சூத்திரத்துள் (5) னஃகான் ஒற்றுக்கு இவ்வுவமையைக் கூறியுள்ளார். எங்ஙனமெனின்,

"அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல்
நான்கும் இழுக்கா இயன்றது அறம்."

அழுக்காறு முதலிய நான்கும் நீங்குதலே அறமாயினும், அழுக்காறு நீங்க, ஏனையன நீங்கும். அதனால், சிறப்பு நோக்கி, "அறமாவது அழுக்காறின்மை" என்றார். அதுபோல, னகர ஒற்று, ஏனைய பகுதி முதலியவற்றுடன் வந்தே ஆண்பாற் பொருளையுணர்த்துமாயினும், பாலுணர்த்துஞ் சிறப்பு நோக்கி, "னஃகான் ஒற்றே ஆடூஉ அறிசொல்" என்றார்.

"ஆதீண்டு குற்றி என்பதுபோல"

இவ்வுவமையை, "வினைவேறுபடூஉம் பல
பொருளொரு சொல்"

என்னும் நூற்பாவில் (சூ. 52), வினையாற்பெயர் கொடுத்ததுபற்றிக் கூறுமிடத்துக் கூறியுள்ளார்.

அஃதாவது, ஆக்களைக் கருதி அவை உராய்வதற்கெனக் கற்களை அமைத்தாலும், ஆவையன்றி, எருது, நாய் போன்ற பிற விலங்குகளும் சென்று அக்கல்லில் உராய்கின்றன. எனினும், ஆவைக் கருதியே, அக்கற்களை அமைக்கின்றோம். இது, ஆதீண்டுகுற்றி" என்பதாகும். அதுபோல, வினையேயன்றி, இனமுஞ் சார்பும் உளவேனும், வேறுபடுத்தற்கண் வினை சிறப்புடைமையின், அவ்வினையாலேயே "வினை வேறுபடூஉம்" எனப் பெயர் கொடுத்தார்.

ஒருசாதிக்கண் அணைந்த சாதி—இனம்
அணைந்த சாதியின்றி ஒருவாற்றான்
இயைபுடையது—சார்பு.

"இவ்வாடையும் அந்நூலான் இயன்றது என்றாற் போல."

இவ்வுவமையை, "அதற்கு வினையுடைமையின்...... அப்பொருட்கிளவியும் அதன்பால என்மனார்" என்னும் சூத்திரத்துள் (சூ. 76) "அப்பொருள்" என்பதற்கு, எடுத்துக் காட்டியுள்ளார்.

"அப்பொருள்" என்றது அன்ன பொருளை அஃதாவது, அத்தகைய அதே போன்ற என்னும் பொருளையுடையது; சுட்டன்று. இதை விளக்குதற்கு, இவ்வுவமையை எடுத்துக் காட்டியது மிகச் சுவையுடையதாகும். எங்ஙனமெனின், ஒருவன் ஒரு ஆடையை உடுத்தி வர, இன்னொருவனும் அதே போன்ற ஆடையை உடுத்தி வருவானாயின், இருவரும், தத்தம் ஆடை ஒத்திருப்பது கண்டு, "இவ்வாடையும் அந்நூலான் இயன்றதே" எனக் கூறிக்கொள்வர். இங்கு 'அந்நூல்' என்பது' அவரவர் ஆடையிலுள்ள

நூலையன்றி, அந்நூலைப் போன்ற பிற நூலையே குறிக்கும். அதுபோல, "அப் பொருள்" என்பதும், 'அது போன்ற' என்றபொருளையே குறிக்கும்.

மேற்கூறிய உவமைகளெல்லாம், வழக்கிலிருந்து எடுத்துக் காட்டப்படுவதால், உலகியல் வழக்கங்களை அறிய முடிகிறது.

இலக்கண உவமைகள்

செயற்கு என்னும் வினையெச்சம், உருபேற்று நின்ற தொழிற் பெயரோடு ஒப்புமையுடைத்தாயினும், உருபும் பெயரும் என்றாகாது, பகுப்பப் பிளவு பட்டிசையாது ஒன்றுபட்டிசைத் தலான், அதனின் வேறாயினாற் போல''

இவ்விலக்கண உவமையை, "சுட்டு முதலாகிய காரணக்கிளவி' என்னும் சூத்திரத்துள் (சூ. 40), சுட்டு முதலாகிய காரணக்கிளவி, உருபேற்று நின்ற சுட்டு முதற் பெயரோடு ஒப்பதோர் இடைச்சொல் எனவே, அதனின் இது வேறும், என்பதை விளக்க எடுத்துக் காட்டியுள்ளார்.

அஃதாவது, ''செயற்கு என்னும் வினையெச்சம், உருபேற்று நின்ற தொழிற் பெயரோடு (செயல்+கு) எழுத்துவகையான் ஒப்புமையுடைத்தாயினும், உருபும் பெயரும் என்றாகாது, பகுப்பப் பிளவுபட்டிசையாது, ஒன்றுபட்டிசைத் தலான் அதனின் வேறாயினாற்போல. இச் சுட்டு முதலாகிய காரணக்கிளவியும், உருபேற்ற சுட்டுப் பெயரோடு எழுத்துவகையான் ஒப்புமையுடைத்தாயினும் பிளவுபட்டிசையாது ஒன்றுபட்டிசைத்தலான், வேறாகவே கொள்ளப்படும்.

ஒரே உவமை, பல இடங்களில் வருதல்

''வழி போயினாரெல்லாம் கூறைகோட்பட்டார்''

இவ்வுவமையை "அன்னபிறவும் தொன்னெறி பிழையாது" என்னும் சூத்திரத்துள் (சூ. 101) கூறியுள்ளார். அஃதாவது "இருவயினிலையும் என்றாரேனும் "வழிபோயினாரெல்லாம் கூறைகோட்பட்டார்" என்ற வழி கூறைகோட்படுதல், கடவுளரை யொழித்து, ஏனையோர்க்கேயாயினவாறு போல, ஏதுப்பொருட்கண்வரும் மூன்றுவதும், ஐந்தாவதும் ஒரு பொருளேபற்றி நிற்றலின், பிறிதொன்றன் பொருளும், தன் பொருளுமாகிய இருவயினிலையங்கேலாமையான், அவற்றை யொழித்து, அஃதேனையவற்றிற்கேயாம். என்னை? ஏனையதன் பொருளில் தீராது, பிறிதொன்றன் பொருட்கண் சேறலுடைமையான் இருவயினிலையற்கும் ஏற்கும்.

மேற்கூறிய, அவ்வுவமையையே, "எழுத்துப் பிரிந்திசைத்தல் இவணியல்பு இன்றே" என்னும் சூத்திரத்துள் (சூ. 395) கூறியுள்ளார்.

அஃதாவது. முதனிலையும், இறுதி நிலையுமாக எழுத்துக்கள் பிரிந்து வேறுவேறு பொருளுணர்த்தல், உரிச்சொல்லிடத்து இயைபுடைத்தன்று. எனவே, வினைச்சொல்லிடத்தும், ஒட்டுப் பெயரிடத்தும், அங்ஙனம் பொருளுணர்த்தல் இயல்புடைத்து. "கூறைகோட்படுதல் ஏனையோர்க்கன்றிக் கடவுளர்க்கு எய்தாதவாறு போல,' பிரிதலும் பிரியாமையும் பொருளுணர்த்துவனவற்றிற்கேயாகலின், இடைச் சொற்கு இவ்வாராய்ச்சி எய்தாது.

முடிவுரை

"சேனாவரையம்" என்னும் பெருங்கடல். அலைகளினால் ஒரு சிறு திவலை, வெளியில் தெறித்தல் போலாகும், யான் ஈண்டுக் கூறிய இவ்வுவமைகள். இவ்வுவமைகளேயன்றி, இன்னும அவரது உரைச்சிறப்புக்கள், தருக்கநூற் புலமை, இலக்கியத்திற்குப் பொருள் நயம்பட வுரைத்தல், சொற்பொருள் விரித்தல் எனப் பல உள்ளன. அவற்றுள், ஈண்டு யான், உவமைகள் வாயிலாகச் சில உலகியல் வழக்கங்களையும், இலக்கணங்களைக்கொண்டே உவமை காட்டிச் சூத்திரக் கருத்தை இனிது விளங்கச் செய்வார் என்பதையும் எடுத்துக் காட்டியுள்ளேன். எனவே, ''ஆனா இயல்பிற் சேனாவரையர்', எனத் திகழும் இவரது, நவில்தொறும் நூனயம் போலும் நல்லுரையினைப் பன்முறை படித்துச் சுவைத்து இன்புறுவோமாக!

---

*அரும் பொறியின்மை பழியன்றியார்க்கும் அறிவறிந்தாள் வினையின்மை*
*பெரும்பழி எனலான் ஒருவன் வீட்டின்பம் பெறுமைகொடு இகழ்கலர் பெரியோர்*
*விரும்பலீது அடையும் வகையருட் குருவான் விளங்கியும் உளங்கையிற் கனிபோல்*
*வரும்படி நாளும் முயன்றுறு என்போல் மதியிலார் தமை இகழ்வதலால்.*

—வைராக்கிய தீபம் 75.

# "தொகை"

புலவர் இரா. பட்டு, மதுக்கரை

தண்டமிழின் தனிப் பெருமையை விளக்கும் சிறந்த இலக்கண நூல்கள் தொல்காப்பியமும், நன்னூலுமாம். தொல்காப்பியம் முதனூலாக விளங்குவது. எழுத்து, சொல், பொருளாகிய முப்பகுதிகளையுடையது. நன்னூல் அதன் வழி நூலாக அமைந்துள்ளது. இவையிரண்டிலும் கூறப்படும் தொகை பற்றிய இலக்கணங்களைச் சிறிது ஆய்வோம்.

"வேற்றுமைத் தொகையே உவமத்தொகையே
வினையின் தொகையே பண்பின் தொகையே
உம்மைத் தொகையே அன்மொழித் தொகை
யென்று
அவ்வாறென்ப தொகை நிலமொழியே"

என்பது தொல்காப்பியச் சூத்திரம் இதன் உரையில் சேனவரையர் தொகையிலக்கணம் உணர்த்துகின்றார். வேற்றுமை முதலாக அன் மொழி இறுதியாகத் தொகை அறுவகைப்படும். வேற்றுமையுருபும், உவம உருபும், வினைச்சொல் ஈறும், பண்புச் சொல்லீறும் தொகுதலிற் (மறைதலின்)—றொகை என்பார் சிலர். வேற்றுமை முதலிய பொருள்கள் மேல் இரண்டும் பலவும் ஆகிய சொற்கள் பிளவுபடாமல் ஒற்றுமைப்பட இயைதலின் தொகை என்பார் சிலர். இவ்வாறு கத் தொகை என்பதற்கு மறைதல் என்றும் கூடுதல் என்றும், இரண்டு வகையாகப் பொருள் கொள்வர் ஆசிரியர். தொல்காப்பியச் சொல்லதிகாரத்திற்கு உரைகண்ட சான்றோரான சேனவரையர் என்பார் பிளவுபடாமல் ஒட்டி ஒரு சொல் நீர்மைத்தாய் உள்ளனவற்றையே தொகை எனக் கொள்ளல் வேண்டும் என்பார்.

அவர் அவ்வாறு கூறக் காரணம்:—

1. செய்தான் பொருள், இருந்தான் குன்றத்து என இவை உருபு தொக்கு வந்தாலும் ஒரு சொல் நீர்மைப் படாது பிளவுபட்டு இசைக்கும்; இயல்பினையுடைய உருபு தொகுவதே தொகை என்றால் இவற்றையும் தொகை எனல் வேண்டும். அவ்வாறு தொகை எனக் கொள்ளாது அவற்றை நீக்குதற்கும்,

2. வேழக் கரும்பு, கேழற்பன்றி என்பனவற்றில் உருபு தொகவில்லை. ஆயினும் தொகை யெனப்படும் ஆகலான் இவை போன்றவற்றைத் தழுவுதற்கும் உருபு முதலாயின தொகுதலின் தொகை என்பார் ஒட்டி ஒருசொல் நீர்மைப் படுதலையும் உடன் கூறல் வேண்டும். உருபு முதலாயின தொகுதலின் தொகை என்பார் இரண்டிலக்கணங்கள் கூறவேண்டிவருகிறது மேலும் உருபு முதலாயின தொகுதல் எல்லாத் தொகையிலும் செல்லாது. ஆனால் ஒட்டி ஒரு சொல்லாதல் எல்லாத் தொகையின் கண்ணும் செல்லும். எனவே இரண்டும் பலவுமாகிய சொற்கள் பிளவு படாமல் தம்முள் இயைதலே தொகை என்பது கருத்தாம்.

ஒன்றற்கு இலக்கணம் கூறினால் அவ்விலக்கணம் இலக்கியம் முழுவதும் செல்ல வேண்டும். சிலவற்றிற் செல்லாமையும், பிறவற்றின் மேலும் செல்லுதலும் குற்றமாம். உருபு முதலாயின மறைதலின் தொகை எனின் இவ்விருவகைக் குற்றமும் தங்குவது காணலாம். ஒட்டி ஒரு சொல்லாதலின் தொகை எனின் குற்றமின்மையும் அறியலாம்.

இனி நன்னூலார் இவ்விரண்டையுமே தொகைக்கு இலக்கணமாகக் கூறியுள்ளார் என்பது அவர் சூத்திரத்தால் அறியலாம்.

பெயரொடு பெயரும் வினையும் வேற்றுமை
முதலிய பொருளின் அவற்றின் உருபிடை
ஒழிய இரண்டு முதலாத் தொடர்ந்தொரு
மொழி போல் நடப்பன தொகை"

என்பது நன்னூல் சூத்திரம். இச் சூத்திரத்துள் உருபு இடையொழிய என்பதால் உருபு முதலாயின தொகுதலின் தொகையாம் என்னும் இலக்கணமும் ஒரு மொழி போல் நடப்பன என்பதால் இரண்டு முதலாகிய சொற்கள் தொடர்ந்து ஒரு மொழி போல் நடத்தலின் தொகையாம் என்னும் இலக்கணமும் கூறப்பட்டுள்ளன. இவ்வாறு இரண்டிலக்கணமும் கூறாது உருபு மறைவது மட்டிலும் தொகை எனச் சூத்திரம் அமைத்திருந்தால் வேழக் கரும்பு, கேழற்பன்றி முதலிய சொற்களுக்குரிய இலக்கணம் கூறப்படாது குன்றக் கூறலாய் அமைந்துவிடும். வேழக்கரும்பு கேழற்பன்றி முதலியவற்றைத் தழுவுவதற்கும் "இரண்டு முதலாத் தொடர்ந்து ஒரு மொழி போல் நடப்பன தொகை" என்றார். நன்னூல் சூத்திரம் அமைந்திருப்பதை நோக்கும்போது சேனவரையர் கூறிய இலக்கணத்தின் சிறப்பு நமக்குப்புலனாகும்.

# அவிரோத உந்தியார்

[கா. மருதமுத்து, நான்காமியாண்டு]

'ஆய்ந்த இன்பம் வாய்ந்துளம் நிறையச்
சாந்தையன் பதம் யாந்தொழுவோமே'

'அவிரோதம்' என்பது விரோத மற்றது என்று பொருள்படும். நியாயத்திற்கு எதிர்மறை அநியாயம் என வழங்கப்படுதல்போல விரோதம் என்பதற்கு எதிர்மறையாக அவிரோதம் என வந்தது 'உந்தியார்' என்பது உந்தி என்னும் விளையாட்டு விளையாடுங்கால் பாடப்படும் பாடலாகும். அம்மானை, சாழல், தோணோக்கம் போன்றவை என்க.

அவிரோத உந்தியாரின் ஆசிரியர் நம் குரு முதல்வராய சாந்தலிங்கப் பெருமான். இந் நூலின் உரையாசிரியர் சிதம்பரசுவாமிகள். சிதம்பரசுவாமிகள் அவிரோதம் என்பதை 'பக்ஷ பாதமில்லாமை' என்றும், உந்தி என்பதைக் 'குழாங் கூடிய மகளிரது ஒரு விளையாட்டு' என்றும் குறிக்கிருர். இந்நூலைப்

'பன்னெறியில் இகல் விளக்கும் பலசயமத்
தவரு முத்தி பதத்திற் கீது
நன்னெறி யென் றுய்ய...... என்று

சாந்தலிங்கப் பெருமான் நல்கினர். இந்நூலைப் பற்றித் தண்டபாணி சுவாமிகள் கூறுமிடத்து, 'நெஞ்சு ஊசல் நிகர் ஆட்டொழிக்கும் உந்தி என்று சிறப்புறக் குறித்துள்ளார். குறிப்பாகச் சொல்லுங்கால் 'அவிரோத உந்தியார் பிரம ஞானத்தை—முக்திப் பேற்றை—வீட்டுலகை—உணர்த்துவதாகும்; இது காறும் கூறியவற்ருல் நூற் பெயரும், பொருளும், ஆசிரியரும், பெருமையும் பெற்ரும்.

இனி நூலுணர்த்தும் கருத்துக்களைக் காண்பாம். 'இந்திரன் முதலிய இறையவர் பதங்களும் அந்தமில் இன்பத்து அழிவில் வீடும் நெறியறிந்து எய்தற்குரிய மாந்தர்க்கு உறுதியென உயர்ந்தோரானெடுக்கப் பட்டன அறம், பொருள், இன்பம், வீடென்னும் நான்கே' என்பது யாவரும் அறிந்ததே. அறம், பொருள்; இன்பம் மூன்றும் வீட்டினுள் அடங்கும். எங்ஙனமெனின் மேலான தருமமே மேலான பொருள். மேலான இன்பம் எனப்படுபவை பற்றற்ற சகலத்தியாகம்; பொன்றுப் பொருள்; நிரதிசயானந்தம் ஆகியவையே. எனவேதான் அறம், பொருள், இன்பம் மூன்றும் வீட்டினுள் அடக்கம் எனப்பட்டது. இது இந்நூலில் 'தேரின் வீடே யெலாமுந் தீபற' என்னும் தொடரால் விளக்கப்படுகிறது. உண்மைப் பனுவல்கள் யாவும் 'பெற்ற அறிவாற் பெறும் பயன் ஓதும் வீடே' என்று கூறுகின்றன. 'வாலறிவன் நற்ருள் தொழல் அன்ரே கற்றதனுல் ஆய பயன்.'

'வீடு ஞானத் தன்றி மேவொணு' தாகையால்,' 'கோதில் மெய்ஞ்ஞானியே கூடுவன் அந்த வாழ்வு'. மெய்ஞ்ஞானி 'யான்' என்னும் அகப்பற்றையும், 'எனது' என்னும் புறப்பற்றையும் அறுத்தவன். அகப் புறப் பற்றுக்கள் மெய்யுணர்வின்மையாலேயே அமைகின்றன. மெய்யுணர்வு அமைய இப் பற்றுக்கள் நீங்குகின்றன. எனவே, இப்பற்றுக்கள் நீங்கவே, மெய்யுணர்வு வந்தமைகிறது என்பதை ஆய்ந்துணரல் வேண்டும்.

வேரினைக் களைந்து விடின் எவ்வாறு கொடி வாடிப் போகிறதோ அதுபோல 'யான்' என்னும் அகப்பற்றை நீக்கி விடின் அதன் சார்பாகிய புறப்பற்றும் தானே நீங்கிவிடும். என்ருலும் இங்குப்பிறிதொன்றையும் நாம் நினைவிற்கொள்ள வேண்டும். உலகில் மக்கள் பெரும்பான்மை சூழலாலும், சிறு பான்மையே தம்மாலும் தீயவராகின்றனர். உயிர்கள் சார்ந்ததன் வண்ணம் மாறுபவை அன்ரே? எனவே புறப்பற்று ஒழிய அதன் காரணமாக அகப்பற்று ஒழியவும் கூடும். இவ்விருவகைப் பற்றுக்களையும் ஒழித்து மெய்யுணர்வு பெறுதல் மனித உயிர்கள் ஒவ்வொன்றினுடைய முக்கிய கடமையும் பிறவிநோக்கமுமாதலின், மெய்யுணர்வு பெறுதல் அனைவருக்கும் 'பொதுமை' என்பது உணர்க. என்ருலும் இல்லம் கண்டு உலக உவர்ப்புக் கொண்டு, முற்றும் துறந்த துறவியருக்கே சிறப்புடைத்து. அதுபற்றி இந்நூல்,

'குடும்ப பாரம் தலைக் கொண்டவர்க் கல்லல்
விடும் பரிசின்மையால் உந்தீபற
மெய்யுணர் வெங்ஙனு முந்தீபற'

என்று கூறுகிறது. ஆகவே மெய்யுணர்வு துறவறத்தில் எளிதில் ஒரு தலையாகப் பெறற் குரியது. இல்லறத்தில் அரிதில் பெறற்குரியது; ஆனல் பெறுதல் ஒருதலையன்று.

மெய்யுணர்வை ஒரு தலையாக எளிதிற் பெறும் துறவு நெறியோர், 'இச்சரீரம் நீங்குதற்கு முன்னர் ஞானசிரியனை அடைந்து அதிசீக்கிரத்தில் வீட்டு நெறியை விசாரித்து நிட்டை கூடுதல் வேண்டும்'. இங்ஙனம் அதி பக்குவமுடையாருக்குச் சிவமே குருவடிவாய் வந்து அனுக்கிரகம் பண்ணும். அதுகாலை குருவாக்கியமும், சுருதியும்,

சுவானுபவமும் ஒத்திருந்தாலே வீட்டு நெறி கைகூடும்.

நமக்கோர் ஐயம் இவ்விடத்து எழும் ; சுருதி (மறை) பலவகைப் பட்டதாயிற்றே? அது எங்ஙனம் ஒக்கும்? சுருதிகள் யாவும் சொல்லளவில் வேறே யன்றி, பொருளளவில் ஒன்றே என்பதை நினைவிற் கொள்க. எவ்வாறெனின் 'ஒரு ஊருக்குப் பல வழிகள் உள்ளது போல' பல் வேறு வகைகளின் மூலம் ஒரு முடிந்த பொருளையே எல்லாச் சுருதிகளும் கூறுகின்றன. (திரு. வி. க. அவர்கள் எல்லா மதமும் சமமானவை என்பதற்கும் இக்கருத்தையே கூறியுள்ளமை ஈண்டு எண்ணுதற் குரித்து.)

மற்றொன்றும் நாம் அறிந்து கொளற் குரித்து. மெய்யுணர்வின் முதிர்வே சமய வேறுபாட்டை நீக்குகின்றது. எல்லையற்ற ஒன்றை எல்லையைக் கொண்டு அளந்து அறிய முற்படுதல் பேதைமையே யாம் 'வீண் சச்சரவுக்குரிய சாதி வேறுபாடு முதலியன, ஒருசமய முதிர்வின் கண்ணும், சமய வேறுபாடு முதலியன, ஒரு சமய முதிர்வின் கண்ணும், சமய வேறுபாடு முதலியன மெய்யுணர்வு முதிர்வின் கண்ணும் கெட்டொழிகின்றன' இக்கருத்து இந்நூலில்,

'ஆதலான் மேலா நெறியடைந்தோர்க் கொரு
சாதி சமய மேதுந் தீபற
சங்கற்ப நாசரென்றுந் தீபற

என்று கூறப்படுகிறது.

மெய்யுணர்தற்குரியோனுகிய துறவி 'முத்தி விலக்கு' என்று கூறப்படும் சகலவாசனையையும் மாசற ஒருங்கே நீத்த பின்னரே, சமாதிநிலை கை கூடுகின்றது. அதுகாலை, அவன் 'பொறியைந்துள் நின்ற மனந்தன்னை-நீங்காது-அறிவால் அசைவற அடக்கவேண்டும். இது ஒரே முகமாகச் சாதித்தல் சாத்தியமன்று. சிறிது சிறிதாக மேற்கொள்ள இறுதியில் உண்மை நிட்டை கைகூடும். அதுகாலை 'குற்றம், துன்பம் கேடு, விழைவு' யாவும் நீக்கப்பட்டு 'பாராதி யெட்டுமப் பாலு மெப்பாலு மாயோர்' சிவமெனுஞ்சோதி உள்ளத்து அமைந்து நிற்கும். பின்னர் முக்திநெறியென்னும் பேரானந்தம் கை கூட ஈசனுடன் இரண்டறக் கலந்து, பெத்தனுகிய மனிதன் முத்தனுகி வீடடைகின்ருன்.

இவ்வாறு பேரானந்தம் எய்தினேர் உலகில் செய்யும் செயல்களின் சிறப்பை எடுத்துரைத்தல் முடியாத ஒன்று. எனவேதான் இந்நூல்,

'ஆனந்த மெய்தினேர் ஆடினும் பாடினும்
ஆனந்த லீலை யென்றுந் தீபற
அவர் செயல் கூறொணுதுந் தீபற'

என்று எடுத்தியம்புகிறது. இவ்வானந்தம் பெற்ரோர், இறைவன் தன்மையைப் பெற்றிலங்குவதை,

'ஓங்கரு ளீசனே டொன்றியே நின்ரோரு
மீங்கரு ணீங்கா ரென் றுந்தீ பற
எல்லாவுயிர்க்கு மென்னுந் தீபற,

என்னும் நூலின் உறுதிப்பாடல் தெளிவுறுத்துகிறது. இவை 'அவிரோத உந்தியார்' கூறும் கருத்துக்களில் சில.

மேற்கூறிய முறையால் பற்றின்மையால் மெய்யுணர்வும், மெய்யுணர்வால் ஞானமும், சமாதியால் யோக நிட்டையும் பேரானந்தமும் கொண்டு, சிவத்துடன் இரண்டறக் கலக்கும் தன்மையைத் தெள்ளத் தெளிய 'அவிரோத உந்தியார்' உணர்த்துகிறது என்பது புலனுகும். ஆகவே, 'ஓங்கருள் ஈசனேடு ஒன்றி நின்று, ஈங்கருள் நீங்காராய் வாழ்ந்து,' அந்தமில் இன்பத்து அழிவில் வீட்டை—சிந்தையும் மொழியும் சொல்லா நிலைமைத் தாய வீட்டை'— அடைந்து பிறவிப்பயனைப் பெற்று உய்வோமாக!

'ஆனந்த மோனம் வருமாசை யறு மெப் பொருளும்
மோனந்த நிட்டையென முன்னம் வரும்— தேனந்தும்
உந்தியார் நூறும் உதாரணத்தோடே படித்த
புந்தியார்க் கீதே பொருள்.

---

"பன்னெறியில் இகல் விளைக்கும் பல சமயத்தவரும் முத்தி பதத்திற்கேது
நன்னெறியொன் றுய்ய அவி ரோதவுந்தியார்எனும்நூல் நல்கினுனல்
வென்னெறிதேர் மறைநெறிஆ கமநெறி யொன் று(று) எனக்காட்டும் வீரசைவத்
தொன்னெறிமா கேசனெங்கள் சாந்தலிங்க தேசிகனும் தூயன் தானே"

—சிதம்பரசுவாமிகள்.

# "வாழ்க்கைத்துணை"

(சு. வேலுசாமி, நான்காமியாண்டு)

பிறப்புக்கும் இறப்புக்கும் இடைப்பட்டது வாழ்க்கை. பிறப்பு காலையினைப் போன்றது. இறப்பு மாலையினைப் போன்றது. காலையும் மாலையும்; நீண்ட நேரம் ஆட்சி செய்வதில்லை சிறிது நேரத்தே மறைந்து விடுகின்றன. எஞ்சி நிற்பது நீண்ட பகலும் நீண்ட இரவும்தான். அதுபோல் இறப்பும் பிறப்பும் மாறி மாறி வந்து போக எஞ்சி நிற்பது வாழ்க்கை. அதுமட்டும் நிலையாக அமைந்து விடுகிறது. இதனால்தான் "ஐவகைக் குற்றத்தான் வரும் இருவகை வினையும் உள்ள துணையும், உயிர் யாக்கையொடுங்கூடி நின்று அவ்வினைகளது இருவகைப் பயனையும் நுகரு மாதலின், அந்நாள் முழுவதும் வாழ்நாள் எனப் பட்டது. (38, குறளுரை) உடலோடு கூடிய உயிரின் துடிப்பே வாழ்க்கை என்பது புலனாகும்.

வாழ்க்கை என எல்லோராலும் பொது வாகக் குறிப்பிடப்படுவது இல்லறமே என்பது பனுவல்களின் துணிவு. இல்வாழ்க்கை என்பது 'அறம்' எனப்படும் 'அறனெனப்பட் டதே இல்வாழ்க்கை' என்ற தமிழ் மறையே இதற்குரிய சான்று. எனவே அறமாகிய ஒழுக் கமே இல்வாழ்க்கை என்பது புலனாகும். இதையே திரு. வி. க. அவர்கள் திருக்குற ளுரையில் குறிப்பிடுகிறார். சான்றோர் கூற்றால் உயிரின் உடலியக்கம் வாழ்க்கை என்பதும், இல்வாழ்க்கையே அவ்வாழ்க்கை என்பதும் தெளிவாகும்.

வாழ்க்கையில் துணையாக உயர்ந்தோங்கிச் சிறந்து நிற்பவள் மனைவியே. இதனால் இல் வாழ்வின் போந்த துணை மனைவி, எனக் குறிப் பிடுகின்றனர். இதனாலன்றோ பெண் இல்லாள், மனைவி, மனைவிளக்கு, மனையாள் எனப் பலவாறு அழைக்கப்படுகின்றாள். வாழ்க்கைத் துணையின் நலனைப் பெரியோர் முப்பிரிவுகளாக உரைப்பர். அவை மனைமாட்சி, கற்பு மக்கட்பேறு என்பன. இம்மூன்றினாலும் மனைவி மேலான துணை என அழைக்கப்படுகிறாள். துணை எனும் சொல் பொருளாழம் மிக்கது.

மனைமாட்சி என்பதற்கு, "மனையறத்திற்குத் தக்க நற்குண நற்செய்கைகள்" எனப் பொருள் கூறிய பரிமேலழகர் நற்குணங்களாவன. துறந் தார்ப் பேணலும், விருந்தயர்தலும், வறியார் மாட்டு அருளுடைமையும் முதலியன; நற் செய்கைகளாவன: வாழ்க்கைக்கு வேண்டும் பொருள்கள் அறிந்து கடைப்பிடித்தலும், அட் டில் தொழில் வன்மையும், ஒப்புரவு செய்தலும் முதலாயின" எனவும் கூறியுள்ளார். எனவே மனைமாட்சி என்பது, "மனைத்தக்க மாண்புடைய ளாகித் தற்கொண்டான் வளத்தக்காளாக" வாழுதல் என்பதாம். மனைமாட்சி மங்கலம் எனவும் படும்.

மனைமாட்சி, உடைய பெண்ணின்பால் கற்பு பொருந்தி நிற்கும். கற்பெனப்படுவது பெண்டிர் தம் மனத்திட்பத்தால் அமைவது. கற்பித்துக் கொண்டொழுகும் பேரொழுக்கம் என்பர் பெரியோர். கற்புடைய பெண்டிரே கடவுளர் என்பது தமிழர் கொள்கை. கற்பு என்ப தைப் பிறர் நெஞ்சு புகாமை என்றும் நுண்பொரு ளாகக்கொண்டு போற்றினர். 'பெண்டிராயிற் பிறர் நெஞ்சு புகார்" என்பது மணிமேகலை. கற்பின் ஆற்றல் உரைத்தற்கரியது. பெண்டிரின் கற்பால் "வானம் பொய்க்காது, வளம் பிழைப் பறியாது நீள்நில வேந்தர் கொற்றம் சிதை யாது" என்று சிலம்பு கூறும்.

இவ்வாறு மனைமாட்சியும், கற்பும் கொண் டவளாய் "தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகை சான்ற சொற்காத்துச் சோர்விலளாக" வாழும் பெண்ணே வாழ்க்கைத் துணையாகக் கூறப்படுவாள். மனைமாட்சியும், கற்பும் ஒருங் குடைய பெண்ணே இல்லறத்தின் பயனாகிய மக்கட்பேற்றுக்கு உரியவளாகின்றாள். கணவன் மனைவியரின் மெய்யான செல்வம் நன்மக்களே ஆவர். "மயக்குறு மக்களை யில்லோர்க்குப் பயக்குறையில்லைத் தாம் வாழுநாளே' என்பது புறப்பாட்டு. எனவேதான் வள்ளுவர் மக்கட் பேற்றை மனைமாட்சிக்கோர் அணிகலமாக 'நன்கலம் நன்மக்கட் பேறு' என்று கூறியுள் ளார். எனவே மனைமாட்சியால் கற்பும், கற்பால் நன்மக்கட்பேறும் அமையும் என்பதும், இம் மூன்று நலனும் உடையவளே வாழ்க்கைத் துணை என்பதும் புலனாகிறது.

இத்தகு பெருஞ் சிறப்புக்களுடன் விளங்குவ தாலேயே பெண் வாழ்க்கையின் துணை எனப் பட்டாள். இதனாலே வள்ளுவரும், "பெண் ணின் பெருந்தக்க யாவுள" என்றார். பெண்மை என்பது தெய்வீகம்: அப்பண்பு குலையாமலும், குலைக்கப்படாமலும் வாழ்வதில்தான் நம் பெரு மையும் பண்பும் இருக்கிறது. அப்படி வாழ முயல்வதுதான் உண்மையான வாழ்வு. "வாழ் வாங்கு வாழும் வாழ்க்கை" என்பதும் அதுவே. அந்த வாழ்வு வாழ அனைவரும் முயல்வோமாக!

—



உயர்திரு இரா. செங்கோட்டுவேலன்;
B.A., B.L., அவர்கள்
கல்லூரி கழகப் பொருளாளர்



உயர்திரு டாக்டர் சண்முகசுந்தரக் கவுண்டர்
M.B., B,S., F.R.C.S. அவர்கள்
கல்லூரி மருத்துவர்

திரு. க. சாமிக்கவுண்டர் அவர்கள்
பள்ளிக் கல்விக்குழுப்
பொருளாளர்





திரு. க. அய்யாசாமி பிள்ளை அவர்கள்
பள்ளிக் கல்விக்குழுச் செயலாளர்.



சிவஞான போத வகுப்புத் தொடக்க விழா. காஞ்சிபுரம், தொண்டைமண்டல ஆதீனம் சீலஸ்ரீ ஞானப் பிரகாச தேசிக சுவாமிகள் 10-11-67 வெள்ளிக்கிழமையன்று, சிவஞான போத வகுப்பைத் தொடங்கி ஒரு மாத காலம் நடத்தினார்கள். விழாவிற்கு மதுரைப் பல்கலைக்கழகத் துணை வேந்தர் டாக்டர். தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், தலைமை தாங்கினார்கள். அவருக்குக் கல்லூரி முதல்வரும் தவத்திரு. சாந்தலிங்க அடிகளார் திரு மடத்தின் தலைவரும் ஆகிய தவத்திரு சாந்தலிங்க இராமசாமி யடிகளார் பொன்னாடை போர்த்துப் பாராட்டினார்கள்.





1967-௬௮-உயர்நிலைப்பள்ளி பதினோராம் வகுப்பு மாணவர்களும், ஆசிரியர்களும்

வேண்டும். அவற்றைக் காணாத இடத்து அச்சம் பிறவாது. எனவே, அச்சத்தைத் தரும் பொருள்கள் அவையாகலான், அப்பொருள்களைச் சுவைகோடல் அல்லது சுவைப்பொருள் என்பது பொருந்தும்.

2. பொறி உணர்வு :—பொறி உணர்வு என்பது 'சுவை' என்னை? வேம்பென்ற சுவைப்பொருளை, நாவென்ற பொறியால் நுகரும் போது, அப்பொறி உணர்வது கைப்புச்சுவை யாகலான் என்க. எனவே, அஞ்சுதற்கேது வாய, சுவைப்பொருளைக் கண்ட காலந்தொட்டு நீங்காது நின்ற அச்சம் முதலிய சுவைகளே பொறி உணர்வாம்.

3. குறிப்பு: வேம்பினை நா நுகர்ந்த வழித் தோன்றிய கைப்புச்சுவையாய பொறி உணர்வால், உளத்து நிகழும் வெறுப்பு முதலிய உள்ள நிகழ்ச்சிபோல, அஞ்சுதக்கன கண்டவழி, அவ்வச்சச்சுவை காரணமாக, அதன்கண் வெறுத்தலும், கரத்தலும், மயக்கமும் போன்ற, உள்ளத்து நிகழும் நிகழ்ச்சி, குறிப்பு எனப்படும்.

4. அவ்வாறு வேம்பு சுவைத்தார்க்கு அவ்வுள்ள நிகழ்ச்சி காரணமாகித்தானே தோன்றுகின்ற தலைநடுக்கம் முதலியபோல அரிமா முதலிய கண்டவழிப் பிறந்த உள்ள நிகழ்ச்சிக்குப்பின், அது காரணமாகத், தானே மெய்யின் கண் நிகழும், நடுக்கம், வியர்ப்பு முதலிய மெய் வேறுபாடுகள் சத்துவம் எனப்பெறும்.

ஒருவன் அரிமா ஒன்றனைக்கண்டு, மனம் வெறுத்து மெய்வியர்க்கிறான். அவ்வழி, அரிமா சுவைப்பொருளாம். அதனைக் கண்ட காலந்தொட்டு நீங்காது நின்ற அச்சம் சுவையாம், அகத்து நிகழ்ந்த வெறுப்பு, குறிப்பாம், புறத்து நிகழ்ந்த வியர்ப்பு சத்துவமாம். இவ்வாறு நகை முதலியவற்றோடும் உறழ முப்பத்திரண்டாம் என்றவாறு.

இனி அவை பதினாறுமாறு : இளம்பூரணர் கருத்து—'கண்ணியபுறன் நானான்கு' என்பதில் கண்ணிய புறனாவது சுவையும் குறிப்பும் ஆகும். சமநிலை ஒழிந்த ஏனை எட்டனோடும் அவ்விரண்டனையும் உறழப் பதினாறாயிற்று என்பது. எனவே இவர் கருத்துப்படி சத்துவம் குறிப்பாய் அடங்கும். பேராசிரியர் குறிப்பினைச் சத்துவத்துள் ளடக்குவர்.

பேராசிரியர் சுவைப்பொருளும், பொறி உணர்வாய சுவையும், சுவையுள் அடங்கி, சுவை என்ற எட்டும், குறிப்பும் சத்துவமும், சத்துவத்துள் அடங்கி, சத்துவம் என்ற எட்டும் கூடிப் பதினாறாயிற்றென்பர். இனி அவ்வாறு அடங்குமாற்றைக் காண்போம்.

சுவையாயடங்குமாறு : வேம்பு முதலிய சுவைப்பொருளும் நாவென்னும் பொறியும் வேறுவேறாகத் தனியே நின்றுழி கைப்புச்சுவை பிறவாது, அவையிரண்டும் தலைப் பெய்துழியே அச்சுவை பிறத்தல்போல அச்சம் முதலியவற்றிற்கேதுவாய அரிமா முதலிய கண்டவழியல்லது அச்சந்தோன்றாது ஆகலின், சுவையாகச்சுவைப் பொருள் அடங்கும். இவ்வாறு வருதல் பற்றியே நாடக நூலாரும்.

இருவகை நிலத்தின் இயல்வது சுவையே' என, சுவைப்பொருள் பொறி என்ற இரண்டும் கூடியவழி சுவை தோன்றுமாறு கூறியுள்ளனர்.

நாடக நூலார் கூறிய இருநிலங்களாவன, உய்ப்போன் செய்வதும், அது காண்போர்க்கு எய்துவதும் என்பர். அது பொருந்தாது. ஒருவன் அஞ்சுதக்கன ஒன்று கண்டு அஞ்சி ஓடிவருகின்றான். மற்றொருவன் அவனைக் காண்கிறான். அவ்வழி, அஞ்சி வருபவனின் சத்துவங்களால் இவன் அஞ்சினான் என அறிவதல்லது, தான் அஞ்சமாட்டான்; கைப்புச்சுவைத்தானைக்கண்ட வழி, இவன் கைப்புச்சுவைத்தானென கண்ணுணர்வினால் ஒருவன் அறிவதல்லது, அச்சுவையினைத் தன் நாவினால் அறியாதவாறுபோல, உய்ப்போன் செய்வது காண்போர்க்கெய்துதல் சுவை எனில், ஆண்டு அஞ்சினானைக் கண்டார்க்கும் அச்சம் நிகழ்தல் வேண்டும், அல்லது அவனிடத்து நிகழ்வது அச்சமாதல் வேண்டும். ஆனால் இரண்டுமாகா. ஆண்டு அவனிடத்து நிகழ்வதோ, அஞ்சினானைக்கண்டு நகுதலும், அல்லது கருணை செய்தலும் ஆகும். எனவே பொருந்தா.

சத்துவமா யடங்குமாறு :—குறிப்பென்பது உள்ள நிகழ்ச்சியும், சத்துவமாவது அதுகாரணமாக உடம்பின்கண் தோன்றும் வேறுபாடுமாதலால் உள்ள நிகழ்ச்சியை வெளிப்படுப்பது சத்துவமாகிறது. எனவே சத்துவத்துள் குறிப்பு அடங்கிச் சத்துவமென எட்டாம். இவ்வாறு சுவையும் சத்துவமுமாய் ஏனையவை அடங்கி பதினாறாம்.

இனி அவை எட்டாமாறு:—அச்சம் முதலிய உருத்திரம் ஒழிந்த சுவைகளின் விகாரமே சத்துவம். என்னை, அச்சம் முதலிய காரணமாக உள்ளத்துத் தோன்றும் குறிப்பின் காரியமே சத்துவமாகலின். அவை நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், உவகை, சமநிலை என்ற எட்டும். பேராசிரியர் தம் உரையிடத்து இவை எட்டாதலே அன்றி உருத்திரந்தன்னோடொன்பதும் ஆகும் என்பர்.

மேற்கூறப்பட்ட பகுதிகள் எல்லாம் கற்று நல்லொழுக்கம் ஒழுகும் அறிவுடையார் அவைக்கண் நிகழாது. ஏனெனில், அவரிடத்து நகை முதலியவற்றிற்குஏதுவாகக் கூறப்படும் எள்ளல், பேதைமை முதலிய இன்மையின் அவைகாரணமாக வரும் சுவைகளும் நிகழா. எனவேதான் ஆசிரியரும் இவற்றைப் 'பண்ணைத் தோன்றிய'

# நச்சினார்க்கினியரின் எழுத்ததிகார உரைநலம்

[புலவர் ஆ. சுப்பிரமணியர், நசியனூர்.]

"நச்சினார்க்கினியரின் எழுத்ததிகார உரை நலம்
ஓங்க விடைவந் துயர்ந்தோர் தொழவிளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத் திருளகற்றும்–ஆங்க
வற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிரொன் றேனையது
தன்னே ரிலாத தமிழ்."

தமிழகத்து எழுந்த இலக்கண இலக்கியங்கள் பல. அவை கடினமாகத் தோன்றவே பிற்காலத்தில் உரை எழுதினோர் பலராவார். இலக்கணத்திற்கும் இலக்கியத்திற்கும் உரை எழுதியவர் 'உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்கினியர்' ஒருவரே எனத் துணிந்து கூறலாம். ஏனெனில் அவர் ஒருவர்தாம் இரண்டிற்கும் உரை எழுதி உள்ளார்.

நச்சினார்க்கினியர் : இவர் சைவ சமயத்தினர். மதுரையில் வாழ்ந்தவர். அந்தணர் குலத்தைச் சேர்ந்தவர். ஏறக்குறைய 14-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் எனலாம். இவர் தொல்காப்பியம் முழுவதிற்கும் உரை எழுதினார். ஆனால் மெய்ப்பாட்டியல், உவம இயல் மரபியல் நீங்கலாக ஏனையவற்றிற்குத் தான் இவர் உரை கிடைத்துள்ளது இங்கு எழுத்ததிகார உரைச் சிறப்பைமட்டும் காண்போம்.

நூற்பாவிற்கு உரை எழுதுதல் . இவர் நூற்பாக்களைச் சிதைத்துப் பொருள் கூறுவதில் வல்லவர். அவ்வாறு எழுதும்பொழுது சிறந்த பொருள் கிடைக்கும். பெரும்பான்மையாக இவர் உரை எழுதிய நூல்களில் எல்லாம் இவ்வாறே பொருள் கூறுகின்றார்.

"அளபிறந் துயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்
உளவென மொழிப இசையொடு சிவணிய
நரம்பின் மறைய என்மனார் புலவர்"
—(எழுத் - 33)

இச்சூத்திரத்தை நேரே பொருள் கொள்ளாமல் மாற்றிப் பொருள் செய்கின்றார். "அளபிறந் துயிர்த்தலும் ஒற்றிசை நீடலும் நரம்பின் மறைய என்மனார் புலவர்" எனவும், "இசையொடு சிவணிய உளவென மொழிப" எனவும் மாற்றிப் பொருள் கூறுகின்றார். செய்யுளியலுளிருந்து இச்சூத்திரத்தை மாட்டேறு செய்கின்றார். 'மொழிப' என்றும், 'என்மனார் புலவர்' என்றும் இருகாற் கூறியவதனால், இங்ஙனம் பொருள் கூறலே ஆசிரியர்க்குக் கருத்தாயிற்று" என்று எழுதுகின்றார். இச்சூத்திரத்தில் முடிவாக "இவ்வாறே சூத்திரங்களை நலிந்து பொருள் உரைப்பன வெல்லாங் கொள்க" என்று கூறுகின்றார்.

சிதைத்துப் பொருள் கூறுவதை மற்றும் ஒரு சூத்திரத்தால் காண்போம்.

"மருவின் தொகுதி மயங்கியல் மொழியும்
உரியவை உளவே புணர்நிலைச் சுட்டே"
—(எழுத். 111)

இச்சூத்திரத்தை ' மருவின் மொழியும், இன தொகுதி மயங்கியல் மொழியும், புணர்நிலைச் சுட்டு உரியவை உள"—என்று மாற்றி அமைக்கின்றார் இதற்கு உரை கூறும்பொழுது, "இருவகையாகிய மருவிய சொற்களும், செவிக்கினிதாகச் சொற்றிரளிடத்து நிறுத்த சொல்லுங்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

என்றார் என்ற இளம்பூரணர் கூறும் உரைத் திறன் மகிழ்ந்து பாராட்டுதற்குரியது. நிற்க.

இதுகாறும், நாடகநூலார் கொள்கின்ற மெய்ப்பாட்டின் வகைகளைப் பேராசிரியரும் இளம்பூரணரும் கொள்கின்ற முறையினைக் கண்டோம். இதற்குமேல் தொல்காப்பியர் தாம் வேண்டும் மெய்ப்பாடுகளை 'நகையே யழுகை' என்னும் சூத்திரமுதலாகக் கூறிப்போகின்றார்.

விரிவஞ்சி அதனைக் கூருது விடுகிறேன். மேற் கூறிய பண்ணைத் தோன்றி மெய்ப்பாட்டு வகைகளை ஈண்டு ஆசிரியர் கூறியது, அரங்கும் அதன் கண் கூத்தனும், அவனிகழ்த்தும் சத்துவங்களை உணர்வோரும் ஆக வருகின்ற முறையெல்லாம் நாடக வழக்கிற்கே உரியபகுதி, இந்நூற்கு வேண்டப்படுவது அன்று என்பதற்கும், முந்து நூலில் இவை கூறப்பட்டது என்பதற்கும்ஆகும். என்பர் எங்கள் பேராசிரியர். அமைகிறேன்.

குறித்துவரு கிளவியுமாய் ஒட்டினாற்போல நின்று பொருள் உணர்த்தாது பிரிந்து பின்னர்ச் சென்று ஒட்டிப் பொருள் உணர்த்த மயங்குதல் இயன்ற சொற்களும், புணரும் நிலைமைக் கருத் தின்கண் உரியன உள'' என்று பொருள் கூறு கின்றார். இப்பொருளே சிறந்ததாக அமைந் துள்ளது.

**சொற்பொருள் உரைத்தல் :** இவர் சொற் களுக்கு மிக நுட்பமாகப் பொருள் எழுதுவதில் வல்லவர். சூத்திரச் சொற்களுக்கு மட்டும் அல் லாமல் தாம் காட்டிய உதாரணத்திற்கும் இன்றி யமையாத இடங்களில் பொருள் கூறுவர்.

''ஒகார இறுதிக்கு'' என்னும் சூத்திரத்து (எழுத்—180) 'ஓ' என்பது, மதகுநீர் தாங்கும் பலகை'' என்று கூறுகின்றார்.

''எகர ஞகரம்'' எனத் தொடங்கும் சூத்தி ரத்து (எழுத்—272) ஏஎ, ஓஒ என்பதற்கு; எனக்கு ஒரு கருமம் பணி எனவும், இங்ஙனம் செய்கின்றதனை ஒழி எனவும் பொருள் கூறு கின்றார்.

''வேட்கை'' என்பதற்கு ''பொருள்கள் மேல் தோன்றும் பற்றுள்ளம்'' என்றும், அவா என்பதற்கு ''அப்பொருள்களைப் பெற வேண் டும் என்று மேன்மேல் நிகழும்'' ஆசை என்றும் பொருள் கூறுகின்றார். (எழுத் 288).

''இலமென் கிளவிக்கு'' என்னும் சூத்திரத்து (எழுத் 316) 'இலம்படு புலவர்' என உதாரணம் காட்டி அதற்கு ''இல்லாமை உண்டாகின்ற புலவர்'' எனப் பொருள் கூறுகின்றார்.

'உண்டு' என்பதற்கு (எழுத்—430) ''ஒரு பொருள் தோன்றுங்கால் தோன்றி அது கெடுந் துணையும் உண்டாய் நிற்கின்ற தன்மை'' என்று பொருள் கூறுகின்றார்.

''நான்மறை'' என்பதற்கு ''தைத்திரியமும், பௌடிகமும், தலவகாரமும் சாமவேதமுமாம்'' என்று கூறுகின்றார். இவ்வாறு கூறிவிட்டு ''இனி இருக்கும் யசுவும் சாமமும் அதர்வணமும் என் பாரும் உளர்'' என்று கூறுகின்றார். ''மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்'' என்னும் சூத்தி ரத்திற்கு உதாரணம் காட்டும்பொழுது 'அகர முதல' என்னும் குறளான் அகரமாகிய முதலை யுடைய எழுத்துக்களெல்லாம், அதுபோல இறைவனாகிய முதலை உடைத்து உலகம் என வள்ளுவனார் உவமை கூறியவாற்றானும் உணர்க'' என்று குறிப்பிடுகின்றார்.

**இவர் கூறும் உவமைகள்:** இவர் வேண்டிய இடங்களில் உவமை காட்டி விளக்குவார். இங்கு உவமையை மட்டும் குறிப்பிடுகின்றேன்.

1. 'இறைவன் ஒன்றேயாய் நிற்குந் தன் மையும், பல்லுயிர்க்கும் தானேயாய் அவற்றின் அளவாய் நிற்கும் தன்மையும் போல'' (எழுத்-8)

2. 'இறைவன் இயங்கு திணைக்கண்ணும் நிலைத்திணைக்கண்ணும் பிறவற்றின்கண்ணும் அவற்றின் தன்மையாய் நிற்குமாறு எல்லார்க்கும் ஒப்ப முடிந்தாற்போல'' (எழுத். 46)

3. ''நூறு காணம் கொணர்ந்தான் என் றால் அவை பொதிந்த கூறையும் அவையென அடங்குமாறு போல''(எழுத்து. சிறப்புப்பாயிரம்) இவ்வாறு வேண்டிய இடங்களில் உவமை காட்டி விளக்குவது இவர் மரபாகும்.

**மறுத்துரைக்கும் பண்பு :** இவர் மற்ற உரை யாசிரியர்களை மறுக்கும்பொழுது பெயர் கூறியும், பெயர் கூறாமலும் மறுப்பார். பல இடங்களில் பெயர் கூறாமல் மறுப்பதும் உண்டு. மறுப்பு மிக மென்மையாக இருக்கும். இஃது இவருடைய பண்பைக் காட்டுகின்றது. எழுத்ததிகாரத்தில் பெரும்பாலும் உரையாசிரியரையே மறுத்திருக் கின்றார்.

**முடிவுரை :** எனவே இதுகாறும் கூறிய வாற்றான் நச்சினார்க்கினியரின் உரைச் சிறப்பு ஒருவாறு விளங்கும். இன்னும் இவர் மொழி வரலாறு, இசை ஆகியவைபற்றிய குறிப்புக்களை யும் உரையில் காட்டிச் செல்கின்றார். இதனால் தான் ''பன்னூல் அறிந்த செந்நெறிச் செல்வர்'' என்று கற்றறிந்தோர் போற்றுகின்றனர். ''நச்சி னார்க்கினியன் எச்சில் நறுந்தமிழ் நுகர்வர் நல்லோர்'' எனவும் சிறப்பித்துப் போற்றுவர்.

---

முத்தியடையப் புத்தியே சிறந்த வழி.

—விவேகாநந்தர்

ஃ ஃ ஃ

ஓர் உயிர் பல பிறவிகளுக்குப் பின்னால் தோன்றிய இடத்திலே சென்று சேர்வது உறுதி.

—இராமகிருட்டிணர்

# உடற்சிறை

[நா. மா. முருகன், நான்காமியாண்டு]

குற்றம் செய்த ஒருவன், மீண்டும் அவ்வாறு குற்றம் புரியாமலிருக்க வேண்டியும், செய்த குற்றத்திற்குத் தண்டனையாகவும், அவன் திருந்தி வாழ வேண்டியும் சிறையில் அடைக்கப் படுகிறன். உண்மையில் நோக்குமிடத்துப் பிறவியும் இத்தன்மைத்தே. வினை புரிந்த உயிர் அவ்வினைக் கேற்பப் பிறப்பின் வாயிலாக உடற் சிறையில் அடைக்கப் படுகிறது. அவன் எல்லாத் துயரங்களையும் துய்த்து வேதனையுற்று இறுதியில் வினைபுரிந்து இறப்பென்னும் விடுதலை யடைகிறது. உடலுடன் உயிர் பொருந்துவது உயிர் விளக்கமுறற் பொருட்டே என்பது சமய நூற்களின் துணிபு. ஆனுல் உலகியலில் இது நமக்குக் கண்கூடாகத் தெரிவதில்லை. தான் உடலுடன் கூடிநிற்குங்காலை உயிர் வினைப்பயனை நுகர்ந்தும், கழித்தும், துய்த்துக் கொண்டே இருக்கிறது.

பிறவி என்பதுதான் உண்மையிலேயே மிகவும் பெரியதுன்பம். உலகில் உள்ள அனைத்துப் பொருள்களின் வாழ்விலும் துன்பமே தேங்கி நிற்கிறது. நோக்குமிட மெல்லாம் துயரத்தைத் தவிர இங்கு நம்மால் எதையும் காண முடிவதில்லை. இன்பம் என்பது இவ்வுலகில் அந்தக் கணத்தில் மட்டும் தோன்றிமாய்ந்துவிடும் ஒன்று இவ்வுலகின் நித்திய சொத்து துன்பம் ஒன்றே. எனவேதான் மெய்ஞ்ஞானியர், இரங்கற் குரித்து இவ்வுலகம்—'' என்று கூறிப் போந்தனர். நிலையற்ற துன்ப வாழ்வினிடையில் வாழ்ந்து கொண்டும். நிலையான இன்ப வாழ்வைக்காணும் சதுரப்பாட்டினரே மனிதரும் வணங்கும் மனிதராவார்.

பிறவி துன்பம் என்பதைக் கீழ்வரும் பரிமேலழகர் உரைத்தொடர்கள் உறுதிப்படுத்தும். ''நரகர், விலங்கு, மக்கள், தேவர், ''மாணுப் பிறப்பு''—(இன்பமில்லாத பிறப்பு) என்ருர்.'' இதனல் பிறப்பு துன்பமென்பதூஉம், அதற்கு முதற்காரணம் அவிச்சை என்பதூஉம் கூறப்பட்டன'' (351—குறளுரை).'' உடம்பென்ற பொதுமையான் உருவுடம்பும் அருவுடம்பும் கொள்ளப்படும். இவ்வுடம்புகளால் துன்பம் இடையருது வருதலை உணர்ந்து இவற்றுனைய கட்டினை இமைப் பொழுதும் பொருது வீட்டின் கண்ணே விரைதலின் உடம்பு மிகை என்ருர்'' (345 குறளுரை) பிறவித் துன்பங்களாவன, தன்னைப் பற்றி வருவனவும், பிற உயிர்களைப் பற்றி வருவனவும், தெய்வத்தைப் பற்றி வருவனவும் என மூவகையான் வருதுன்பங்கள்'' இன்னோரன்ன உண்மைகளை நோக்குங்கால் பிறவி என்பது துன்பமே என்பது புலனுகும்.

எனவே தான், ''பிறந்தோருறுவது பெருகிய துன்பம்'' என்ருர் சீத்தலைச் சாத்தனுரும். பிறரும் பிறவியைப் பற்றிக் குறிப்பிடுங்கால்—''பிறவிப் பிணி, பிறவிப்பெருநோய், பிறவிப் பௌவம் பவக்கடல்'' எனப் பலவாருகக் கூறியுள்ளனர்.

துன்பமே வடிவமாய இப்பிறவி எதனுல் உண்டாகிறது? அவிச்சை, அகங்காரம், அவா, விழைவு, வெறுப்பு என்னும் ஐவகைக் குற்றத்தான் வரும் நல்வினை தீவினை யென்னும் இருவகை வினையுமுள்ள துணையும் உயிர் யாக்கையோடுங்கூடி நின்று அவ்வினைகளது இன்பதுன்பமென்னும் இருவகைப் பயனையும் நுகரும் (38-குறளுரை) என்பர்-பரிமேலழகர்.'' அநாதியாய அவிச்சையும் அதுபற்றி யானென மதிக்கும் அகங்காரமும் அதுபற்றி எனக்கிது வேண்டுமென்னும் அவாவும், அதுபற்றி அப்பொருட்கண் செல்லும் ஆசையும் அது பற்றி அதன் மறுதலைக் கண் செல்லும் கோபமும் எனக் குற்றம் ஐந்தாகும். (360 குறளுரை) ''ஐவகைக் குற்றங்களுள் அவிச்சை ஏனைய நான்கிற்கும் காரணமாதலுடைமையின், அச்சிறப்புப் பற்றி அதனையே பிறப்பிற்குக் காரணமாக்கிக் கூறினர் என்பதும் பரிமேலழகருரை (358 குறளுரை) இது பற்றியே பிறப்பிற்கு முதற் காரணம் அவிச்சை என முற்கூறப்பட்டது. மருள், மயக்கம். விபரீத உணர்வு, பேதைமை அவிச்சை என்பன ஒரு பொருட்கிளவி.

பிறவிக்கு இவ்வவிச்சையே அன்றி ஐயவுணர்வும் காரணமாகும். ஐயமாவது பல தலையாய உணர்வு. அஃதாவது மறுபிறப்பும், இருவினைப் பயனும் கடவுளும் உளவோ, இலவோ என ஒன்றிற்றுணிவு பிறவாது நிற்றல் (354-குறளுரை) அவிச்சை ஐய உணர்வு-இவற்றின் காரணமாக யான் என்னும் அகப்பற்றும், எனதென்னும் புறப்பற்றும் ஏற்படுகிறது. ''இன்ப துன்பங்களான் உயிரோடு ஒற்றுமை எய்தலின், இவ்வுடம்புகளும் யானெனப்படும்'' (குறளுரை-335) இப்பற்று அறும் வரை பிறவியும் அறுவதில்லை.

மெய்யறிவாகிய மெய்யுணர்வினுலே இப் பற்றுக்கள் அறுபட்டுப் பிறவாமை வந்தெய்தும் மெய்யுணர்வு எனப்படுவது ''யாதொரு பொருள் யாதோ ரியல்பிற்றுய்த் தோன்றினும் அத்தோன்றிய வாற்றைக் கண்டொழியாது அப்பொருளின் கண் நின்று மெய்யாகிய பொருளைக் காண்பதேயாகும். (355 குறளுரை) மெய்யுணர்வு என்பதிற் போந்த பொருள் வீட்டிற்கு நிமித்த காரணமாய முதற்பொருளை உணர்தலே என்க. இதற்

கான உபாயம் கேள்வி, விமரிசம், பாவனை என மூன்ருகும். முறையே ''மெய்யுணர்தல்'' அதிகாரத்து வரும் 356, 357, 358-என்னும் மூன்று குறட்பாக்களும் மூன்று உபாயங்களையும் தெளிவாகக் கூறுகின்றன.

மூன்று உபாயத்தானும் மெய்யுணர்வு ஏற்படப் பிறவிக் கேதுவான அவிச்சை, ஐயவுணர்வு ஆகியவை விளக்கின் முன்னிருள் போல ஞான யோகங்களின் முன்னர்க் கெட்டொழிகின்றன. காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன் நாமங் கெடக் கெடும் நோய் என்பதும் இதுவே. ஐந்து குற்றங்களுள் அவிச்சைக்கண் அகங்காரமும், ஆசைக்கண் அவாவும் அடங்குதலால் (360-குறளுரை) அவிச்சை விழைவு, வெறுப்பு என்னும் மூன்றும் காமம், வெகுளி, மயக்கம் என்று கூறப்பட்டன.

முன்கிடந்த துன்பங்களும், மேல்வரக் கடவ துன்பங்களும் இலவாதல் மெய்யுணர்வின் பயனுகலின், மேற்கூறிய மூன்று உபாயத்தானும் பரம் பொருளை யுணரப் பிறப்பறும். அஃதறும் வழிக் கிடந்த துன்பங்கள் ஞான யோகங்களின் முதிர்ச்சியுடைய உயிரைச் சாரமாட்டாமையானும், வேறு சார்பின்மையானும் கெட்டுவிடும். இவ்வாற்ருன் பிறவித் துன்பம் விடுபடுமாறு பெற்ரும்.

இதுகாறும் கூறிய வாற்ருன் உயிர் தான் உடலுடன் கூடிப் புரிந்த வினைக்கேற்ப உடற்சிறைப் படும். பிறவி துன்பம் என்பதும், பிறவிக்குக் காரணம் அவிச்சை என்பதும், மெய்யுணர்வால் பிறவி அறும் என்பதும் ஒருவாறு தெளிந்தோம். உயிர் உடலுடன் பொருந்துவதன் நோக்கம் தான் மலக் கட்டினின்றும் விடுபட்டு விளக்கமுறுதல் என்பதேயாகும்.

வாழ்வு ஏன்பது உயிரும் உடம்பும் இயைந் திருத்தலைத் தெளிதலே யாகும். அதைத் தெளிந்து பிறவா நெறியுறுதலே உயிர்களின் உற்ற கடன் எனக்கூறி இக்கட்டுரையை முடிக்கிறேன்.

> '' பிறவாமை வேண்டும் மீண்டும்
> பிறப்புண்டேல் உன்னை என்றும்
> மறவாமை வேண்டும். ''

---

# தனிப்பாடல்கள் — திருச்செங்கோடு

(பண்டித அ. கந்தசாமிப் பிள்ளைஅவர்கள், பேரூராதீன முதுபெரும் புலவர், பேரூர்)

(1) நினைத்த மாத்திரை மனம்புரி பவமெலாம் நீங்கும்
கனைத்த வாக்கினுல் புரிபவம் துதிக்கும்முன் கழலும்
தனைத்த டங்கணுல் காணும்முன் உடற்பவம் தணவும்
அனைத்த மாண்பின தம்மாசெங் குன்றெனும் அசலம்.

(2) இம்ம லைக்கணே வழிவழி எம்மையா ளுடைய
அம்மை அப்பனும் தனிமுதல் அர்த்தநா ரீசன்
எம்மை எவ்வரம் வேண்டினும் ஈந்துவீற் றிருக்கும்
கொம்மை வெம்மதில் திருக்கொடி மாடச்செங் குன்றூர்.

(3) மாலுக்குந் தானந்த வானவர்க்கும் தானலப்
பாலவர்க்குந் தான்வாய்ப் பதுவோதான்—நீலமயில்
மேலவனை அன்பருளம் மேயவனைச் செங்கோட்டு
வேலவனைப் பாடும் விறல்.

# தானமும் தருமமும்

[செ. செகதீசன், நான்காமியாண்டு]

தானமும் தருமமும் ஒன்றே என்று பலர் பலவாருகக் கூறுவர். தானமும் தருமமும் கொடியும் கொழுகொம்பும் போன்றவை. தானம் வேறு; தருமம் வேறு என்பதைப்பற்றி ஈண்டு நோக்குதும்.

தானமாவது "அறநெறியான் வந்த பொருளைத் தக்காருக்கு உவகையோடு கொடுத்தல்" என்று பரிமேலழகர் கூறியுள்ளார். இதிலிருந்து தானத்தை அறநெறியால் ஆற்றுவதுதான் சிறப்பு என்பது தெளிவாம்.

தருமமாவது அறம் என்றும் ஆன்ருேர் ஒழுகிய ஒழுக்கம் என்றும் கூறப்படும் விதி நூல்களைத் தரும சாத்திரங்கள் என்றே அழைப்பது சான்று.

தானத்தைச் செய்வதையே கொள்கையாக உடையோர்களில் இருவித மனப்பான்மை உடையோர் உளர். இரப்போர் யாவராயினும் அவர்கட்கு ஈதலே சிறப்பு என்பர் ஒரு சாரர். பாத்திரம் அறிந்து பிச்சையிடு என்பர் மற்ருெரு சாரர்.

திருட்டுத் தொழிலையுடைய கள்வன் ஒருவன் ஒருவனை அணுகி உதவிபெற்று அதனுல் சோர்வு நீங்கித் திடம் பெற்று மற்ருெரு வீட்டில் புகுந்து வீட்டில் உள்ளோரைத் துன்புறுத்திக் கிடைத்த பொருளைக் கவர்ந்து செல்கிருன். இத்தன்மையனுக்குப் பசியைத் தணித்துத் திடம் பெற உதவிய இல்வாழ்வானுக்குத்தான் செய்த தானத்தினுல் புண்ணிய பலன் கிடைப்பதற்கு மாருகத் திருடன் திருடியதனுல் வந்த பாவத்தில் ஒரு கூறு கிடைக்கிறது என்று சாத்திரம் கூறுகிறது. இதைக் குறிப்பிடவே "பாத்திரம் அறிந்து பிச்சைஇடு" என்று கூறிப் போந்தனர். "தானத்திற் பெரிது நிதானம்" என்ற ஆன்ருேர் வாக்கும் இக்கருத்தையே வலியுறுத்துகின்றது.

தமிழ் மூதாட்டி ஔவையாரும்

"சாதியிரண் டொழிய வேறில்லை சாற்றுங்கால்
நீதிவழுவா நெறிமுறையின்—மேதினியில்
இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்
பட்டாங்கில் உள்ளபடி."

என்று பாடியுள்ளார்.

இப்பாடலுக்கு இட்டவரெல்லாம் பெரியோர் இடாதாரெல்லாம் சிறியோர் என ஔவையார் கூறி வைத்தலால் யார் கேட்டாலும் இல்லையென்னுது கேட்போரைக் கவனியாது கொடுத்தலையே ஔவையார் கூறினுர் எனப் பொருள் கூறுவார் உளர். அது பொருந்தாது.

"நீதி வழுவா நெறிமுறையின் இட்டார்" எனக் கூறி யிருப்பதால், நீதி வழுவா நெறிமுறையின் இட்டார் பெரியோர்' எனவும் 'நீதி வழுவா நெறிமுறையின் இடாதார் இழிகுலத்தோர்' எனவும் பொருள் கொள்ளவே" பாத்திரம் அறிந்து பிச்சையிடு" என்ற கருத்து மறைந்து நின்று காணப்படுகிறது.

இன்னும் பகவத் கீதையில் "பலன் கருதாது எதையும் செய்" எனவும், வள்ளுவப் பெருந்தகையும் "வறியார்க் கொன்று ஈவதே ஈகை" எனவும் கூறியமையால் அவரல்லாதார்க்கு ஈவது குறியெதிர்ப்பை ஒக்கும் எனவும் கூறியமை கண்டு தானத்தின் பெருமையைச் செப்பவும் முடியுமோ.

மற்றும் கன்னன் உயிர் பிரியும் பொழுதும்

"ஒவிலாதியான்செய் புண்ணியம் அனைத்தும்
உவந்தனன் கொள்க நீயுனக்குப்
பூவில்வாழ் அயனும் நிகரில்லை யென்ருல்
புண்ணியம் இதனினும் பெரிதோ?

எனக் கூறியமையால், அவன் தானத்தை அலட்சியமாகவும் கொள்கையை மட்டும் நன்குமதித்துள்ளான் என்பதூஉம் விளங்குகிறது. 'தானத்தில் சிறந்தவர்களை 'வள்ளல்' என அழைப்பர். இந்தத் தான உலகத்தில் இருபத் தொரு வள்ளல் பெயர்கள் காணப்படுகின்றன. இத்தகைய தானம் உறவு நட்பு பாசம் பகைமை எனப்பாராமல் செய்யப்பட்ட போதிலும் பகைவனுக்குத் தானம் செய்வதே சிறப்புடைத்து என்று கருதினர். நம் ஆன்ருேர். மகாபலி பகைவனுக்குத் தானம் கொடுத்தமைபற்றி வியந்து பேசுகிறது இவ்வுலகம்.

தானமாவது அறநெறியில் செய்தல் வேண்டும் என்பது ஆன்ருேர் கட்டளை. அறம் மூவகை இன்பங்களைப் பயக்கும்.

"அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை
மறத்தலி னூங்கில்லை கேடு"

என்று வள்ளுவனர் கூறிப் போந்தார். எச்செயல் புரியினும் அச்செயல் அறவழிப்பட்டதா?

என ஆராய்தல் கடமை. அதனை மறப்பின் கேடுறும் என்பது திண்ணம் என்பதே இதன் கருத்து.

அறம், பொருள், இன்பம், வீடு எனத் தொடர்ந்து கூறியதும் அறத்தாற்றில் ஈட்டும் பொருளே பொருள் என்றும், அறத்தாற்றில் நுகரும் இன்பமே இன்பம் என்றும் குறிப்பாக உணர்த்தி அறத்தாற்றில் பொருளீட்டி அறத்தாற்றில் இன்பம் நுகர்ந்த புனிதரே வீடுபேறு அடைதல் கூடும் என்று கருத்துத் தோன்ற அதனை ஈற்றில் வைத்தனர் போலும். இத்தகைய அறத்தை ஆண்மக்கள் செய்ய ஆக்கம் அளிப்பவர் பெண்களே.

வள்ளுவனுர்

''தெய்வம் தொழாஅள் கொழுநற் றெழுழ<br>தெழுவாள்<br>பெய்யெனப் பெய்யும் மழை''

எனக் கூறியதும் இதைக் கருதியே. ஆடவரின் வன்கண்மைக்கஞ்சி நங்கை கொழுநனை வணங்கி நடப்பதை வள்ளுவர் குறிப்பிடவில்லை. மெய்மையான அன்பினுல் கணவன் வழிநடந்து துணை செய்வதை இக்குறள் கூறுகிறது.

இக்காலத்தில் தயவிற்காக—உற்ருர் உறவினர் என்பதற்காகத் தங்களை விளம்பரப்படுத்திக் கொள்ளும் போலிக் கவுரவத்திற்காக—பின்னுல் பயன்தரும் என்பதற்காகப் பலவாருகத் தானம் செய்யப்படுகிறது.

ஒருகரம் கொடுக்கும் தானத்தை மறுகரம் உணராத வகையில் கொடுக்கும் தானமே தானத்தில் சிறந்தது. இத்தகைய அறத்தின் ஆற்றலைத் தண்டபாணி சுவாமிகளும் மனு நெறித் திருநூலில்,

''அறம்போலும் ஆக்கம் இல்லையா மென்றறியின்<br>மறம்போம் மெய்வீடு வரும்''

என்று கூறியுள்ளார்.

இருப்பினும் வள்ளுவர் இத்தகைய அறத்தை நான்கே சொற்களில்,

'அழுக்காறு அவா வெகுளி இன்னுச்சொல்<br>[நான்கும்<br>இழுக்கா இயன்ற தறம்'

எனக் கூறியுள்ளார்.

---

# தமிழும் சைவமும்

எல்லாம்வல்ல இறைவனுக்குப் பழைய தமிழ் நூல்களிலும், வட நூல்களிலும் வழங்கிய முக்கண்ணன் உருத்திரன் முதலான பல பெயர்கள் இருக்க, அவற்றுள் ஒன்ருன சிவன் என்னும் பெயர் மட்டும் ஏனைப் பெயர்கள் எல்லாவற்றிலுஞ் சிறந்ததாக எடுக்கப்பட்டு முதல்வனுக்கு வழங்கலானதும், அப்பெயரின் வழியே முழுமுதற் கடவுளை வழிபடுந் தமிழரது கொள்கை அல்லது மதம் சைவம் எனப் பெயர் பெறலானதும் என்னை யெனின், சிவன் என்னுஞ் சொல்லே ஏனையெல்லாவற்றினும் மிக்க பழமையுடையதொன் றென்பது, மற்றப் பண்டை மக்களிற் பலர் அச்சொல்லையே இறைவனுக்குச் சிறந்த பெயராக வைத்து வழங்கிய வாற்ருல் அறியப்படுகின்றது. எபிரேயர் சிறந்த பெயராக வைத்து கடவுளைச் 'சிகோவா' என்றே அழைத்தனர்; உரோமர் அதனைச் 'சூபிதர்' என்றே அழைத்தனர்; இவ்வயலவர் வழங்கிய அச் சொற்களெல்லாஞ் 'சிவ' என்னுச் சொல்லின் திரிபேயன்றி வேறல்ல. மேல்நாடுகளில் அஞ்ஞான்று வாணிகம் நடாத்திய பண்டைத் தமிழரின் வாயிலாகச் 'சிவ' என்னுஞ் சொல் அயல்நாட்டு நாகரீக மக்களிடையே பரவக் காணுமையின், வடக்கிருந்த பழந்தமிழர் வழங்கிய 'சிவ' என்னுஞ் சொல்லே ஏனையெல்லாவற்றினும் மிக்க பழமையுடைத்தென்பது தெளியப்படா நிற்கும். அதனுற்ருன், 'சிவ' என்னுஞ் சொல் தமிழர் வணங்கிய முழுமுதற் கடவுளுக்குச் சாலச் சிறந்த பெயராகவும், அவரது மதம் அச்சொல்லின் வழியே 'சைவம்' என்னுஞ் சிறப்புப் பெயருடையதாகவும் வழங்கி நிலைபெறலாயினவென்று ஓர்ந்து கொள்க.

—மறைத்திரு. மறைமலையடிகள், 'தமிழர் மதம்'

# தம்பிக்கு

(திரு. ந. அர்த்தநாரி, ஆசிரியர், பேரூர்)

அன்பான தம்பி, இறையருள் பெற்று எழில் நலம் பெறுக. நீ என்ன செய்துகொண்டிருக்கிறாய்?

விழிமின்; எழுமின்; இணையிலா இந்தியாவின் விழுமிய நிலைதனை எண்ணிப்பார். உலகுக்கே வழிகாட்டி நிற்கின்றதல்லவா நம் இந்தியா. அது எவ்வகையாலே? அதுதான் ஆன்மிக நெறியாலே; பண்பட்ட முறையாலே—பாருக்கெல்லாம் ஏற்ற பரம்பரையாலே. உள்ளம் உவகை கொள்கிறது. எண்ணம் நிறைகிறது. ஏனென்றால் உலகிலுள்ள துறவொழுக்க நிலையங்களிலேயே மிகப் பழமை வாய்ந்த நிலையம் அல்லவா நம்முடையது. 'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி பகவன் முதற்றே உலகு' என அறிவுறுத்திய சமயமல்லவா நம்முடையது. நயத்தகு நாகரிகத்தை—பண்புடைமையை, பொது நோக்கை உலகுக்குக் கற்பித்த சமயமல்லவா நம்முடையது.

நம் சமய நெறிதான் வாழ்வுநெறி என்பதனை நீ என்றாவது எண்ணிப் பார்த்ததுண்டா? இந்தியத் தந்தை காந்தியடிகள் கூறியது போன்று மனிதன் வாழ்வின் சிக்கல்களில் சிக்குண்டு வாழ்வு, இறப்பு என்ற நிலையில் திகைப்புறுகிறான். அப்போது அவனுக்கு ஆறுதல் தந்து ''வாழ்வு சுமை'' என்ற எண்ணம் போக்கி நல்வழிப்படுத்துவது சமயம் என்பதனை நீ அறிவாயா? மேலைநாட்டு அறிஞர்கள் எல்லாம் உள்ளத்தின் உயர்வே வாழ்வின் உயர்வு என்று மனிதனுக்கு உளவியல் முறையில் வாழ்வு முறையை ஒழுங்குபடுத்த முயல்கின்றனர். இங்கேதான் நீ ஆழ்ந்து சிந்திக்க வேண்டும். நம் சமயமே வாழ்வை ஒழுங்குபடுத்துவது என்பதனை அறிய வேண்டாமா? 'மாந்தர் தம் உள்ளத்தனையது உயர்வு' என்பது உலகப் பொது மறையாம் வள்ளுவத்தின் வாக்கல்லவா?

நமது தலைவர் டாக்டர் இராதாகிருஷ்ணன் குறிப்பிடும்போது சமயம் என்பது யோகம் தனி மனித வளர்ச்சி, ஆளுமை பெறுதல்—இயல்பினை நன்னிலைப்படுத்தல் — மனித ஆன்மா விழிப்படைதல் என்று குறிப்பிடுவதை ஆழ்ந்து சிந்தித்ததுண்டா? இந்த முறையிலே வாழ்ந்து வழிகாட்டியவர்கள் நம் நாயன்மார்கள், ஆழ்வார்கள். அவர்கள் வாழ்வுபற்றியும், பக்தியுணர்ச்சியூட்டும் பாடல்கள்பற்றியும் நீ அறிய முயற்சி செய்ததுண்டா? தேவாரம், திருவாசகம் ஆகிய நூல்களிற் கூறுவனபற்றிச் சிந்தித்தல் நலம் பயக்குமன்றோ.

கற்றதனால் ஆய பயன் கடவுளின் நற்றாள்களைத் தொழுதலேயாம்: சேர, சோழ பாண்டியர்கள் அன்று கடவுட்கு எனக் கட்டிய கோயில்களின் தற்கால நிலைபற்றி நீ எண்ணியதுண்டா? கட்டிடக் கலைக்கே பெயர் போன தஞ்சைப் பெருங்கோயில் போன்ற இடங்கள் வௌவால்களின் குடியிருப்புக்களாக இருக்கும் நிலைதனைப் போக்க வேண்டாமா?

அண்மையில் உலக மாநாடுகள் நடத்திய பல சமயங்களைப் பார்க்கின்றோம். உலக வரலாற்றுப் பேராசிரியர் டாக்டர் ஆர்னால்டு டாயின்பி ''இந்தியச் சமயங்கள் குறுகிய மனப்பான்மை கொண்டவை அல்ல'' என்கின்றார். அறிஞர் மோனியர் வில்லியம் ''இந்து சமயம் உலகத்திற்கே மனித இனத்திற்கே ஒரு சமயநெறி'' என்கிறார். அப்படிப்பட்ட செந்நெறி உலகெங்கும் பரவ வேண்டாமா? இப்பணியில் உன் சிறப்பான பங்கு என்ன? முறையாக, நீ பெறும் பயனாக அச்சமயம் பழம் பெரும் பரம்பொருளைப் பாடிப் பரவ வேண்டாமா? பயனுள்ள வாழ்வு வாழ வேண்டாமா? ஆம் நீ வேடிக்கை மனிதனாய் வாழமாட்டாய். செய்நெறியெல்லாம் செந்நெறியாகுமாறு செயல்படுவாயாக.

உன் நலம் நாடும்

அண்ணன்

அன்பு.

# மாணவர்களும் சமுதாயப் பணிகளும்

[ப. செங்குட்டுவன், பள்ளி இறுதி வகுப்பு]

மக்கள் சமுதாயம் தோன்றிய நாள் தொட்டு இன்றுவரை எத்தனையோ மாறுதல்களோடு மண்டியிட்டு மறைந்து வருகின்றது. இம்மாறுதல்களுக்கு இடையே மனிதன் அடைகின்ற வளர்ச்சி, வாழ்வு, வளம் என்பன பலப் பல. வாழ்க்கையில் எத்தனையோ பழக்க வழக்கங்கள், கட்டுக் கோப்புகள், தொடர்புகள் நிறைகின்றன. அவைகளில் ஒன்று மாணவ வாழ்க்கை. மனித வாழ்வு செம்மையுறுவதற்கு அடித்தளமாகவும் அரண்மனையாகவும் அமைவதே இந்த மாணவ வாழ்க்கை, மாணவப் பருவம், "அரியவற்று ளெல்லாம் அரிதே பெரியாரைப் பேணித் தமராக் கொளல்" என்ற வான் மறைக்கு வாய்ப்பினைத் தரும் மாணவ வாழ்க்கையில் சமுதாயப் பணியினை நோக்குவோம்.

## குறிக்கோளும் மாணவரும் :

மக்கட்கெல்லாம் வேண்டிய, உயர்வாகிய குறிக்கோள் ஒன்று மிகவும் வேண்டற்பாலது. அது தம்மைத்தாம் உயர்த்திக் கொள்வதோடு பிறர்க்கும்பயன்படுவதாக அல்லது ஊறுவிளைவிக்காத அளவில் அமைதல் சாலச்சிறந்தது இந் நோக்கம் இல்லையேல் மனிதன் மனிதனுகான். அல்லது அவன் வாழ்நாளும் வீழ்நாளாகும் என்பதும் சான்றோர் கண்ட மெய்ம்மை. இதனையே நமது சமயச் செந்நெறிச் சான்றோரான அப்பர் அருள்வாக்கு "பாலனுய்க் கழித்த நாளும், பணி மலர்க் கோதை மார்பம், மேலனுய்க் கழித்த நாளும் குறிக்கோளிலாது கெட்டேன்......' என்று வலியுறுத்துகின்றது.

மாணவர்கள், தலையாய மனிதராய் வளர்ச்சி அடைவதற்குரிய குறிக்கோளைக் கொள்ளுதல் மிகவும் இன்றியமையாதது. மாணவர்கள் மாணவர்களாக வாழத் தலைப்படுதல் அவசியம் மாண் —மாட்சிமை, பெருமை, மகிமை என்ற பொருளுக்கேற்ப அவைகளை உடலால், உரையால், உள்ளத்தால் அமைத்து வளர்த்துக் கொள்ளுதல் வேண்டற்பாலது.

## பெற்ருேர் :

இம் மாண்புடைமையினுல் ஈன்றவரும், சான்றவரும் பெருமைப்படுதல் ஒருதலை (உறுதி) "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" ஆன தினுல் இவர்களுடைய வளர்ப்பே எதிர்காலச் சிற்பியாக விளங்கப்போகும் குழவிக்கு உறுதுணையான ஒத்துழைப்பு எனில் மிகவும் பொருந்தும்.

## கல்வியும் பயனும்!

பெற்றவரின் போற்றுதலினுல் மட்டும் குழந்தை தக்கோனுய் விடுதல் முடியாது. நன்னடை நல்கற்குரிய கொள்கையினைக் கைக்கொள்ளல் வேண்டும். "கல்லார் நெஞ்சில் நில்லான் ஈசன் —"கல்லாத மூடரைக் காணவும் ஆகாது" என்ற திருவாக்குகளை உணர்ந்து "கற்றதனுல் லாகும் பயனெனும் கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியைத் தொழுதலாகிய பயனை அடைதல் அறிவுடைமை. இதனையே பரஞ்சோதி முனிவர் "அங்கங்கே கலைகள் தோறும் அறிவன் போலியங்கும்" என்று தென்றலை மாணவனேடு ஒப்பிடுகின்ருர்.

## ஒழுக்கம் :

கல்விப்பயனுகிய அறிவினைப் பெற்று முழுமை அடைந்த ஒருவற்கு ஒழுகலாறு மிக மிக வேண்டற் பாற்று என்பதை நுண்ணிய நூல்பல கற்பினும்மற்றுந்தன் உண்மைஅறிவே மிகும்" என்ற குறள் மூலம் வலியுறுத்துகின்ருர். மேலும் "பண்புடையார் பட்டுண்டு உலகு" என்ற சிறந்த மாண்புடைமையினைப் பெற்று உலகத்தோடு ஒட்ட ஒழுகலை மாணவர் சமுதாயம் உணரவேண்டும். மேலும் தமிழ் மறையாம் திருக்குறளைஓதி "நிற்க அதற்குத்தக" என்ருங்கு அன்புடைமை, அறன் வலியுறுத்தல், ஒழுக்கமுடைமை ஒப்புரவறிதல் அதன்வழி ஈகை, அருளுடைமை, தவம், வாய்மை, கொல்லாமை, மெய்யுணர்தல், குடிமை, மானம், பெருமை, சான்ருண்மை பண்புடைமை, நன்றியில் செல்வம் போன்ற அதிகாரக் கோட்பாடுகளின்படி ஒழுகலே சாலச் சிறந்ததாகும். இதனையே அருணகிரியார் முருகனிடம் "இகபர சௌபாக்கியம் அருள்வாயே" என்று வேண்டுகின்ருர்.

## வேண்டுவன !

"சென்ற இடத்தாற் செலவிடாது" காத்துநிற்கும் அறிவினைப் பெற்றுத் தன்னைக் காத்துக் கொள்ளும் தகுதியுடையவராக விளங்குவதோடு நம்வாழ்க்கையில் எத்துணையோ விதத்தில் உறுதுணையாகநிற்கும் உயிர்க்கூட்டங்களை உணர்ந்து மதித்து நடக்க "எத்துணையும் பேதமுருது எவ்வுயிரும் தம் உயிர்போல் எண்ணிப்" பணியும் பான்மையினை மனத்தில் இருத்தல் வேண்டும். "நீ பிறரிடமிருந்து எடுத்துக் கொண்டது எவ்வளவு? நீ பிறர்க்கு அன்புடன் கொடுத்தது எவ்வளவு?" என்ற கேள்விகளுக்குத் தக்க விடை

# தமிழ் வளர்...

[எஸ். சுபாஷ் சந்திரபோஸ், ந. க. உ. பள்ளி, சித்தரபுதூர்]

எழுவாய் : 'தமிழ்' என்று கூறியவுடன் சிலர் மலர்ந்த முகத்தினைக் காட்டுவர், சிலர் முத்துப்பல் தெரிய முறுவலிப்பர் ; சிலர் இன்ப முடையதென இயம்புவர்; சிலர் வளமுடையது என வாழ்த்துவர் ; சிலர் பழமைமிக்கது எனப் பகர்வர்; சிலர் காதலை வளர்ப்பது எனக்காரணம் கூறுவர்; சிலர் அழியாது வாழச் செய்வது— அமுதாற்று என அன்பு பாராட்டுவர் ; இவ்வாறு பல்வகை வளங்களும் தன்னகத்தே பாங்ுற மல்கப் பெற்ற நந்தமிழ் மொழி வாழ—வளரத் தமிழன்பர்களாகிய நாம் செய்ய வேண்டுவது என்னை ? இதனை விளக்கிக் கூறும் முகத்தான் இக் கட்டுரை இவண் வரையப்படுகிறது.

முதன் முதலில் தமிழில் என்ன இருக்கிறது ? என்று வினவும் தமிழ்க் கேடர்களுக்கு நான் அறை கூவலாக இதனை விடுக்கின்றேன். தமிழில் என்ன இல்லை ? இயலில்லையா ? இசை யில்லையா? நாடகமில்லையா? அறிவியலில்லையா ? கலையியலில்லையா ? வாழ்வை நன்முறையில் நடாத்திச் செல்வதற்கேற்ற வழிநூல்கள் தானில்லையா ? உலகின் கண் தோன்றிய பல மொழிகள் இருக்குமிடமறியாது அழிந்தொழிந்து போக அன்று தொட்டு இன்றுவரை என்றும் கன்னி யாகவே—ஆனால் வளத்துடன்—இருந்து வரு கின்ற மொழி தமிழ் மொழிதானே ? இதை மறுக்க வியலுமா ? அல்லது மறைக்கத் தானிய

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

யினைத் தரும் தகுதியடைதல் வேண்டும். "கீழ்மை யகற்றிக் கிழமைப்பட" வாழவும், தனக்கென வாழாப் பிறர்க்குரியாளனாக" வாழவும் வேண்டும். இதற்கு நல்லாரைக் காண்பது நன்று என்ற வரன்முறையில் பெரியா ரைத் துணைக்கோடல், அன்பர் கூட்டத்தோடு ஆண்டவனை அகமுருகத் தொழுதல் தந்தையும், தாய், தம்முன், தன்னாசிரியன் இந்த ஐங் குரவர்களைப் பேணிப் பாதுகாத்தல் தலையாய கடமையாகக் கொள்ளுதல் வேண்டும்.

## தொண்டு :

"என்கடன் பணிசெய்து கிடப்பதே" என்ற வாகீசப் பெருந்தகையின் உயிர்த்துணையாகும் தொண்டினை மேற்கொண்டு நாடொறும் மன்னு யிர்த்தொண்டு செய்து பழகுவதே மாணவர் களது கடமையாகும். இவ்வகையாக மாணவச் சமுதாயம் செய்யவேண்டிய பணிகள் பற்பல. அவற்றுள் தலைசிறந்தவை சமுதாயச் சீர்திருத் தம், முதியோர் கல்வி என்பன.

## மொழி வேட்கை!

அளப்பரும் தொன்மையும் நன்மையும் வண்மையும் படைத்ததாய் மொழிச் சேவை யினைச் செய்தல் முதற்கடமையாகக் கொள் ளல் இன்றைய உலகப் போக்கிற்கு மிக வும் இன்றியமையாதது. தாய்மொழிச் சிறப்பை உலகு அறியச் செய்வதோடு, பிறநாட்டு நல்லறி ஞர் சாத்திரங்களை மொழிபெயர்த்துக் கொள்ளல் இன்றியமையாதது. இதற்கென மன்றங்களை நிறுவித் தாய்மொழிச் சேவையினை அதன் வழி வளர்த்தல் சாலச்சிறந்தது.

## சமுதாய சமயப்பணி!

இன்றைய உலகம் சுருங்கிக்கொண்டே வரு கின்றது. காரணம் இயற்கையின் வாயிலாக அறிந்து வளர்த்துக்கொண்ட அறிவியல் வளர்ச் சியேயாம். "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்ற புறநானூற்றுப் புலமைக்குப் புத்துயிர் அளிக்கின்றது இன்றைய புதுமை உலகம். எனவே நாம் இன்றைய உலகுடன் ஒத்துச் சென்று வாழத் தலைப்படுதல் வேண்டும். இல்லை யேல் இம்மையிலேயே அருநரகிடை வீழ்ந்து அல்லல்பட நேரிடும். வாழ்வை வளமாக்கும் நெறிகளை மக்களுக்கு எடுத்துக்காட்டி அவ்வழிச் செந்நெறியுடைவர்களாய்த் திகழ்தல் வேண்டும், "வேறுபடும் சமயமெலாம் புகுந்து பார்க்கில் விளங்கும் பரம்பொருளே நின்விளையாட்டல்லால் மாறுபடுங் கருத்தில்லை" என்ற தாயுமானவர் நோக்கைக் காட்டுதல் சமுதாயப்பணிக்குப் பொருந்தும்.

வையத்துள் வாழ்வாங்கு வாழக்கற்று வழி களை மேற்கொண்டு அச்சந் தவிர்த்து அடிமை நீங்கி அன்புடன் இணைந்து வாழத் தலைப்படு தலே மாணவர்களுக்கு வேண்டற்பாலது. பாட் டாளி வர்க்கத்தினைப் பேணுதல், மொழிவளத் தைக் காத்தல், நாட்டுக்கு நற்பணி செய்தல் சம யப்பணியினை விளக்கிச் சமுதாயத்திற்குத் துணை புரிதலே மாணவர்களது தலையாய தொண் டாகக் கொள்ளுதல் வேண்டும்!

" எவ்வுயிரும் என்னுயிர் போல் எண்ணி
இரங்கவும், நின் தெய்வ அருட்கருணை
செய்யாய் பராபரமே"

என்று எண்ணி வாழ்த்தி "என்கடன் பணி செய்து கிடப்பதே" என்று கூறி முடிக்கிறேன்.

லுமா? இனி, தமிழ் வளர்ச்சில ஆக்கம் பொருந்திய கருத்துக்களை இவண் தருகின்றேன்.

தமிழ் வளர: தமிழ் மக்கள் தமிழ்ப் பெயர் களையே தங்களது குழந்தை கட்கிட்டு வழங்குதல் வேண்டும். தெருக்களும், நகரங்களும் தமிழ்ப் பெயர்களையே கொண்டிலங்குதல் வேண்டும். கடைகளை உணர்த்தும் 'விளம்பரப் பலகைள்' தமிழ்ச் சொற்களே தாங்கியிருத்தல் வேண்டும். 'ரைஸ் மில்' என்றெழுதப்படாமல், 'அரிசி அரைக்குமிடம்' என எழுதப்படல் வேண்டும் இவ்வாறு ஒவ்வொரு கடையின் விளம்பரப் பலகையும் நற்றமிழில் எழுதப்படுமாயின், நற்றமிழ்ச் சொற்கள் பொதுமக்கள் பேச்சில் வழக்குப் பெற்று விடும்.

படக்காட்சி உருவாகு மிடங்களிலெல்லாம் தமிழறிந்த புலவர்கள் வீற்றிருந்து கதையும், உரையாடலும், பாடல்களும் பிழையற்ற தமிழில் ஆக்கல் வேண்டும். ஒவ்வொரு அச்சகத்திலும் தமிழ்ப் புலவர்கள் அமர்த்தப் பெற்றுத் தூய தமிழில் விளம்பரத் தாள்களும் நூல்களும் அச்சிட்டு வெளிவரும்படி ஏற்பாடு செய்தல் வேண்டும். செய்தித் தாள்கள் எளிய—இனிய தூய தமிழ் நடையில் வெளியிடப் படுதல் வேண்டும்.

தமிழர் வரிப்பணத்தாலும், தமிழர் வள்ளன்மையாலும் கட்டப்பட்ட தமிழகத்துக் கோயில்களில் தமிழிலேயே வழிபாடு நடைபெறச் செய்தல் வேண்டும். ஒரு தமிழன், மற்றொரு தமிழனைக் காணுங்கால் தன் தாய் மொழியான தமிழிலேயே பேசுதல் வேண்டும். இந்த உறுதிப்பாடு ஒவ்வொரு தமிழன்பனுக்கும் இருத்தல் சாலவும் நன்று.

கல்லூரிகளில் பயிற்று மொழியாகத் தமிழே வீற்றிருக்குமாறு நம்மரசு சட்டமியற்றல் வேண்டும். தமிழ் முறைப்படி செய்துவைக்கின்ற திருமணங்களை ஏற்றுக் கொள்ளச் சட்டத்திருத்தம் செய்தல் மிகமிக இன்றியமையாத தொன்றாகும்.

அறங்கூறும் அவைகள்-அரசியல் மன்றங்கள் போன்ற பல்வேறு துறைகளிலும் தமிழுக்கு முதன்மையளித்துத் தமிழன்னையை ஏற்றம் குன்றாமல் பாதுகாப்பது நம் கடமையென்பதை இன்று நாடாள்வோர் நன்குணர வேண்டும். இவ்வாறாக, வாழ்வில் நடைபெறும் நிகழ்ச்சிகள் அனைத்தும் தமிழையே அணைத்து நிற்றல் அருமையிலும் அருமையாகும்.

எழுச்சிபெறுவீர்! பரணியில் ஏறிப் பதுங்கிய தமிழன்னை, மூர்ச்சை தெளிந்து கீழிறங்கி அச்சமின்றி நடமாட அரசினர் ஊக்கமுடன் ஆக்கம் தர ஆவன செய்தல். இன்றைய நிலையில் தமிழின்னும் சீருடன் சிறப்புமுற்று உயர் நிலையடையுமெனத் தமிழன்பர்கள் கருதுகின்றனர். எனவே, ஆட்சி புரிவோர் தமிழ்ப் பற்றுக் கொண்டார் களாகத் தமிழ் வளர ஆவன செய்வார்கள் என்று எதிர்பார்க்கிறோம்—எதிர்பார்க்கலாம்.

தமிழினம் பல்வேறு சமயத்தின ரடங்கிய கூட்டுக் குடும்பமாகும். தமிழரிடையே ஒற்றுமை நிலவவேண்டுமானால், சமய பேதங்களை வற்புறுத்த லாகாது. தமிழிலுள்ள பக்தி நூற்கள் வாழும்வரை, சமய உணர்வும் தெய்வ நம்பிக்கையும் வாழ்ந்தே தீரும். தமிழகம் தெய்வ நெறியின் பிறப்பிடம். அதனாற்றான்—'தென்னாடுடைய சிவனே போற்றி' என்றுரைத்துப் பின், எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி' என்றார் மாணிக்க வாசகர். கடந்த ஞானியும் தாய்மொழிப் பற்றைத் துறந்ததில்லை; துறக்கவும் முடியாது. தாய் நாட்டுப் பற்றும் அத்தகையதே!

நாம் மிகப் பரந்த வானில் பறக்க விரும்பலாம். அதற்கும் ஒரு வானவூர்தியின் துணை தேவைப்படுகிறது. நாம் விரிந்து பரந்துகிடக்கும் ஆழ் கடலிலே பயணம் செய்ய விரும்பலாம். அதற்கும் ஒரு சிறு கப்பலேனும்-தேவையாகின்றது. அதுபோல, நாம் மனிதகுலம் முழுவதற்கும் பணி புரிய விரும்பும் பரந்த நோக்கமுடையார் களாக இருக்கலாம். ஆனால், ஏதேனும் ஒரு மதத்தின் நெறியைப் பின்பற்றிக் கொண்டுதான் மற்ற மதத்தினரோடு நட்புணர்வுடன் வாழ முடியும்:

நமது உள்ளத்தின் அரும்புகின்ற எண்ணங்களை உலகத்தவர்க்கெல்லாம் எடுத்தியம்ப நாம் எண்ணலாம்' அதையும் ஏதேனும் ஒரு மொழியின் வழியில் தான் சொல்லமுடியும். அந்தமொழி நம் தாய்மொழியாகவன்றி வேறு எதுவாக விருத்தல் கூடும்?

இறுவாய்: இதுகாறும் கூறப் பெற்ற வழி வகைகளை-நெறி முறைகளை யுணர்ந்து, உள்ளத்திலமைத்துப் பழக்கத்திற்குக் கொண்டுவரின், ஏறத்தாழ அறுபது திங்களுக்குள் தமிழகம் முழுமையும் தமிழ்மொழி வேரூன்றிப் படர்ந்து, பூத்துக் காய்த்துக் கனியுமென்பதில் துளியேனும் ஐயமுண்டோ?

'தமிழ் வளர்ந்தால்தான் தமிழன் வாழ்வான் தமிழன் வளர்ந்துயர்ந்து வாழ்ந்தால்தான் தமிழகம் பல்வகை வளங்களையும் ஒருங்கே பெற்றிலங்கும். எனவே அன்புத் தமிழ்வாழ—வளர ஆவன செய்வோம். அயரா துழைப்போம். ஏட்டிலும் எண்ணத் திலுமன்றிச் செயல் முறையிலு மதைத் தொடருவோம்.

வாழும் தமிழ் கற்று<br>
வளமுடன் வாழ் வோம்.

'யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல் இனிதாவதெங்கும் காணோம்' என்ற பாரதியின் கூற்றை நினைவிற் கொள்வோம்.

# பரதன்

[ந. வேதநாயகி, 11ஆம் வகுப்பு 'அ']

## தோற்றுவாய்

கவிச் சக்ரவர்த்தி கம்பர் இயற்றிய இராமாவதாரம் என்னும் இராமாயணம், கதை அமைப்பாலும், பொருட் சிறப்பாலும், கருத்து வளத்தாலும் சிறந்து ஓங்கித் தமிழன்னைக்கு ஓர் அணிகலமாகப் பொலிந்து நிற்கின்றது. அப் பெரும் நூலில் வந்துள்ள பாத்திரங்கள் பலவும் தத்தம் நிலையில் தந்நிறைவு உடையவை. அப் பாத்திரங்களின் குணம் செயல்களில் விரி வாக்கங்களைக் கதைக்கு ஏற்ப நடத்திச் செல்லும் புலவர் திறம் போற்றுதற்குரியது. தமிழ்மொழி எழுத்து, சொல் என்ற இலக்கணங்களின் மேல் எழுந்து, அம்மொழிக்கே உரிய அகம், புறம் என்ற பொருள் நலத்தில் திணையும், துறையும் காட்டி நிறைந்து நிற்பது அப்பெருநூல். கம்பநாடர் அமைத்த பாத்திரங்கள் யாவும் அவர்தம் மொழி அறிவின் உருவங்கள் ஆதலின் அவர் தமிழின் சார்பாகக் கொண்ட ஒள்ளிய, தீவிய, தெய்வ நலக்கருத்தை முதலிற் காட்டியபின் யான் எடுத்த பாத்திரமாகிய பரதனைப் பற்றித் தெரிந்தன சில நினைந்து எழுதுவேன்.

## கம்பனின் கல்விக் கருத்து

கல்வியாகிய வித்து முளைத்தது; அது கேள்வி யாகிய கிளைகளைப் பரப்பியது; அக்கிளை களில் அருந்தவங்களாகிய தழைகள் தழைத்தன அவற்றிடையே அன்பெனும் அரும்புகள் முகிழ்த் தன. அவை அறமெனும் மலர்களாக மலர்ந்தன பின் அவை இன்பக் கனியாகப்பழுத்தன என்று கம்பநாடன் கூறுவதிலிருந்து கல்வியின் சார்பாக அவர் கொண்ட திர்ந்த, தெளிந்த, முடிந்த கருத்தினை உணருகின்றோம். இனி இக்கலை பெற்று வளர்ந்த பரதன் மாண்பினைச் சிறிது எழுதுகின்றேன்.

## கதையில் பரதன் பங்கு

பரதன் வசிட்டராகிய ஞானி இடத்து மற்ற உடன் பிறந்தாரைப்போலக் கலைபயின்று அறிவு நிரம்பியவன். உடல் நிழல்போல் தன்னைத் தொடர்ந்து நிற்கும் தம்பி சத்துருக்கனோடு தன் பாட்டன் வீடு சென்றவன், இராமன் காடு ஏகத் தந்தை மறைய, அயோத்தி திரும்புகின்றான். தாயின் சூழ்ச்சியினை உணர்ந்து கலங்கினான். அவளைக் கடிந்தான். கோசலையிடம் தன் மெய்ம் மையை உணர்த்தினான். அண்ணன் இராமனைப் போலத் தவவேடம் தாங்கி அவனை மீட்கச் சென்றான். அவன் வாராமையினால், அவன் பால் பாதுகை பெற்று வரத்தின்படி குறித்த காலத்துத் திரும்பல் வேண்டுமென வேண்டி மீளுகின்றான். மீள்பவன் குறித்தகாலத்து இராமன் திரும்பாதொழியின் நெருப்பில் வீழ்ந்து இறப்பதாக ஆணை கூறிவந்து, அயோத்தி புகாது நந்தியங்கிராமத்துத் தங்கினான். குறித்த காலத்து இராமன் வரத்தாழ்த் தமையின் நெருப் பில் வீழச்செல்கின்றான். அவனை அனுமன், இராமன் வருகை கூறித்தடுத்து நிறுத்திக் காக் கின்றான்.

## பரதன் மாண்பு

இனிக் கதை நிகழ்ச்சியில் பரதன் சார்பில் வெளியாகும் மாண்புகளைச் சுருங்க எடுத்து வரை கின்றேன். விசுவாமித்திரர் பரதனைப் பற்றி ஜனகனிடத்துக் கூறும் பொழுது,

> "தள்ளரிய பெருநீதித் தனியாறு புகமண்டும்
> பள்ளமெனும் தகையானைப் பரதனென்னும் பெயரானை
> எள்ளரிய குணத்தாலும் எழிலாலும் இவ் விருந்த
> வள்ளலையே அனையானைக் கேகையர்கோன் மகள் பயந்தாள்.

என்று கதைத்தலைவனாகிய இராமனையே நிகர்த் தவன் பரதன் என அவன் மாண்பு வெளிப்படுக் கின்றார் நீதியாறு புகும் கடலாகப் பரதன் உரு வகிக்கப்படுகின்றான். அக் கரையிலாக் கடலின் இயல்பு சில துறைகளில் வெளியாகின்றது. தாய் பெற்ற வரத்தால் தந்தை ஈந்த அரசினையும், அதனால் பெரும் பேரின்பத்தையும் மன, மொழி, மெய் என்னும் மூன்றாலும் வெறுத்து ஒதுக்கினான். அண்ணனை அழைத்துவந்து, தந்தை இழைத்த குல மாசினைத்துடைக்கும் தூயவனாகக் காட்சி அளிக்கின்றான். இவன் பெருமையினை நேரிற் கண்டுணர்ந்த குகன், " ஆயிரம் இராமர் நின்கேள் ஆவரோ" என வியந்தான். தன் மரபி னோர் புகழ்களையெல்லாம் தன் புகழ்களாக மாற் றினான் எனப் போற்றினான்.

வாலியும் சுக்கிரிவனும் போர் செய்கின்ற பொழுது இலக்குவன் அண்ணன் இராமனைப் பார்த்து, "உடன் பிறந்தார் இங்ஙனம் அன்பின்றி அரசு காரணமாகப் போர் செய்கின்றனரே இஃது என் ?" எனக் கேட்டபொழுது இராமன் கூறுவது இது,

(அடுத்த பக்கம் பார்க்க)

# தமிழும் சமய இலக்கியமும்

[சு. ப. விசயலக்குமி, பள்ளி இறுதி வகுப்பு]

தமிழும் சமய இலக்கியமும் என்ற தலைப் பின்கண் அமைந்த சொற் பொருள்களை அறிந்த பிறகு அதனைப்பற்றி ஒரு கட்டுரை எழுதுவது முறையாகும். தமிழ் என்ற இயற்சொல்லுக்கு மரபான பொருள் இனிமையும் நீர்மையும் ஏன்பது இனிமை என்பது இன்பத்தின் மேலும் நீர்மை என்பது அறிவு ஒளியின் மேலும் நிற்கும். இனிமையும் நீர்மையும் தமிழ் எனலாகும் என்பது, பிங்கலந்தை. சமயம் என்ற சொல் பொழுது என்ற பொருளைத் தரும். அப்பொழுது தானும் வேறு பலவற்றைச் சார்ந்த பொழு தாகாது. இறைவனைச் சார்ந்த பொழுதே ஆகும். எனவே உயிர்கள் கடவுளை அறிந்து நிற்கும்பொழுதே சமயம் ஆம். நன்கு சமைந் தது சமயம் என்று கூறுவாரும் உளர். இனி இலக்கியம் என்பதன் பொருள் இலக்கணங் களை உடையது என்பதாம். ''புலவர் பெரு மக்களின் உயர்ந்த கருத்துக்களின் பதிலே இலக்கியம் என்பர். மேல் உரைத்த பொரு ளின்படி தலைப்பினைப்பற்றிச் சில பல கருத்துக் கள் எழுதுகின்றேன்.

தமிழின்கண் அமைந்த எல்லா இலக்கியங் களும் கூர்ந்து நோக்கின் சமயப் பொருள் உடையனவாகவே காணப்படும். தமிழில் அறிவு தரும் இலக்கியங்களையும் அறிவோடு இன்பமும் ஒழுக்கமும் தரும் இலக்கியங்களையும் அவற்றோடு தெய்வ நலந்தரும் இலக்கியங்களையும் தன் னகத்துக்கொண்டது. இலக்கியத்தில் ஒரு பொருள் விரித்துப் பேசப்படுகின்றபொழுது அதன்கண் மற்றைப் பொருள்களும் குறிப்பால் பொதிந்து கிடக்கும் ஆதலால்தான் தமிழினைத் தெய்வ ஒண் தீந்தமிழெனச் சமயப் பெருமக்கள் பெயரிட்டு அழைக்கின்றனர். இனி இத்தமிழின் கண் அமைந்த சிறந்த சமய இலக்கியங்களின் பெயரும் அவற்றின் பொருள் நலமும் சுட்டு கின்றேன்.

தமிழின் கண் அமைந்த சமயநூல்களை அறு வகையாய்ப் பிரிக்கலாம். அவை சைவம் வைண வம் பௌத்தம் சமணம் கிறித்துவம், மகமதியம் என்பனவாக் கொள்ளலாம். சைவத்தின் கண் அமைவன திருமுறைகளும் பிற அடியார் பாடல்களும், சமய சாத்திரங்கள் பதினன்கும் ஒருவகையான இலக்கியத்தைச் சார்ந்தவையே ஆகும். பிற அடியார் நூல்களில் தவத்திரு சாந்தலிங்க சுவாமிகளின் கொலை மறுத்தல் முத லாயின குதிப்பிடத்தக்கன.

நாலாயிரத் திவ்வியப் பிரபந்தமும் பிறவும் வைணவத்தின் சார்பானவை. மணிமேகலை போன்றன பௌத்தவ இலக்கியங்கள்; சிந்தா மணி போன்றன சமண இலக்கியங்கள், தேம்பாவணியும் சீருப் புராணமும் அவை ஒத்தனவும் முறையே கிறித்துவ, மக மதிய இலக்கியங்களாகும். எல்லாச் சமய இலக்கி யங்களும் உயிர்கள் அறிவு பெற்று ஒழுக்கநெறி நின்று பாவம் தீர்ந்து இறைவனை அடைந்து பேரின்ப முறுதலையே முடிந்த நிலையாகப் பேசு கின்றன. இரண்டொரு உதாரணங்கள் காட்டு கிறேன். திருஞான சம்பந்தர் அம்மையின் பாலினை ஞானத்தொடு கலந்துண்டபொழுது எல்லா ஞானமும் பெற்றுர். அது ''சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம், பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம், உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெஞ் ஞானம் தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தார் அந்நிலையில் என்ற பாடலில் தெளிவாகின்றது. இது சமய இலக்கிய ஞானமும் பயனும் ஆம்.

---

'எத்தாயர் வயிற்றினும் பின் பிறந்தார்
கஎளெல்லாம்
ஒத்தால் பரதன் பெரிது உத்தமன் ஆதல்
உண்டோ'

எனப் பரதனது அன்பியல்பை வரம்பின்றிப் போற்றுகின்றுன் இராமன்.

இறுதியில் இராமன் வாராமையினல் நெருப் பில் விழ்கின்ற பரதனைப் பார்த்துத் தாய் கோசலை இராமனினும் நல்லவனக உளத்தில் வைத்து நிறைகுணத்தவனகப் போற்றிய அவனை,

எண்ணில்கோடி இராமர்கள் என்னினும்,
அண்ணல் நின் அருளுக்கு அருகு ஆவரோ
புண்ணியம் எனும் நின் உயிர் போயினல்
மண்ணும் வானும் உயிர்களும் வாழுமோ ?

என்று பரதனை ஒப்பு உயர்வு அற்ற எல்லை யில் வைத்துப் போற்றுவாள் ஆயினள். கம்பன் படைப்பில் பரதன் என்னும் பாத்திரம் காப்பியத் தலைவனகிய இராமனேடு சேர்ந்து வரம்பின்றிப் பொலிந்து நிறைந்த மோன ஞானதவ வடி வாதலை உணர்கின்றேம்.

---

# மனித வாழ்க்கையில் கலைகள்

[சி. கனகசாமி, ஒன்பதாம் வகுப்பு]

பொதுவாகக் கலை என்பது வாழ்க்கையில் ஏற்படும் பல நிகழ்ச்சிகளே. கலை என்பது கடந்த காலக் கன்னிகை; நிகழ்காலத்தின் மனைவி. வருங்காலத்தின் தாய் என்பர் சில அறிஞர். மனிதனுக்குத் தோன்றும் உணர்ச்சியைப் பிரதிபலிப்பதுதான் கலை. வாழ்க்கையின் நிழல்களே கலைகள்.

கலைதோன்றும் விதத்தை ஆராய்வது சிறப்பு. மனிதன் முதலில் ஏதாவது ஒரு பொருளுடனே அல்லது வேறெதனுடனே அன்பு செலுத்துகிறன். அந்த அன்பு காதலாக மாறி அக்காதல் உணர்ச்சிகளாய் உருவெடுத்து பின்பு மனிதனின் முயற்சியால் கலை என்ற வடிவத்தை அடைகிறது. முக்கியமாகக் கலை தோன்றுவதற்கே முதற் காரணமாய் விளங்குவது மனிதனின் உணர்ச்சியே ஆகும்.

கலை எனில், அதில் பல பிரிவுகள் அடங்கியிருப்பதை நாம் அறிவோம். அக்காலத்தே 'ஆயகலைகள் அறுபத்து நான்கு' என்று கூறப்பட்ட பழ மொழியால் கலைகளில் பல பிரிவு இருந்ததை நாம் அறிவோம். இக்காலத்தே பல பிரிவுகள் இருப்பதையும் அறிவோம். ஆனால் அக்காலத்தே கலை என்றாலே, 'இயல், இசை, நாடகம்' என்ற மூன்றிலேயே அடங்கி இருந்தது. ஆனல் தற்போது ஆயிரக்கணக்கான கலைகள் இருக்கின்றன. மேலும் வளருகின்றது. ஆனல் இவ்விருவகைக் கலைகட்கும் ஒரே ஒரு வேறுபாடு தான் உண்டு. அதுதான் பண்டைக் கலைகளை விட இக்காலக் கலைகள் நாகரிகம் அடைந்தவை. மற்றொரு வேற்றுமையும் உண்டு. அக்காலக் கலைகள் கலைகளாகவே இருந்தன. ஆனல் இக்காலத்தில் கலையின் பெயரால் கொலை செய்யத் துணிந்து விடுவர் சிலர்.

தற்காலத்தே நாடகக் கலை, திரைப் படக் கலை, ஓவியக்கலை; சிற்பக்கலை, நாட்டியக்கலை, பேச்சுக்கலை, கட்டிடக் கலை, வீட்டியற்கலை, குடும்பக்கலை, அரசியற்கலை. இலக்கியக்கலை, சமயக்கலை என்று ஆயிரக்கணக்கான கலைகள் பெருகி விட்டதை நாம் அறிவோம். சிற்பக் கலைகளைக் கோயில்களிலும், பேச்சுக் கலைகளை மேடைப் பேச்சிலும், கட்டிடக் கலையை மாட மாளிகைகளைக் காணும்போதும், இலக்கியக் கலைகளை நூல்களிலும் காண முடிகிறது. இது போலவேதான் மற்ற ஓவியம், குடும்பம், பேச்சு, நாடகம், நாட்டியம் போன்றவைகளும் அமைந்துள்ளன.

கலையை ஆக்குபவருக்கு அல்லது வளர்ப்பவருக்குக் கலைஞர் என்று பெயர். ஒவ்வொருவர் ஒவ்வொரு துறையில் சிறந்திருப்பர். அவர்களை அந்தந்தத் துறைக்கலைஞர் என்றழைப்பர். உதாரணமாகத் திரைப்பட நடிகர்களைத் திரைப்படக் கலைஞர் என்றும்; அதேபோல் நாடகக் கலைஞர், அரசியல் கலைஞர், சிற்பக் கலைஞர், ஓவியக் கலைஞர், நாட்டியக் கலைஞர், கட்டிடக் கலைஞர் எனவும் பொதுமக்களால் அழைக்கப் பெறுவர். இக்கலைஞர்கள் அவர்களது கலைத்துறையின் மூலம் பொதுமக்கட்குக் கலைப்பணி செய்கின்றனர்.

கலைஞர்கள் மூலம் நமக்கு ஏராளமான நன்மை கிடைக்கிறது. உதாரணமாக பேரூர் போன்ற கோவில்களில் உள்ள சிற்பங்களை நாம் காணும்போது பண்டைக் கால மக்களின் நாகரீகம், நடை, உடை, பாவனை இவைகளைக் காண்கிறோம். மேலும் அக்கலைஞர்களது திறமையையும் காணமுடிகிறது. அக்காலத்தில் எழுப்பியுள்ள தாஜ்மஹால், செங்கோட்டை, மைசூர் அரண்மனை போன்றவைகளைக் காணும்போது அக்கால மக்களின் கட்டிட முறையையும், அதற்கு அவர்கள் பயன்படுத்திய பொருள்களையும், ஆட்சி முறையையும் தெரிய முடிகிறது. ஓவியக்கலை, நாட்டியக்கலை குடும்பக் கலை இவைகளால் அம்மக்கள் வாழ்க்கையை ஓரளவு அறிய முடிகிறது. அக்கால ஆட்சி, மக்களின் வாழ்க்கை முறை ஆகியவற்றை இலக்கியங்களின் வாயிலாக உணர்கிறோம் இக்காலத்தும் கலைகள் மூலம் நாம் அதிகப் பயனடைகிறோம். திரைப்படக் கலை, நாடகக் கலை ஆகியவாற்றல் வாழ்க்கை நிகழ்ச்சிகளை நேரில் காண்பது போலவே உணர்கிறோம்.

கலையின் பெயரால் கயமைத்தனம் புரிகின்றனர் சிலர். அது கலையின் சிறப்பைச் சீரழித்து விடும். கலைகள் ஆக்கத்துக்குரியவைகளேயாகும். கலையை நாம் எத்திசையில் வேண்டுமானாலும், காலத்திற்கேற்றபடி திருத்தலாம். அத்திருத்தம் மக்கட்கும், நாட்டுக்கும், மொழிக்கும், சமுதாயத்திற்கும் பயனுடையதாக இருத்தல் வேண்டும். ஆகவே ஒவ்வொருவரையும் ஒவ்வொரு கலையில் தேர்ச்சியுறச் செய்ய வேண்டியது நமது கடமை. நற்கலைஞர்களைத் தேர்ந்தெடுத்து நாட்டுக்கும், மொழிக்கும், மக்கட்கும், சமுதாயத்திற்கும் நன்மை புரிவதே நம்மவர் நற்றொண்டாகும்.

# கம்பர் பாடலும் – கல்வெட்டும்

[புலவர் செ. இராசு, வரலாற்றுச் சங்கம், ஈரோடு.]

கம்பரும் கொங்குநாடும்!

கவிச்சக்ரவர்த்தி கம்பர் சோழப் பேரரசன் குலோத்துங்கனிடம் மனம் வேறுபட்டபின் சோழநாட்டினின்றும் வெளியேறிச் சேரநாடு செல்லும் வழியில் கொங்குநாட்டை அடைந் தார் என்று செவிவழிச் செய்தி கூறுகிறது. கொங்குநாடு வந்த கம்பருக்கு இந்நாட்டு மக்கள் சரியான வரவேற் பளிக்கவில்லை என்றும் அத ஞல் வெறுப்படைந்த கம்பர் கொங்குநாட்டை யும், கொங்குநாட்டு மக்களையும் இழித்துக் கூறும் முறையில் ஒரு பாடல் பாடினர் என்றும் கூறுவர்.

அப்பாடல்,

ஊரெலாம் பட்டி தொட்டி
உண்பதோ கம்பஞ் சோறு
பேரெலாம் பொம்மன் திம்மன்
பெண்களோ நாயும் பேயும்
நீரெலாம் சேற்று நாற்றம்
நிலமெலாம் கல்லும் முள்ளும்
காருலாம் கொங்கு நாட்டைக்
கனவிலும் நினைக்கொ ணுதே!

என்பதாகும்.

இது உண்மையா?

கம்பருடைய இக்கூற்று உண்மையாக இருக்க முடியுமா? கம்பர் காலத்தில் (சுமார் 12, 13ஆம் நூற்ருண்டு) ஊர்கள் பட்டி தொட்டி யாகவும், ஆடவர்கள் பொம்பன் திம்மன் என்ற பெயரோடும், பெண்கள் நாய் பேய் போன்றும் இருந்தார்களா? என்று ஆராய வேண்டும். இலக்கியங்கள் இதற்குச் சரியான சான்ருக இருக்க முடியாது. ஏனெனில் அவை உயர்வு நவிற்சியாகவோ அல்லது புலவருடைய கற்பனை யாகவோ, தற்குறிப்பேற்றமாகவோ இருக்க லாம். (இதனல் வரலாற்ருய்வாளர் பலர் இலக் கியச் செய்திகளை வரலாற்றுக்கு ஆதாரமாகக் கொள்ளாத அவல நிலை நாட்டில் இன்றும் நிலவு கின்றது) அக்காலத்தின் உண்மைச் செய்தியை எவ்வித மாறுபாடுமின்றிக் கூறக்கூடிய கல் வெட்டுக்களைக்கொண்டு இதனை அறியலாம்.

மக்களின் உணவு முறையைப்பற்றியும், நீர் நிலத்தின் தன்மை குறித்தும் கல்வெட்டுக்களி லிருந்து நாம் அதிகமான சான்றுகளைத் தொகுக்க முடியாது. ஆனல் ஊர்ப்பெயர்கள், ஆண் பெண்களின் பெயர்கள் இவைகளை ஒரு வாறு அறியலாம்.

ஊர்களின் பெயர்கள்!

கம்பர் காலத்தைச் சேர்ந்ததும், கம்பருக்கு ஒரு நூற்ருண்டு முன்பின்னுகத் தோன்றிய கொங்குநாட்டுக் கல்வெட்டுக்களிலிருந்து கொங்குநாட்டின் ஊர்ப்பெயர்கள் சிலவற்றைப் பார்க்கலாம்.

நம்பிபேரூர், புகழ்மங்கலம், குன்றத்தூர், பெரும்பழனநல்லூர், இராசராசபுரம், பொழில் வாய்ச்சி, சூரலூர், குழாம்நிலை, செங்கமலப் பள்ளி, தோவன்புத்தூர், துடுப்பூதி என்பன போன்ற பழங்கால ஊர்ப்பெயர்கள் தக்கபல வரலாற்றுச் சான்றுகளோடு-காரணப் பெயர் களாக விளங்கின. இவைகளை முறையே கீழ்க் கண்டவாறு இன்று மாற்றி வழங்குகின்ருேம். நம்பியூர், பழமங்கலம், குன்னத்தூர், பெருமா நல்லூர், தாராபுரம், பொள்ளாச்சி சூலூர், கொளாநல்லி, செங்கப்பள்ளி, கோயமுத்தூர், துடுப்பதி என்பனவே மாறிய வடிவங்கள்.

அரசியல் அலுவலர் பெயரில்!

இன்னும் சில ஊர்களுக்கு அரசியல், அலு வலர், சிற்றரசர், அரசர், ஆட்சிப் பிரதிநிதிகள் பெயரில் பெயர்கள் ஏற்பட்டு வழங்கின. செம் பியன் கிழான், அமரபுயங்கன், அதிராசராசன், பராந்தகன், கண்டியதேவன், கச்சிராயன், குலதீபன், அழகிய சொக்கனர், காலிங்கராயன். வீரபாண்டியன் என்ற பல பெயர்களைக் கல் வெட்டுக்களில் காணுகின்ருேம். இவர்கள் நினைவாகவே பிற்கண்ட கொங்குநாட்டு ஊர் களின் பெயர்கள் ஏற்பட்டிருக்கலாம். செம் பியன் கிழானடி நல்லூர், அமரபுயங்கநல்லூர், அதிராசராசநல்லூர், பராந்தகநல்லூர், கண்டிய தேவநல்லூர், கச்சிராயநல்லூர், குலதீபநல்லூர்

அழகிய சொக்கபுரம், காலிங்கராயன்பாளையம் வீரபாண்டி என்ற ஊர்களின் பெயர்களைக் கொங்குநாட்டுக் கல்வெட்டுக்களின் மூலம் அறி கின்றோம்.

## சதுர்வேத மங்கலங்கள் !

சில அரசர்கள், கோயில்களைக் கட்டி, அங்கு மறையில் வல்ல அந்தணர்களைக் குடி யேறச்செய்து அவர்களுக்குச் சருவ மானியமாக அளிக்கும் ஊராகிய சதுர்வேத மங்கலங்களையும் கொங்குநாட்டில் ஏற்படுத்தினர். ஈரோட்டிற்கு அம்முறையில் ''மூவேந்த சோழச் சதுர்வேத மங்கலம்'' என்ற பெயர் கொடுக்கப்பட்டது. சேலத்திற்கு 'இராசாசிரயச் சதுர்வேத மங்கலம்' என்றும், பரன்சேர் பள்ளிக்கு (பரஞ்சேர்வழி) ''உத்தம சோழச் சதுர்வேதமங்கலம்'' என்றும், கஞ்சப்பள்ளிக்கு ''குலோத்துங்க சோழச் சதுர் வேத மங்கலம்'' என்றும், சேமூருக்கு ''உல குடைய பிராட்டிச் சதுர்வேதமங்கலம்'' என்றும் பெயரிட்டனர்.

சில இடங்களில் ஊர்ப்பெயர்கள் மொழி பெயர்க்கப்பட்டன. திங்களூரை (திங்கள் + ஊர்) சந்திர வசதி (வசதி-பஸ்தி என்ற சொல்லின் சிதைவு. கோயில் என்பது பொருள்) என்று வழங்கினர்.

## ஆடவர் பெயர்கள் !

அடுத்து ஆண்மக்கள் பெயரைக் கல்வெட் டுக்கள்மூலம் அறியலாம். அவைகளின் அமைப் பும் அழகும் நம்மையெல்லாம் வியப்படையச் செய்யும். வள்ளி மருதுருடையான் மானேந்திய கையன், நம்பிள்ளை எடுத்த கையழகியான் சுந் தரதேவன், ஆதிச்சன் உலகளந்தநாதன் கொற் றன் சிறுபிள்ளை. கோதை சோலையான், திரி புவனசிங்கதேவன், அடியார்க்கடியான், செய் யான் பல்லவராயன், மதுராந்தகன் மும்முடிக் கோன், அருளாளப்பெருமான் காளியப்பனுன தண்ணந்துமாய்த்தாசன், தம்பிரான் தோழனுன மூவாயிர நம்பி, பெற்ற பெருமாள் அழைப்பிச் சான், மாணிக்கன் தம்பிரான் தோழன், சீராளன் சொக்கன் சிறுத்தொண்டன் சிங்கப்பெருமாள், அவனி முழுதுடையான், திருநட மாடியபட்டன், கூத்தனுன அஞ்சலென்ற பெருமாள், தேவாதி தேவன் தெய்வசிகாமணி, ஆளவந்தான் அப்ப னுன அன்னதான நம்பி, மன்றுள் ஆடி சம்பந் தப்பெருமாள், பொன்னம்பலக் கூத்தன் மணிய சூரியன், அழகிய தேவன் கிளியனுன, பெரிய பெருமாள் தாமோதரன், கோப்பணவேள், திரு மலை சரவண மன்ருடி, உலகில் மன்ருடி, காடவ ராயன், இப்பெயர்கள் பலவும் அரசியல், சமயத் தொடர்போடு விளங்குவது கண்டு மகிழத்தக் கது.

## பெண்களின் பெயர்கள் !

அரையவல்லி, முக்கோக்கிழானடி, முத்துப் பொன்னி, கோதைப் பிராட்டி, மூரி அமுதனுர், அழகிய நாச்சியார், சிறுநல்லார், பெருநல்லார், தாயாண்டார், உலகுடைய பிராட்டி என்றபெண் களின் பெயர்களைக் கல்வெட்டுக்கள்மூலம் அறி கின்ருேம்.

எனவே கம்பர் பாடியதாகக் கூறப்படும் பாடலில் உள்ளவாறுபோல ஊர்கள், ஆடவர், பெண்டிர் பெயர்கள் கொங்குநாட்டில் வழங்க வில்லை என்பதும் அப்பாடலைக் கம்பர் பாடியதா கக் கூறுவது தவறு என்பதும் விளங்கும்.

---

# சாவகத் தீவில் சைவம் !

பெரம்பனுன் கோவிலானது கி. பி. 8ல் நடு சாவகத்தின் இந்து மன்னர் களால் கட்டப்பெற்றது. அந்நாளில் அவர்களுடைய பெருமை உச்சநிலையில் இருந்தது. உயர்ந்த நாகரிகம் படைத்திருந்தார்கள். சைவ சமயத்தினராய்ச் சிறந்த அன்புடைய ராய் விளங்கினுர்கள். இறைவனிடத்தில் கொண்ட பேரன்பினுல் மிகச்சிறந்த கோயி லொன்றை எழுப்பினுர்கள். ஆனுல் செல்வமானது ஆறிடும் மேடும் மடுவும் போலாம் என்பர் மூதாட்டியார். அதுபோல இந்த மன்னர் வமிசம் அழிந்துபோயிற்று, வெகுகாலம் இருக்கவில்லை. கி. பி. 915இல் முற்றும் அழிந்துவிட்டது. ஆனுல் அவர்கள் கட்டிவைத்த பெருங்கோயில் அன்னுருடைய செல்வாக்கை இதுகாறும் காட்டிக்கொண்டு நிற்கிறது.

—கோவைகிழார் சி. எம். இராமச்சந்திரன் செட்டியார்,

செல்வி சிலம்பு கூ௬-பரல் ௪௦.

உ

சிவமயம்

## திருப்பேரூர் ஆதீனம் தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார் அவர்கள்

# அருளாட்சி ஏற்புவிழா நிகழ்ச்சிகள்



அருண்மிகு சாந்தலிங்கப் பெருமான் தண்ணருளால் இவ்வாண்டு இவ்வாதீனத்தில் நடைபெற்ற விழாக்களுள் தவத்திரு இராமசாமியடிகளார் அருளாட்சி ஏற்பு விழா இவ்வாதீனத்து வரலாற்றில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கத்தக்க பெருஞ் சிறப்பு வாய்ந்ததாகும். இவ்விழா நிகழ்ச்சி பற்றிய குறிப்பினை இங்குச் சுருக்கமாகக் குறிப்பிடுகிறோம்.

தவத்திரு ஆறுமுக சுவாமிகள் தமது மிக முதிர்ந்த முதுமை காரணமாய் இளவரசும் தமிழ்நாடு தெய்வீகப் பேரவையில் தம் சார்பில் உறுப்பினராய் இருந்து வருபவரும் ஆகிய தவத்திரு இராமசாமி அடிகளுக்குக் கல்லாடை அணிவித்து முறைப்படி மடாதிபதியாக்கி ஆட்சி பீடத்தில் அமர்த்த வேண்டும்; அதனை ஒரு சிறந்த விழாவாகக் கொண்டாட வேண்டும் என்று நெடுநாளாகத் தம் உள்ளத்தில் எண்ணியிருந்த கருத்தை ஒருநாள் சிரவணபுரம் கௌமாரமடாலயத்தின் மடாதிபதி தவத்திருசுந்தரசுவாமிகளிடம்தெரிவித்தார்கள். அவர்களும் அதுகேட்டு மிகமகிழ்ந்து குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம் தவத்திரு தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் முதலியவர்களுடன் கலந்து எண்ணி, மாணிக்கவாசகர் குருபூசை நாளும் சாந்தலிங்கப் பெருமானுக்கு மாதச் சிறப்பு வழிபாட்டு நாளுமாய் இருக்கும் சிறப்புக்கருதி ஆனித்திங்கள் மகத்து நாளில் இவ்விழாவை நடத்தலாம் என்று முடிவு செய்தார்கள்.

திருமடத்து அன்பர்கள் எல்லாம் இச்செய்தி அறிந்து 9-6-66 அன்று, கோவை நகரத்தில் உள்ள சமரச சுத்த சன்மார்க்கச் சங்கக் கட்டிடத்தில் கூடி விழாவைச் சிறப்பாக நடாத்துவதற்குத் தவத்திரு சுந்தர சுவாமிகளைத் தலைவராகவும், கோவை வழக்கறிஞரும் சாந்தலிங்கர் தமிழ்க் கல்லூரிப் பொருளாளரும் ஆகிய திரு. இர. செங்கோட்டுவேலன் பி.ஏ. பி.எல்., அவர்களைப் பொருளாளராகவும் கொண்ட ஒரு செயற்குழுவைத் தேர்ந்தெடுத்தனர். இக்கூட்டத்திலேயே பல அன்பர்கள் பொருளுதவி செய்ய உறுதி அளித்தனர்.

செயற்குழுவின் அடுத்த கூட்டம் சாந்தலிங்கர் தமிழ்க் கல்லூரியில் கூடி விழாவை எவ்வெவ்வகையில் சிறப்பாக நடத்தலாம் என்று ஆராய்ந்து முடிவு செய்தது.

நேரில் வந்திருந்து விழாவைச் சிறப்பிக்கும்படித் தமிழக ஆதீனங்களுக்கெல்லாம் தக்க வகையில் வேண்டுகோளும் அழைப்பும் அனுப்பப்பட்டன. கல்வி நிலையத்து மாணவர்களும் ஆசிரியர்களும் திருமடத்து அன்பர்களும் மிக முயன்று விழாவுக்கான முன்னேற்பாடுகளை யெல்லாம் தக்க வகையில் செய்து முடித்தனர்.

விழாவிற்கு முதல் நாளிலேயே வெளியூர்களிலிருந்து அன்பர்கள் திரளாக

வந்துசேர்ந்தனர்; குன்னூர் சற்குருசேவாசிரமத் தலைவர் இராமசாமி அடிகள் தமது பஜனைக் குழுவினருடன் வந்தார். பலருடைய உள்ளத்தை ஈர்த்துப் பக்தி உணர்வை ஊட்டிய இக்குழுவினரின் பஜனை நாள் முழுவதும் நடைபெற்று விழாவிற்குத் தனிச்சிறப்பை நல்கிய திறத்தைப் பாராட்டாமல் இருக்க முடியாது. ஈரோடு அருள்நெறித் திருக்கூட்டத்து அன்பர்கள் பலர் வந்து விழாவில் கலந்து கொண்டனர். இரவிவர்மா ஸ்டுடியோ உரிமையாளர் திரு மு. அழகப்பன் அவர்கள் விழாவில் பெரிதும் பங்குகொண்டு நிழற்படம் எடுத்தல் முதலிய பணிகளைச் செய்து உதவியது குறிப்பிடத்தக்கது.

கும்பகோணம் பெரிய மடம் மடாதிபதி சீலஸ்ரீ சாந்ததேவ சாரங்க தேசிகேந்திர சுவாமிகளும் அம்மடத்து இளவரசும், குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம் சீலஸ்ரீ தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமாச்சாரிய சுவாமிகளும் காஞ்சிபுரம் தொண்டைமண்டல ஆதீனம் சீலஸ்ரீ ஞானப்பிரகாச பரமாச்சாரிய சுவாமிகளும் நேரில் எழுந்தருளி விழாவைச் சிறப்பித்தனர். மற்ற ஆதீனங்களிலிருந்து பாராட்டுச் சிறப்புடன் பிரதிநிதிகள் வந்திருந்தனர். மயிலம் பொம்மபுரம் ஆதீனம் 19-ஆம் பட்டம் சீலஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள் தம் பிரதிநிதியாக மயிலம் தமிழ்க் கல்லூரியின் முன்னாள் தலைவர் சைவத்திரு வித்துவான் சி. துரைசாமி ஐயர் அவர்களையும், இப்பொழுதுள்ள தலைவர் சைவத்திரு வித்துவான் ஆ. சிவலிங்க முதலியார் அவர்களையும் பேராசிரியர் குமாரசாமி ஐயர் அவர்களையும் அனுப்பியதுடன் விழாக்குழுவினரின் வேண்டுகோளுக்கிணங்கி வீரசைவ நெறிப் படி சடங்குகளைச் செய்வதற்குரிய ஆச்சாரியர் அவர்களையும் அனுப்பி வைத்தார்கள்.

விழா நாளாகிய 11-7-67 செவ்வாய்க் கிழமை காலையிலிருந்து கோவை நகரத்துப் பெருஞ் செல்வர்களும் சிறந்த அறிஞர்களும் கனிந்த பக்தர்களும் வந்து குழுமினர். விழாவின் முதல் நிகழ்ச்சியாகக் காலை 9 மணிக்குப் பட்டிப்பெருமான் திருக்கோவில் வழிபாடு நடைபெற்றது. சாந்தலிங்கப் பெருமானுக்கும் முறைப்படி வழிபாடு நடைபெற்றது. ஆச்சாரியார் அவர்களால் வீர சைவ நெறிப்படிக்கலசம் தாபித்து வேள்விச் சடங்குகள் ஆகியன செய்யப்பெற்றன. மடாதிபதி தவத்திரு ஆறுமுக சுவாமிகள் தம் கையால் தவத்திரு இராமசாமி அடிகளைப் புனித நீராட்டிக் கல்லாடை அணிவித்துச் சாந்தலிங்க இராமசாமியடிகள் எனப் பெயரிட்டு முடி சூட்டி ஆட்சிப் பீடத்தில் அமர்த்தினர்.

ஆட்சிப்பீடத்து அமர்ந்த சாந்தலிங்க இராமசாமி அடிகளுக்குத் தமிழக ஆதீனங்களின் கல்லாடைகள் பொன்னாடைகள் வழங்கப்பட்டன. பேரூர்ப் பட்டிப்பெருமான் திருக்கோவிலின் அறங்காவலர்கள், மேலாளர், குருக்கள்மார் ஆகியோர் மங்கல வாத்தியங்களுடன் வந்து திருக்கோவில் சிறப்பினை வழங்கினர். புதிய ஆதீனகர்த்தருக்கு அன்பர்கள்தம் அன்புக் காணிக்கையைச் செலுத்தி வணங்கித் திருநீறு பெற்று அணிந்து மகிழ்ந்தனர்.

ஒரு மணிக்குச் சிறப்பான மகேசுவர பூசை நடைபெற்றது. விழாவுக்கு வந்திருந்த அன்பர்களுக்கெல்லாம் விருந்து அளிக்கப்பட்டது. ஏழை எளியவர்களுக்கு அன்னதானம் வழங்கப்பட்டது. அருளாட்சிவிழாவமுதினை மூவாயிரம் மக்கள் உண்டு மகிழ்ந்தனர்.

பிற்பகல் 2 மணிக்குக் கொலு வழிபாடு தொடங்கியது. கொலுமண்டபம் பலவகை நறுமலர்களால் நன்கு அலங்கரிக்கப்பட்டிருந்தது. கொலுக் காட்சியைக்கண்டுமகிழ மண்டபத்தில் அன்பர் கூட்டம் நிரம்பி நெருங்கி இருந்தது. கொலுவிருக்கையில் சாந்தலிங்க இராமசாமிகஅடிகள், ஞானப்பிரகாச தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் சாரங்க தேசிகேந்திரசுவாமிகள் தெய்வசிகாமணி அருணாசலதேசிக பரமாச்சாரிய சுவாமிகள் சுந்தரசுவாமிகள் ஆகியோர் வீற்றிருந்தனர். சாந்தலிங்கர் தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர் சைவத்திரு வித்துவான் மா. பட்டியப்பனார் அவர்கள் அலங்கார ஆலத்திகள் கொண்டு வழிபாடு நடத்தினார். சைவத் திருவாளர்கள் ஆவுடைநாயகம் பிள்ளை, திருநாவுக்கரசு. அருணாசலம் ஆகிய ஓதுவார் மூர்த்திகள் தேவாரம் ஆதியபஞ்ச புராண அருட்பாக்களை ஓதினர்

சந்நிதானங்கள் ஒருங்கு வீற்றிருந்த காட்சியையும் மண்டப அலங்காரத்தையும் வழிபாட்டின் இனிமையினையும் தேவாரப் பண்ணிசையையும் அன்பர்கள் கண்டும் கேட்டும் அகமும் முகமும் மகிழ்ந்து ஆனந்த மேலிட்டுப் பரவசமடைந்தனர்.

பின்னர் முறையாக ஆதீனங்களின் சிறப்புக்கள் வழங்கப்பெற்றன. மயிலம், குன்றக்குடி ஆதீனங்களின் பொன்னாடைகள் அணிவிக்கப்பட்டன. விழாச் செயற்குழுப் பொருளாளர் திரு. இர. செங்கோட்டுவேலன் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார். வித்துவான் சி. துரைசாமி ஐயர், திரு. நா. மகாலிங்கம், திரு. பூ. சா. கோ. கோவிந்தசாமி நாயுடு, திரு. க. மீனாட்சிசுந்தரனார், திரு. ப. சு. மணியம், திரு. இராம. மீனாட்சிசுந்தரனார், திரு. கு. வேங்கடாசலம், திரு. ஆ சிவலிங்கனார் மற்றும் பலர் பாராட்டுரை நிகழ்த்தினர்.

பல தேவத்தானங்கள், சங்கங்கள், மன்றங்கள், கழகங்கள், கல்வி நிலையங்கள் ஆகியவற்றின் சார்பில் பாராட்டு மடல்களும் மலர் மாலைகளும் வழங்கப் பட்டன.

பின்னர் இம் மடாலயத்துடன் பல ஆண்டுகள் தொடர்புடைய சான்றோர் மூவருக்குப் புதிய சந்நிதானங்கள் பட்டமும் பொற்பதக்கங்களும் வழங்கி அருளுரை ஆற்றினார். பட்டம் பெற்றோர் விவரம் 1. சைவத்திரு பண்டித அ. கந்தசாமி பிள்ளை. இவர்கள் இம்மாடலயத்தை சேர்ந்த சத்வித்யா சன்மார்க்க சங்கத்தில் தொடக்க காலத்தில் அதன் அமைச்சராக இருந்து அதனைச்செவ்விதின் நடாத்தி வந்தவர்கள், சாந்தலிங்கர் கல்லூரியில் பல ஆண்டுகள் பேராசிரியராகப் பணியாற்றியவர். இலக்கண நிறைகடல் என்று புலவர்களால் போற்றப்படுபவர். சிறந்த சிவ பூசைச் செல்வர். இவருக்கு "முதுபெரும் புலவர் என்று பட்டம் வழங்கப்பட்டது. 2. சைவத்திரு கவியரசு கு. நடேச கவுண்டர். இவர்கள் இம்மடாலயத்துடன் பன்னெடுங்காலமாய்த் தொடர்பு உடையவர். இனிய கவிகள் இயற்றுவதில் வல்லவர். பிள்ளைத்தமிழ், கலம்பகம், தூது முதலிய வகைகளில் பல பிரபந்தங்களை இயற்றியுள்ளவர். சாந்தலிங்கர் தமிழ்க் கல்லூரியில் பல ஆண்டுகள் முதல்வராகப் பணியாற்றியவர். சிறந்த சிவபூசைச் செல்வர். இவர்களுக்குத் திருமுறைச் செல்வர் என்று பட்டம் வழங்கப்பட்டது. 3. சைவத்திரு மாணிக்கவாசகம். இவர்கள் இம்மடத்தைச் சார்ந்த சத்வித்யா சன்மார்க்க சங்கத்தில் தொடக்க காலம் முதல் தொடர்புடையவர். பேரூரில் வாழ்பவர். சோதிடக் கலையில் வல்லவர். சிறந்த சிவபூசைச் செல்வர். இவருக்குச் சோதிடமணி என்ற பட்டம் வழங்கப்பட்டது.

குறிப்பு:—பாராட்டுரைகளின் விவரம் இம்மலரில் தனியே வெளியிடப்பட்டுள்ளது.

பட்டம் பெற்ற சான்றோர்கள் தம் நன்றியையும் வணக்கத்தையும் சந்நிதானத்தில் தெரிவித்துக் கொண்டனர். வந்திருந்து சிறப்பித்த அனைவருக்கும் தவத்திரு சுந்தரசுவாமிகள் நன்றி கூறினார்.

பின்னர் இரவு 7½ மணிக்குத் தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகள் திருவீதி வலமாகப் பட்டிப்பெருமான் திருக்கோயில் வழிபாட்டுக்கு எழுந்தருளினர். தவத்திரு ஞானப்பிரகாச தேசிக பரமாச்சாரிய சுவாமிகளும் தவத்திரு சுந்தரசுவாமிகளும் உடன்வந்தனர். சந்நிதானங்கள் விருதுகளுடன் மங்கல வாத்தியங்கள் முழங்கத் திருவீதியில் எழுந்தருளியது கண்ணுக்கும் மனத்துக்கும் இனிய காட்சியாக இருந்தது. அன்பர்கள் தத்தம் மனைகளை அலங்கரித்து, முன்றிலில் தூய்மைசெய்து, நறுநீர் தெளித்து, நிறைகுடம், தீபம் முதலிய மங்கலங்கள் வைத்துச் சந்நிதானங்களை வரவேற்று வழிபாடாற்றிப் பொன்னாடை அணிவித்துச் சிறப்பித்தனர்.

திருக்கோவிலில் ஒவ்வொரு சந்நிதியிலும் மனத்துக்கு இனிய வகையில் வழிபாடு நடைபெற்றது. பட்டிப்பெருமானுக்கும் பச்சை நாயகிக்கும் நமது சந்நிதானங்கள் பட்டு அணிவித்து மகிழ்ந்தனர்.

பின்னர்த் திருமடத்திற்கு வந்து உடன்வந்த அன்பர்க்கெல்லாம் பிரசாதமும் சன்மானமும் அளித்தனர். அன்பர்கள் அனைவரும் மன நிறைவுடன் சந்நிதானத்தில் விடைபெற்றுத் தத்தம் இருக்கை சேர்ந்தனர்.

சாந்தலிங்கர் தாண்மலர் வாழ்க.
வாழ்க சாந்தலிங்கர் ஆதீனம்.

# கல்லூரி நூலகம்

எங்கள் கல்லூரி நூலகம் "தவத்திரு சிதம்பர சுவாமிகள் நூலகம்" என்னும் பெயரில் இயங்குகின்றது. சிதம்பர சிவாமிகள் நமது சாந்தலிங்க சுவாமிகளின் மாணவர் பரம்பரையில் வந்தவர். இந்நூலகத்தில் தமிழ், வடமொழி, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் சுமார் 5000 நூல்கள் உள்ளன. நமது திருமடத்தில் மாணிக்க சுவாமிகளால் தொகுத்து வைக்கப்பட்ட நூல்கள் முழுவதும் இதில் சேர்க்கப்பட்டன. இந்நூல்களில் பெரும்பாலான சைவத்திரு. கோவை கிழார் இராமச்சந்திரஞ் செட்டியார் அவர்களால் கொடுக்கப்பட்டன. தன்னிடத்திலிருந்த தமிழ் நூல்களில் பெரும் பகுதியை இந்நூலகத்திற்கே கொடுத்திருக்கிறார். அவர்கள் கொடுத்தவற்றுள் கல்வெட்டுத் தொகுதிகள் 37 நூல்களும் வின்சுலோ அகராதியும் குறிப்பிடத்தக்கன.

இப்பொழுது சென்னைப் பல்கலைக் கழகப் பதிவாளராக இருப்பவரும் முன்னா கோவை அரசினர் கலைக்கல்லூரி முதல்வராக இருந்தவரும் ஆகிய திருவாளர் B. M. திருநாரணன் B. A. (Hons) அவர்கள் 30 நூல்கள் கொடுத்துள்ளார்கள். அவையெல்லாம் தமிழ்ப் பயிற்சி மொழித் திட்டத்துக்காகத் தமிழில் எழுதப்பட்ட பல்கலை நூல்களாகும். அவர்கள் கொடுத்த நூல்களுள் தாண்டவராயப் பிள்ளை எழுதிய பஞ்சதந்திரக் கதை (பழைய பதிப்பு) தமிழ் அகராதி என்னும் இரண்டு நூல்கள் குறிப்பிடத் தக்கன. இவ்விரண்டும் பழைய அச்செழுத்து வடிவத்தின் நினைவாகப்போற்றிக் காக்கத். தக்கன. இந்நூலகத்தில் இருந்தால் அங்ஙனம் போற்றிப் பலராலும் பயன்படுத்தப்படும் என்று விரும்பித் தாமே அவற்றைக் கொடுத்து உள்ளார்கள்.

திரு. செங்கோட்டையாவினுடைய நூலகத்திலிருந்து பழைய பத்திரிகைத் தொகுதிகள் 30 நூல்கள் திரு. மாணிக்கவாசகம் அவர்களால் கொடுக்கப்பட்டன. மற்றும் கோவைகிழார் இக்கல்லூரி முதல்வராய் இருந்த காலத்தில் திரு. C. S இரத்தினசபாபதி முதலியார் திரு. T. V. அங்கப்பன் ஆகிய இவர்களிடமிருந்து பல நூல்களை நன்கொடையாகப் பெற்றார். மற்றும் சிலரிடமிருந்து நூலடுக்கும் அலமாரிகளும் பெற்றார். இவையன்றி ஆண்டுதோறும் மாணவர்கள் செலுத்துகின்ற நூலகக் கட்டணத் தொகையிலிருந்து அரிய நூல்கள் பல வாங்கிச் சேர்க்கப்படுகின்றன. இவ்விவரமெல்லாம் முன்னைய ஆண்டுமலர் அறிக்கையில் விளக்கமாகத் தரப்பட்டுள்ளன. இங்ஙனம் இந்நூலகத்திற்குப் பலவகையிலும் உதவி செய்துள்ள அனைவருக்கும் கல்லூரியின் நன்றி உரியதாகும்.

கோவை நகரில் அரிய நூல்கள்—ஏட்டுச்சுவடிகள் முதலியன வைத்திருப்போர் அவற்றை இக்கல்லூரி நூலகத்திற்குக் கொடுக்க முன்வருவாராயின் அவற்றை நன்றியுடன் ஏற்றுப் பாதுகாத்துப் பலர்க்கும் பயன்படச் செய்வோம். குறிப்பாகக் கோவை நகரத்தில் திரு. செங்கோட்டையா அவர்களால் தொகுத்து வைக்கப்பெற்றுள்ள நூல்கள் நமது நூலகத்திற்கு வந்துசேர முயற்சி மேற்கொண்டுள்ளோம். அவை வந்து சேருமானால் நமது நூலகம் குறிப்பிடத்தக்க சிறப்பினை அடையும். அதற்கு திரு. மாணிக்கவாசகம் அவர்களின் ஒத்துழைப்பைப் பெரிதும் எதிர்பார்க்கின்றோம்.

# 1967-'68 ஆம் ஆண்டு மாணவர் அருள்நெறி இலக்கிய மன்றத் தொடர் கூட்டங்கள்

இலக்கிய மன்றத் தொடக்க விழா:— திருவள்ளுவராண்டு கக்கூஅ ஆவணித் திங்கள் கரு ஆம் நாள் (1—9—67) திரு. வி. கே. இலக்குமணன் அவர்கள் தலைமையில் இலக்கிய மன்றத் தொடக்க விழா கொண்டாடப் பெற்றது. தலைவர் தம் உரையில் இக்காலத்தில் இலக்கியங்களைப் பற்றிப் பேசுபவர்கள் குறைந்துவிட்டன ரென்றும், எங்கும் பிற துறைகளைப்பற்றிய பேச்சே நிரம்பி யுள்ளதாகவும் இந்நிலை மாறவேண்டும் எனவும் கூறினர். சிறப்புச் சொற்பொழிவாளராக அழைக்கப்பட்டிருந்த திரு. வ. ஈசுவரமூர்த்தி அவர்கள் ''தமிழ் நேற்று இன்று நாளை'' என்னும் பொருள்பற்றிச் சிறந்த ஆராய்ச்சி உணர்வோடு உரை நிகழ்த்தினர்கள். திருச்சி கவிஞர், திரிலோக சீத்தராம் அவர்கள் நல்லுரை வழங்கிச் சிறப்பித்தார்கள். இவ்வாண்டு மன்றத்தொடர் கூட்டங்களும், மன்றச் சிறப்புக்கூட்டமும், சைவசித்தாந்த வகுப்பும் நடைபெற்றன. திருவள்ளுவராண்டு கக்கூஅ ஆவணித் திங்கள் உ௪ஆம் நாள் மாணவர் அருள்நெறி இலக்கிய மன்றத்தின் முதல் தொடர்கூட்டம் நடைபெற்றது. அப்பொழுது இடைநிலை வகுப்பினர்க்கு திரு. முத்துக்குமாரசாமி அவர்கள் தலைமையிலும், இறுதி நிலையினர்க்கு தவத்திரு அடிகளார் தலைமையிலும் கூட்டம் நடைபெற்றது. அவ்வமயம் அங்குராசு, அகிலாண்டம், காளிக்குமார், நா. இராமச்சந்திரன், ஞானம்பிகை கல்யாணி, கி. சுப்பிரமணியம், கா. சோதி, ந. திலகவதி, இரவீந்திரன், இராசன், பாப்பாயி, கோமதி ஆகியோர் சிறந்த முறையில் சொற்பொழிவாற்றினர். இரண்டாவது தொடர்கூட்டம் திருவள்ளுவராண்டு கக்கூஅ. கார்த்திகைத் திங்கள் உகூஆம் நாள் நடைபெற்றது. அதுசமயம் இடைநிலைக்குத் துணை முதல்வர் திரு. ந. முத்துக்குமாரசாமி அவர்களும், இறுதி நிலைக்குப் பேராசிரியர் திரு. ர. வையாபுரி ஐயா அவர்களும் தலைமை தாங்கினர் அதுபோழ்து சி. தொல்காப்பியன், சு. பழனிசாமி, அன்பழகன், திருஞானசம்பந்தன், இராதாமணி, உமாராணி, இராசாமணி, அலமேலு, ஆ. செகநாதன், பங்கயம், இராசேசுவரி, கோ. இராதா ஆகியோர் சொற்பொழிவாற்றினர்கள்.

மற்றும் மன்றச் சிறப்புக்கூட்டம் ஒன்று நடைபெற்றது அக்கூட்டத்தில், திருவையாறு, அரசர் கல்லூரித் தலைவர் திரு. கோபால் ஐயர் அவர்கள் தொல்காப்பியத்தில் உள்ளுறை உவமம்பற்றிப் பேசினர். அவர்களுடைய பேச்சு சிறந்த திறனய்வோடு கூடியிருந்தது. தமிழ் கற்கும் முறைபற்றியும், இன்று தமிழ் கற்பவர்களிடையே உள்ள பயிற்சிக் குறைவைப் பற்றியும் எடுத்து இயம்பினர்கள்.

## சைவ சித்தாந்த வகுப்புத் தொடக்கம்

திருவள்ளுவராண்டு கக்கூஅ ஐப்பசித் திங்கள் உ௪ ஆம் நாள் மதுரைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் திரு. தெ. பொ. மீனட்சிசுந்தரனர் அவர்கள் தலைமையில் சைவ சித்தாந்த வகுப்புத் தொடக்க விழா நடைபெற்றது. அவ்விழாவில், முதல்வர் தவத்திரு. சாந்தலிங்க இராமசாமி அடிகள் 'புலவர், பட்டதாரி என்ற பாகுபாடு நீங்கி ஒரே தன்மையாய் அமைய வேண்டும் என்றும் சாந்தலிங்கர் அருளிய நூற்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துப் பிறநாட்டாரும் பயனுறும் வகையில் வெளியிட வேண்டுமென்றும் வாழ்த்துக் கூறித் தெ.பொ.மீ. அவர்களுக்குப் பொன்னடை போர்த்திச்சிறப்பித்தார்கள். தலைவர் தமது தொடக்கவுரையில் மாணக்கர்களுக்குக் கடமை கடவுள் வழிபாடு இன்றியமையாதது என்பதுபற்றியும், அடியவர்களையும், கோவிலையும் சிவனகவே காணவேண்டும் என்பதுபற்றியும் மிகச் சிறப்பாக எடுத்துக் கூறினர். சித்தாந்த வகுப்பை நன்முறையில் நடத்த எழுந்தருளியிருந்த தொண்டைமண்டலம் ஆதீனம் தவத்திரு ஞானப்பிரகாசசுவாமிகள். அவர்கள் பதி,

# வாழ்ந்து கண்டவர்கள் சொல்லுங்கள்

[திரு. வித்துவான் மா. கோட்டீசுவரன், விரிவுரையாளர்
த. சா. அ. தமிழ்க்கல்லூரி, பேரூர்]

ஒருவன் சிலநாட்கள் படுக்கையிலேயே படுத்துக் கிடக்கிறான். பிறகு எழுந்து நடக்கத் தலைப்பட்டால் அவன் கால்கள் நடக்கக் கூசுகின்றன. நிலத்தில் காலை ஊன்றினால் என்னவோ ஒரு மாதிரியான உணர்வு தோன்றுகிறது. வைத்த காலை ஊன்றி மறுகாலை எடுத்து வைக்க முடியாமல் சாய்ந்து வேறு ஒன்றைப் பற்றிக் கொள்ள முயல்கிறான். அப்போது தான் அவன் உணருகின்றான். நாம் நம் கால்களை சில நாட்கள் நடக்கவிடாமல் இருந்து விட்டோமே என்று. இதைக் கேட்ட பிறகு வேறொருவன் சொல்லுகின்றான். நம்முடைய கண்கள் கூசுவதற்குக் காரணம் நாம் பல நாட்களாக நம் கண்களைத் திறந்து பலவகைப்பட்ட உருவங்களைப் பார்க்காமல் இருந்தோமல்லவா? அதுதான் இப்போது நம் கண்கள் பார்க்கக் கூசுகின்றன என்று.

இவற்றையெல்லாம் பார்த்த வேறொருவன் சொல்ல நினைக்கின்றான் நாமும் நம் மனத்தில் எழுகின்ற எண்ணங்களைப் பற்றிச் சிந்திக்காமலேயே இருந்து விடுவோமானால் நாம் சிந்திக்கும் ஆற்றல் இழந்து விடுவோம் போல் இருக்கிறதே இதற்கிடந்தராமல் வயிற்றுக்குச் சோறும் வாழ்வுக்குப் புகழும் என்று தேடி அலைபவர்களைப் போல் அலைந்தலைந்து திரியாவிட்டாலும் ஓரளவு நம்மைத் தேடிவரும் பல செய்திகளையாவது சிந்தித்துப் பார்த்துச் சிந்தனைக்கு ஒரு பழக்கத்தைக் கொடுக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்தான். சிந்திக்கின்றான்.

ஆறு ஆண்டுகளுக்கு முன்னால் ஆறுமுகம் ரூபாய் அறுநூறு தருவதாக நம்மை நம்பச் செய்து ஆறு காசும் கூடத்தராமல் ஏமாற்றினாரே அன்று நாம் எவ்வாறு துன்பப்பட்டோம். நினைக்கவே நெஞ்சம் நடுங்குகிறது. அவர் ரூபாய் தருவதாகச் சொல்லிய நேரம் நம்முடைய தேவையின் கடைசி மணித்துளியாக அல்லவா? இருந்தது? அன்றைக்கு நம் பரம்பரைப் பகைவன் பகவதிதானே நிலையையுணர்ந்து நீதியை நினைந்து நிதியை வழங்கினான். அவனுக்கு என்ன தேவை நமக்குச் சேவை செய்ய வேண்டுமென்று. இவ்வளவுக்கும் படிக்காதவன்தான் பகவதி ஒருக்கால் பகைவனுக் கருள்வாய் நன்னெஞ்சே என்ற பாடலை உள்ளம் தொடக் கேட்டிருப்பான் போலிருக்கிறது என்று இவ்வாறெல்லாம்

---

பசு, பாசம் என்னும் மெய்ஞானக் கருத்துக்களை விளக்கிக் கூறினர்.

இச்சைவ சித்தாந்த வகுப்பு தொடர்ந்து ஒரு மாத காலம் சிறப்பாக நடைபெற்றது. இவ்வகுப்புகளில் 'சிவஞானபோதம்' என்னும் நூலின் சூத்திரம், வெண்பா, முதலியவற்றைச் சிறந்த முறையில் விளக்கிக் கூறினர்கள். மாணவர்களிடையே இறைவனது சிறப்பையும், தன்மையையும் விளக்கிக் கூறினர்கள். "நமசிவாய" என்னும் ஐந்தெழுத்து மந்திரத்தின் உட்பொருளை மிக விளக்கத்துடன் கூறினர்கள். இவ்வகுப்பின் காரணமாக மாணவர்கள் நற்பயனை அடைந்தனர்.

திருமடத்தில் நடைபெற்ற சைவ சித்தாந்த வகுப்பு நிறைவுக் கூட்டத்தில் தொண்டைமண்டல ஆதீனகர்த்தருக்கு மாணவர் மன்றம் காணிக்கை செலுத்தி நன்றியைத் தெரிவித்துக் கொண்டது. நமது ஆதீனச் சார்பில், தொண்டைமண்டலம் ஆதீனகர்த்தருக்குப் பொன்னாடை போர்த்திச் சிறப்பிக்கப் பெற்றது.

ப. அ. தங்கவேலு
சி. கு. சரோஜா
செயலாளர்கள்

நினைந்த அவன் நம் வாழ்வில் இனியாரையும் நம்பி மோசம் போகக் கூடாது, நம்பியவனை மோசம் போவது போல உலகில் பெரிய துன்பம் வேறு கிடையாது, செத்தாவது போகலாமே தவிர எவரை யாவது எதற்காகவாவது நம்பி வாழக் கூடாது என்ற முடிவுக்கு வந்தான். அன்று முதல் அவனுக்கு "கடவுளை நம்பினோர் கைவிடப்படார்" என்ற மூதுரை மீது கூட நம்பிக்கை இல்லை. பாவம் உலகில் என்னவோ ஒன்று யாரைத்தான் விடுகிறது. இவன் மட்டும் அதற்கென்ன விலக்கு. இந்தத் திரை மறைவிலேயே பலகாலம் யாரையும் நம்பாமல் நன்றாக வாழ்ந்தான். இவ்வாறு ஆண்டுகள் பல கழிந்தன. பிறகு இவன் சிலரைத் தேடியதுபோல் இவனைப் பலர் நாடி வந்தனர்.

அப்போதெல்லாம் இவன் தன்னைத் தானே கேட்டுக்கொள்வான். ஏன்? நம்மை நாடிப் பலர் வருகிறார்கள். நாமோ ஏதோ ஓரளவு பிறர் கையை எதிர்பார்க்காமல் வாழ்கின்றோம். இவ்வளவுதானே நம் செல்வமெல்லாம். எந்தெந்தவகையில் நம்மிடம் உதவி பெறலாம் என்று இவர்களெல்லாம் வருகிறார்களோ தெரியவில்லையே. நாமாகத்தான் வருபவர்களின் குறிப்பை அறிந்து கொள்ளவேண்டும் போல் இருக்கிறது என்ன செய்வது? நாம் பிறரிடம் ஒன்றுக்கும் செல்லாமல் வாழ்கின்ற இந்த வாழ்க்கை வருகிறவர்கள் கண்ணுக்கு வேறு விதத்தில் படுகிறது. இவர்கள் எல்லாம் என்ன நினைக்கிறார்கள். நம்மிடம் ஏதோ நிறைய செல்வமும் ஆற்றலும் உதவும் தன்மையும் இருப்பதுபோல எண்ணுகின்றார்கள். அதனால் நம் அழைப்பு இல்லாமலேயே கூட நம்மைச் சூழ்ந்து கொள்ளுகிறார்கள். இவர்களது தேவையை நாம் அறிந்துகொண்டாலும் நம்மால் இவர்களுக்கு என்ன செய்ய முடியும். இவ்வாறு மற்றவர்கள் நம்மைப் பலவகையில் நம்புமாறும் நம்பி நாடிவருமாறும் இந்த வாழ்வு ஏன் அமைந்தது?

உலகில் ஒரு சிலர் பிறருதவிலேயே தாம் வாழ்ந்தாலும் கூடதாம் பிறருக்குப் பலவகையில் உதவும் தகுதியில் இருப்பது போல நடிக்கின்றார்களே? இப்படிப்பட்டவர்களைப் போல் நாம் நடிப்பதும் இல்லையே. மேலும் ஒருவருக்கு இயல்பாகப் பிறருதவி தேவைப்படாமல் இருந்தாலும் அவருக்குத் தாம் உதவி செய்தவர் என்ற புகழ்ப் பெயரைப் பெறவிரும்பி அவருக்கு ஒரு தேவையை வலுக்கட்டாயத்தில் உண்டாக்கி, தம்மிடம் வரவைத்துத் தாம் அவருக்கு உதவ இருந்ததை அவர் ஏமாந்து விட்டு விட்டதுபோலச் சொல்லி ஏமாற்றி நடிக்கிறார்களே அதுபோல ஒன்றும் நாம் இல்லையே.

---

(76ம் பக்க தொடர்ச்சி)

பணிகள்

அகப்பணியாகிய வழிபாடும், புறப் பணியாகிய சமூக சேவையும் மாணவர்களால் ஆற்றப்படுகின்றன. வாரந்தோறும் வாரவழிபாடுகள் நடைபெறுகின்றன. திங்களுக்கு ஒருமுறை பெரிய கோயிலில் இறைவழிபாடும் நடைபெறுகின்றது. தமிழ் வழிபாட்டு முறை வளர்ச்சிக்கு மாணவர்கள் பெரிதும் பணிபுரிகின்றனர்.

சிறப்பு

கோவையிலுள்ள கல்லூரிகளில் நடைபெறும் போட்டிகளிலும் கல்லூரி மாணவர்கள் கலந்து சிறப்பிக்கின்றனர். செல்லும் நெறி யெல்லாம் சிறப்பையும், தமிழ் நெறியையும் உண்டாக்க வேண்டும் என்பதே இக்கல்லூரி மாணவர்களின் தனிப் பெரும் பண்பு.

இவ்வாறு எத்துறையிலும், எத்திறத்திலும், ஏனையகல்லூரி மன்றங்களைப்போல நன்முறையில் செயலாற்றிப் பீடும் பெருமையும் பெற்று இம்மன்றம் சிறந்து நிற்கின்றது. சான்றோர்களின் வாழ்த்தும் ஆன்றோர்களின் அறிவுரையும், தமிழ்மக்களின் பேராதரவும் பெற்று கல்லூரி மேலும் சிறந்தோங்க இறையருள்வேண்டி வறிக்கையை முடிக்கின்றோம்.

கா. மருதமுத்து
கோ. பிரேமாவதி
செயலாளர்கள்.

சென்னையில் நடைபெற்ற இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டிற்கு வருகைதந்த சான்றோர்கள், பேரூர், தமிழ்க் கல்லூரிக்கு வந்தபோது வாசித்தளித்த

# வரவேற்புரை

ஞாலம் திகழ்தமிழ் நாவலர் வருக
மேல்புலம் கீழ்த்திசை மேவினீர் வருக
கடல்சூழ் இலங்கைக் கலைஞர் வருக
விடற்கரும் தமிழுடை மலேயர் வருக
பைந்தமிழ் பயின்றிடு பிரெஞ்சோர் வருக
செந்தமிழ் ஆர்ந்திடு செக்கோசர் வருக
நாடா வளத்த நல்லமெரிக்கர் வருக
வாடாப் புகழுடை வங்கத்தார் வருக
இலட்சிய நாட்டின் இரஷ்யர் வருக
உலகிடை உயர்ந்த சப்பானியர் வருக
தென்தமிழ் நாட்டிடைத் தீந்தமிழ் ஆய்ந்திட
முன்தவம் புரிந்த மூத்தோர் வருக
சாந்தலிங்கனெம் தேசிகன் அருள்நெறி
ஆய்ந்து மகிழ்வோம் அன்புடன் வருகவே.

# உலகத் தமிழ்ப் பேரறிஞர்கள் கல்லூரி வருகை

நன்மையை நாம் நாள்தோறும்—காண—நுகர முடிவதில்லை. என்றுவது ஒரு நாள் எங்காவது ஓரிடத்தில்தான் நாம் நன்மையைச் சந்திக்கின்றோம். அந்த நாளை நம் வாழ்வில் ஒரு சிறப்பான நாளாகக் கருதுகின்றோம். இத்தகைய நாட்களிலே ஒரு நன்னாள்தான் நம் தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரிக்கு இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டறிஞர்கள் வருகை தந்தது.

தமிழ் நாட்டில் தமிழ்க் கல்லூரிகள் பல இருக்கின்றன. உலகத் தமிழறிஞர்களை வரவேற்கும் பேறு இக்கல்லூரிக்கு வாய்த்தற்காகக் கல்லூரி நடாத்துபவர்களும் ஆசிரியர்களும் மாணவர்களும் பெரியதொரு உவகையின்பம் பெற்றனர்.

14—1—68 நாளன்று திருப்பேரூர் பட்டிப் பெருமானார் திருக்கோவிலில் நடை பெற்ற ஆனந்த நடராசப் பெருமானாரின் திருவாதிரைத் திருவிழாவினைக் கண்டு வணங்கி அருள்வெள்ளத்திலே திளைத்த உலகத் தமிழறிஞர்கள் கல்லூரிக்கு வருகை தந்தனர்.

கல்லூரியின் முன் முகப்பிலேயே அறிஞர்களை வரவேற்று அளவளாவிக் கல்லூரி யில் அமைந்திருந்த இலக்கியப் பொருட்காட்சியையும் சமயச் சிற்பப் பொருட்காட்சியை யும் காணச் செய்து மகிழ்வித்தோம். கல்லூரி முதல்வரும் அருட்டிரு சாந்தலிங்க சுவாமிகள் மடாலயத்துத் தலைவருமான தவத்திரு. சாந்தலிங்க இராமசாமி அடிகளா ரவர்கள் வரவேற்பிலிருந்து வழியனுப்புவரை உடனிருந்து அறிஞர்களை மகிழ்வித் தார்கள்.

இச்செந்தமிழ்க் கல்லூரியைச் சிறப்பாக நடத்திவரும் தொழில்துறை வளர்ச்சி வல்லுநரும் வள்ளன்மை வாய்த்தவரும்ஆன திருவாளர், நா. மகாலிங்கக் கவுண்டர் அவர்கள் உலகத் தமிழறிஞர்களுக்குச் சிறந்த தமிழ்முறை உணவு ஏற்பாடு செய் திருந்தார்கள்.

கல்லூரிக்குச் சொந்தமான தென்னந் தோப்பில் நல்ல இயற்கைக் காற்றும் பசுமையான காட்சியும் நிறைந்த இடத்தில் பெரியதொரு பந்தல் அமைத்து அதில் அறிஞர்கள் இனிமையாக இருந்து உண்ணுவதற்கு ஏற்ற சூழ்நிலையை உருவாக்கி யிருந்தார்கள்.

கல்லூரிக் கழகத் தலைவரவர்கள் தாமே உணவுப்பந்தலின் முகப்பில் நின்று கொண்டு வரும் விருந்தினரை முகமலர்ந்து வரவேற்ற காட்சி தமிகழத்தின் விருந் தோம்பும் சிறப்பை எடுத்துக் காட்டுவதாக இருந்தது.

விருந்தினர் அனைவரும் உண்டு களித்த பின்னர் அவர்களுக்குத் தலைவர் ஆங்கி லத்தில் இனியதொரு உரை நிகழ்த்தினார்கள். இந்தக் கல்லூரிக்கு அன்புத்தாயாக இருந்து வளர்த்த திரு. C. M. இராமச்சந்திரஞ் செட்டியாரவர்கள் ஆங்கிலத்தில் விரிவானதொரு உரையாற்றி மகிழ்வித்தார். கல்லூரி முதல்வர் அடிகளாவர்களும் தமிழில் கனிவுரை பகர்ந்தார்கள்.

வந்திருந்த அனைவருக்கும் அருட்டிரு சாந்தலிங்க சுவாமிகள் அருளிச்செய்த நான்கு நூல்களும் கல்லூரி மலர்களும் வழங்கப்பட்டன. விருந்தினர்கள் சார்பாக இவர்கள் எல்லோரும் தங்கள் மொழி வேறு வேருக இருந்தும் தமிழிலேயே தங்களைப் பெருமைப் படுத்தியற்கு நன்றியுரை கூறினார்கள்.

இந்த நிகழ்ச்சிகள் நினைக்கும்போது எல்லாம் கல்லூரியில் அவ்வப்போது நிகழ் வதுபோலவே தோன்றுகிறன என்றால் இதன் சிறப்பை இன்னும் எவ்வாறியம்புவது.

உலகத் தமிழர் வாழ்க.

# பண்டைத் தமிழரின் போர் முறைகள்

[சி. மகாலட்சுமி, முதலாண்டு]

அருமைமிகு தமிழ் மொழியின் அமைதியினை வரையறுத்துக் கண்ட ஆன்றோர்கள், இலக்கணத்தை அதில் செறித்துச் செந்தமிழின் செழுமையினைப் பேணினார்கள். அந்த இலக்கணச் செறிவில் பொருளிலக்கணத்தின் ஒரு பகுதியாகிய புறவொழுக்கத்தினைக் கூறுவது புறப்பொருள் வெண்பாமாலை.

இந்நூலை ஆக்கியவர் ஐயனாரிதனாராவர். இவர் தொல்காப்பியர் முதலிய பன்னிருவர் செய்த பன்னிரு படலத்தைப் பழிப்பின்று உணர்ந்து, அதன் வழிநூலாக இந்நூலை ஆக்கினார். இவர் சேர அரச மரபினராகலின் புற ஒழுக்கத்தில் மிக்க ஈடுபாடு உடையராய்ப், புறப்பொருள் இலக்கணம் உலக மக்கட்கு விளங்கும் பொருட்டு இதனை ஆக்கி உதவினார்.

ஒத்த அன்புடையர் தாமேயன்றி எல்லாரானும் உய்த்து உணரப்படுவதும், இவ்வாறு இருந்தது எனப் பிறர்க்கு எடுத்துக் கூறப்படுவதும், அறமும் பொருளும் பற்றிக் கூறப்படுவதும் ஆகிய இப்புறத்திணை வெட்சி, கரந்தை வஞ்சி, காஞ்சி. நொச்சி உழிஞை, தும்பை, வாகை, பாடாண், பொதுவியல், கைக்கிளை, பெருந்திணை எனப் பன்னிரண்டு வகைப்படும். இதில் முதல் ஏழு திணைகள் புறம் எனவும், அடுத்த மூன்று திணைகள் புறப்புறம் எனவும், இறுதி இரு திணைகள் அகப்புறம் எனவும் கூறப்படும். இந்நூலில் பண்டைத் தமிழரின் போர் முறைகளைப்பற்றி விரிவாகக் காணலாம்.

அறப்போர் :—

வெட்சி என்பது ஆனிரை கவர்தல் ஆகும். மறவர்கள் எதன் பொருட்டு ஆனிரை கவர்ந்தனர் என ஆராயின் அஃதொன்றே பண்டைத் தமிழர் அறத்துடன் போர் செய்தனர் என்பதை விளக்கும். ஒரு மன்னன் தன் பகை நாட்டாருடன் போர் செய்ய நினைத்தால், நினைத்தவுடன் போர்செய்யமாட்டான். தன் எண்ணத்தைப் பகை நாட்டார்க்குப் பறையறைந்து தெரியப்படுத்துவான். 'ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்... நும்மரண் சேரும்' என அறிவிப்பான். இவ்வறிவிப்பை உணரமாட்டாத பசுக்களை அப்புறப்படுத்த விரும்பி ஆனிரை கவர்தல் நடைபெறும். பின்னர் ஆனிரை கவர்ந்து திரும்புங்கால் 'புல் மேய்ந்து அசை இப்புணர்ந்து உடன் செல்க' எனக் கூறுவதிலிருந்து மறவர்கள் ஆனிரைகளை ஊறு படுத்தாது ஓட்டி வந்தனர் என்ற அறநெறி புலப்படும்.

மற்றும் 'அழிகுநர் புறக்கொடை அயில் வாளோச்சாக் கழிதறு கண்மை' என வெண்பாமாலை உரைக்கின்றது. இதனால் மறவர் தோற்றோடுவாரின்மேல் படை செலுத்தாத அறநெறி புலப்படும். பேராண் வஞ்சி என்ற துறையில்,

> பலிபெறு நன்னகரும் பள்ளியிடனும்
> ஒலிகெழு நான்மறையோர் இல்லும்—
> நலிவொரீஇப்
> புல்லார் இரியப் பொருதார் முனைகெடுத்த
> வில்லார்க் கருள் சுரந்தான் வேந்து.

என்று கூறுவதிலிருந்து கோவில்களுக்கும், அறவோர் வாழும் பள்ளிகளுக்கும், நான்மறையோர் வாழும் இல்லங்களுக்கும் எவ்விதஇடையூறும் செய்யவில்லை. இவை போன்றே தக்காருறையும் இடங்களை நீக்கிப் பிறவிடங்களில் பகைவருடன்போரிட்டு வென்றனர்; அவ்வாறு அறத்தோடு போரிட்ட மறவர்க்கே வேந்தர்களும் சிறப்புச் செய்தனர்; அதுவே அரசியலறமாகக் கருதப்பட்டிருக்கிறது; மறவர் போர்த்துறையிலும் அறநெறி பிழையாமல் போர் செய்தனர் என்பன புலப்படும்.

பூப் புனைதல் :—

மறவர்கள் நிகழ்ச்சிக்கு ஏற்ற அடையாளப் பூவைச் சூடினர். ஆனிரை கவர்வோர் வெட்சிப் பூவையும், ஆனிரை மீட்போர் கரந்தையினையும், பகை நாட்டின் மீது படையெடுப்போர் வஞ்சிப் பூவையும், படைக்கு எதிராகப் படையெடுப்போர் காஞ்சியினையும், அதை முற்றுகையிடுவோர் உழிஞையினையும், போரிடுவோர் தும்பையினையும், வெற்றி எய்தியோர் வாகையினையும் சூடுவர். இவ்வாறு பூச் சூடுவதோடு பொற்பூவைச் சூடுவதும் உண்டு. வேந்தர் மறவர்க்குப் பொற்பூ வழங்குவர். மறவர்கள் பூவைச் சூடுவதற்கு எடுத்துக் காட்டாக முருகன் கிரவுஞ்ச மலையை வெல்லுங்கால் காந்தட் பூச் சூடினான்; சிவபெருமான் முப்புரத்தை எரித்தகாலத்து உழிஞை சூடினான் என வெண்பாமாலை உரைக்கின்றது.

நாட்கோள் :—

படையெடுப்போர் நன்னாளும், நன் முழுத்தமும் அறிந்து தொடங்குவர். படையுடன் அரசன் அப்போது செல்ல முடியாதிருந்தால் அவன் குடையாவது வாளாவது புறவீடு விடப்படும். இது நாட்கோள் எனப்படும்.

பாசறை நிலை :—

வஞ்சி மன்னன் தன் பகை நாட்டு எல்லையுட் புக்கு, ஊர் எல்லையில் தங்குவான். அரசன் தங்குவதற்குப் பசிய மூங்கிலால் அறை அமைப்பர். (பசுமை+அறை=பாசறை) மறவர்கள் அதைச் சுற்றிச் சிறு சிறு அறைகளில் தங்குவர். அதன் அருகே ஊரில் இருப்பது போன்றே எல்லா அமைப்புகளும் இருக்கும். புதியதாகக் கட்டப்பட்ட ஊர்போன்றே அது காணப்படும். (கட்டு+ஊர்=கட்டூர், பாசறை) பாசறையில் மன்னன் தன் மறவர்களுக்குப் பெருஞ்சோறளித்தலும், பகை மன்னனிடம் திறை பெறுவதும் நடைபெறும்.

மகள் மறுத்தல் :—

வஞ்சி மன்னன் காஞ்சியானிடம் மகள் வேண்டுவான்; காஞ்சியான் மறுத்துரைப்பான். உழிஞை மறவன் நொச்சியானிடம் மகள் வேண்டுவான்; நொச்சியான்...மறுப்பான். உழிஞை வேந்தன் வேண்டும்போதும் மறுத்து உரைப்பான்.

நெடுமொழியும் வஞ்சினமும்:—

மறவர்கள் தம்மரசர் முன்னும், பகைவர்களின் முன்னும் நெடுமொழி கூறிக் கொள்வர். அரசர்கள் 'ஒன்னாரை இன்று பகலோன் இறவாமுன் வென்று களங் கொள்ளா வேலுயர்ப்பின் அரணவியப்பாயும் அடையார் முன் என்றும் முரணவிய முன் முன் மொழிந்து நிற்பேனாக' என வஞ்சினம் மொழிவர்.

போர்ப் படை

போரில் யானை குதிரை தேர் என்பன கையாளப்படும். வில், குந்தம், ஆழி, வேல் என்னும் கருவிகளை இயக்கிப் போர் புரிவார். இதில் வேல் என்பதே முதன்மை வாய்ந்தது. வேல் தம்மீது பாயாமற் பொருட்டு கிடுகு (கேடயம்) கையாளப் படும். போரிடுங்கால் ஊது கொம்பு, வளை, வயிர்போன்ற இசைக் கருவிகளும் முழங்கும்.

இனி ஒவ்வொரு திணைக்குமுரிய போர் முறைகளைக் காண்போம்.

வெட்சி

மறவர்கள் தம் அரசரின் ஆணையாலேனும், தாமாகவேனும் பகைவரின் ஆனிரைகளைக் கவர்ந்துவருவர். அவ்வாறு நிரை கவரச் செல்லுங்கால் விரிச்சி கேட்டலும், வேய் அறிதலும் நடைபெறும். கவர்ந்தபின் நிரை அவரவர் வினைக்கு ஈடாகப் பங்கிடப்படும். விரும்பியும் கொடுக்கப்படும். இறுதியில் மறவர் கள்ளுண்டு மகிழ்வர்.

கரந்தை

நிரையை இழந்த நாட்டு மறவர், வெட்சியாரிடமிருந்து நிரையை மீட்டு வரு

வர். (மீட்காமல் வருவதும் உண்டு) அவ்வாறு நிரை மீட்குங்கால், போரிட்டுப் புண்ணொடு வருதலும், போர்க்களத்து ஒழிலும் நடைபெறும். கரும்பிள்ளை என்னும் பறவை தீநிமித்தம் காட்டிப் பெயர்க்கவும் பெயராஞகிப் போரிட்ட மறவன் சிறப்பிக்கப்படுவான். மறவரின் வாளோடு முன் தோன்றி மூத்தகுடி சிறப்பிக்கப்படும்.

வஞ்சி

பிறர் மண்ணை நச்சியவேந்தன் பகை நாட்டின்மீது படையெடுப்பான். அவ்வாறு படை யெடுக்குங்கால் நன்ஞளும் நன் முழுத்தமும் அறிந்துகுடையேனும் வாளேனும் புறவீடு விடப்படும். மன்னன் தன் மறவர்க்குப் பொருள் வழங்கிச் சிறப்பிப்பான். மறவர் நெடுமொழி கூறுவர். படையானது பகைவர் நாட்டு எல்லையுட் புகுந்து எரியூட்டும். ஊர்மனைகளில் கொள்ளையிடும். பாசறையிலே மன்னன் தன் மறவர்க்குப் பெருஞ்சோறு அளித்தலும், பகை மன்னன் திறையளிக்க அதனைப் பெற்றுக் கொள்ளுதலும் உண்டு.

காஞ்சி

படையெடுப்பை அறிந்த மன்னன் தானும் அஞ்சாது எதிர்நோக்காய்ப் படையெடுப்பான். அவ்வாறு படையெடுக்குங்கால், மறவர்க்கு மன்னன் படை வழங்குவான். நன்னுளும் நன்முழுத்தமும் அறிந்து குடையேனும், வாளேனும் புறவீடு விடப்படும். போர் தொடங்கும் முன் வேந்தன்வஞ்சினம்மொழிவான். போரிட்டு மறவர் பகைவர் தலையுடன் திரும்புதலும், போரில் புண்படுதலும், பேய்கள் சூழ்தலும், பேய் தொடமெல் காத்தலும், மகள் கேட்ட மன்னனொடு மாறுபட்டுப் பேசலும் நடைபெறும்.

நொச்சி

படையெடுப்பை அறிந்த மன்னன் போரிட அஞ்சித் தம் அரணுட் புகுந்து அரணத்தைக் காத்துக்கொள்வான் காவற்காடும் கிடங்கும் அழியாமல் ஊரினிடத்தே போர் நடக்கும். பின்பு எயில்மீது போர் நடக்கும். மகள் வேண்டிய மறவனுக்கு மறுத்துரைப்பான்.

உழிஞை

பகைவன் ஒளித்த அரணத்தைக் கைப்பற்ற எண்ணிய மன்னன் அரணத்தை வளைத்துக்கொள்வான். அரணின் புறத்தே தங்குதலும் கிடுகுப் படைப்பெருக்கம் பேசுதலும் காவற்காட்டைக் கடந்து கிடங்கில் போரிடலும் எயில்மீது ஏணி சார்த்திப் போரிடலும் பின்னர் அரணுள் குதித்துப் போரிட்டு அரணத்தைக் கைப்பற்றி, அதனை அழித்துக் கழுதை ஏர்கொண்டு உழுது கவடி விதைத்தலும் நடைபெறும். பின்னர் தன் வாளைப் புண்ணிய நீராட்டுவான். தானும் முடிசூடிப் புண்ணிய நீராடுவான்.

தும்பை

இருதிறத்து மன்னரும் ஒருகளத்துப் புக்குப் போரிடுவர். இருதிறத்து மன்னரும் இறத்தலும் உண்டு. படையெலாம் இழந்து தம் தோளானே போரிடுதலுமுண்டு. மன்னனின் தேருக்கு முன்னும் பின்னும் குரவையாடுதலும் மறவர் அவிப்பலி கொடுத்தலும் உண்டு.

வாகை

போரிட்ட மன்னரில் ஒருவன் வெற்றி பெறுவான். வென்றவன் வீரக்கழலும், வாகைமாலையும் புனைவான். பேய்கள் வயிரார உண்ணுமாறுகள வேள்வி செய்வான். மறவர்கள் மன்னனின் தேருக்கு முன்னும் பின்னும் குரவையாடுவர். மறவர் அவிப்பலி கொடுப்பர். மன்னன் கவலையின்று கண் படுதலும் உண்டு. ஒவ்வொரு வருணத்தாருக்குரிய இயல்பு வென்றியும் ஒழுக்கமும் இத்திணையுள் கூறப்படும்.

முடிவு

பண்டைத் தமிழரின் வரலாற்றினையும் அவர்களின் மறத்தன்மையையும், வீர மேம்பாட்டையும் அறிய விரும்புவோர்க்கு இந்நூல் ஒரு சிறந்த துணை நூலாகும். பொருள் இலக்கணம் பயில்வார்க்குச் சிறந்த இயல் நூலாகவும், செய்யுட்சுவையுணரும் திருவுடையார்க்குச் சிறந்த இலக்கிய நூலாகவும் ஒருங்கே திகழும் சிறப்புடையதாகும்.

---

குறிப்பு: முதலாண்டு இலக்கணக் கட்டுரைப் போட்டியில் இரண்டாம் பரிசு பெற்றது.

# சார்பெழுத்துக்கள்

[அ. ப. கந்தசாமி, முதலாண்டு]

எழுத்து இரண்டுவகைப்படும். அவை யாவன:- ஒன்று முதலெழுத்து, இரண்டாவது சார்பெழுத்து. உயிரும் உடம்பும் ஆகிய முப்பது எழுத்துக்களும் முதலெழுத்துக்கள் எனப்படும்.

உயிர்மெய், ஆய்தம், உயிரளெபெடை, ஒற்றளபெடை, குற்றியலிகரம், குற்றியலுகரம், ஐகாரக்குறுக்கம், ஔகாரக் குறுக்கம், ஆய்தக் குறுக்கம், மகரக்குறுக்கம், ஆகிய பத்து எழுத்துக்களும் சார்பெழுத்துக்கள் எனப்படும்.

உயிரும் மெய்யும் கூடுதலான் உயிர்மெய் எழுத்துத் தோன்றுகிறது. ஆய்தம் உயிர்போல அலகு பெற்றும், மெய்போல அலகு பெறாதும், அவற்றினிடையே ஒரு புடை ஒத்து வருதலான் சார்பெழுத்தாயிற்று. (எடுத்துக் காட்டு)

அற்ற ஏனவறிந் துண்க வஃதுடம்பு
பெற்றா னெடி துய்க்கு மாறு

என்ற குறளில் ஆய்தம் உயிர்போல அலகு பெற்றுள்ளது.

தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று

என்னும் குறளில் ஆய்தம் மெய்போல அலகு பெறாது வந்துள்ளது.

ஒழிந்த உயிரளபெடை, ஒற்றளபெடை, குற்றியலிகரம், குற்றியலுகரம், ஐகாரக்குறுக்கம், ஔகாரக்குறுக்கம், மகரக்குறுக்கம், குறுகாத ஆய்தம் ஆகிய எட்டு உறுப்புக்களும் தத்தம் முதலெழுத்தின் திரிபு விகாரத்தால் பிறத்தலால் சார்பெழுத்தாயின.

உயிர்மெய் ஒழிந்தன அகரம் முதலியன போலத் தனித்தானும், ககரம் முதலியன போல அகரமொடு சிவணியானும் இயங்கும் இயல்பின்றித்தத்தம் முதலெழுத்துக்களைச் சார்ந்து வருதலே தமக்கு இலக்கணமாக உடைமையினால் சார்பெழுத்தாயின.

ஆசிரியர் தொல்காப்பியர் செய்கை ஒன்றனையும்நோக்கிச் சார்பெழுத்துமூன்று எனக் கருவி செய்தார். நன்னூலாசிரியர் செய்கையும் செய்யுள் இயலும் நோக்கிச் சார்பெழுத்துப் பத்தெனக் கருவி செய்தார்.

உயிர்மெய் இருநூற்றுப்பதினாறு, உயர்ஆய்தம் எட்டு, உயிரளபெடை இருபத்து ஒன்று, ஒற்றளபெடை நாற்பத்தி இரண்டு, குற்றியலிகரம் முப்பத்தி ஏழு, குற்றியலுகரம் முப்பத்து ஆறு, ஐகாரக் குறுக்கம் மூன்று, ஔகாரக் குறுக்கம் ஒன்று, மகரக்குறுக்கம் மூன்று, குறுகாத ஆய்தம் இரண்டுடனே சார்பெழுத்தினது விரி முந்நூற்று அறுபத்து ஒன்பதாகும்.

மெய், புள்ளியை விட்டு அகரத்தோடு கூடிய வழி, விட்ட உருவே உருவாகி, ஒழிந்த உயிர்களோடு கூடியவழி உரு வேறுபட்டு, தன்மாத்திரை தோன்றாது, உயிர் மாத்திரையே மாத்திரையாய்த் தன் வரி வடிவினது விகார வடிவே வடிவாய், உயிர்வடிவை ஒழித்து, உயிர்மெய் என்னும் இரண்டிடத்தும் பிறந்த உயிர் மெய் என்னும் பெயருடனே ஒற்றொலி முன்னும், உயிரொலி பின்னுமாகி உயிர்மெய்எழுத்து வரும்.

புள்ளி வடிவினதாய ஆய்தம், குற்றெழுத்துக்களின் முன்னதாய், உயிரோடு கூடிய வல்லெழுத்து ஆறன் மேலதாய் வரும்.

வல்லின வகையான் இயல்பாக வந்த ஆய்தம் ஆறனோடு புணர்ச்சி விகாரத்தான்வரும் ஆய்தமும், செய்யுள் விகாரத்தான்வரும் ஆய்தமும் இரண்டினையும் சேர்த்து. உயர் ஆய்தம் எட்டு வகைப்படும்.

செய்யுட்கண் இசை குன்றின் மொழிக்கு முதலிலும், இடையிலும், ஈற்றிலும் நின்ற நெட்டெழுத்துக்கள் ஏழும் இசையை நிரைக்கத் தத்தம் மாத்திரையின் மிக்கு ஒலித்து அளபெடுக்கும். அவ்வாறு அளபெடுத்தன அறிதற்கு, அவ்வவற்றின்பின், அவற்றிற்கு இனமாகிய குற்றெழுத்துக்கள் வரிவடிவின்கண் அறிகுறியாய் வரும்.

இவ்வாறு நெட்டெழுத்துக்கள் ஏழும் அளபெடுக்கும்பொழுது, ஒளகாரம் மொழிக்கு இடையிலும்,ஈற்றிலும் வாராது. அஃதொழிய நின்று அளபெடுக்கும் அளபெடை பத்தொன்பதனுடன், இன்னிசை நிரைக்கவுஞ், சொல்லிசை நிரைக்கவும் வரும் அளபெடை இரண்டினையும் சேர்த்து உயிரளெபெடை இருபத்து ஒன்ருகும்.

காரிகை ஆசிரியர் முதல்நிலை, இடைநிலை, இறுதிநிலை என்ற இவைகளுடன் தனிநிலை ஒன்றனையும் சேர்த்து, அவ்விடங்களில் நின்று அளபெடுக்கும் உயிரளபெடை இருபத்துஎட்டு என்று கூறுகிருர்.

செய்யுட்கண் இசை குன்றின் குறில் இணைக்கீழும், குறிற்கீழும், மொழிக்கு இடையிலும், ஈற்றிலும் நின்று 'ஙஞண நமன வயலள' என்ற இப்பத்து ஒற்றும், ஆய்தமும் ஓசையை நிரப்ப அளபெடுக்கும். அவ்வாறு அளபெடுத்தன அறிதற்கு அறிகுறியாய் அவ்வவற்றின்பின் அவ்வவ் எழுத்துக்களே வேறு அறிகுறியாய்வரும் இவ்வாறு அளபெடுக்க அளபெடை நாற்பத்து நான்காம், அவற்றுள் ஆய்தம்குறில் இணைக்கீழ்க் கடையிலும், குறிற்கீழ்க்கடையிலும் வாராது. ஆகையினுல் அஃதொழிய அவ்விடங்களில் நின்று அளபெடுக்கும் ஒற்றளபெடை நாற்பத்து இரண்டாகும்.

யகரம் வருமொழிக்கு முதலாகிவர, குற்றியலுகரம் திரிந்த இகரமும் மியா என்னும் அசைச் சொல்லின்கண் உள்ள இகரமும் குற்றியல் இகரங்களாகும். குற்றியலிகரம் முப்பத்து ஏழாம்.

தனி நெடில் ஏழுடனே, ஆய்தம் ஒன்றும், மொழி இடை ஈறுகளின் வராத 'ஔ'காரம் ஒழித்த உயிர் பதினென்றும், வல்லெழுத்தாறும், மெல்லெழுத்துக்கள் ஆறும், வல்லெழுத்துக்களோடு தொடராத வகரம் ஒழித்த இடையெழுத்து ஐந்தும் ஆகிய முப்பத்து ஆறு எழுத்துக்களுள் யாதானுமொன்று ஈற்றுக்கு அயலெழுத்தாய்த் தொடரப்பட்டு, மொழி இறுதிக்கண் வல்லெழுத்துக்களுள் யாதானும் ஒன்றைப் பற்றுக்கோடாகக் கொண்டு உகரம் வரின் அவ் வுகரம் தன் மாத்திரையிற் குறுகி ஒலிக்கும்.

இவ்வாறு உகரம் தன் மாத்திரையிற் குறுகுதற்குக் காரணம், அவ் ஒரெழுத்துத் தொடர்தல் மாத்திரையின் நில்லாது, மேலும் ஒன்றேனும், பலவேனும் எழுத்துக்கள் தொடர்தலேயாகும். இவ்வாறு வரும் குற்றியலுகரம் முப்பத்து ஆருகும்

நன்னூலாசிரியருக்கும், காரிகை ஆசிரியருக்கும் இதில் சிறிது கருத்து வேறுபாடு காணப்படுகிறது. நன்னூல் ஆசிரியர் ஈற்றயலில் நின்ற எழுத்தை இடமாகக் கொண்டார். காரிகை ஆசிரியர் ஈற்றயலில் நின்ற அசையை இடமாகக் கொண்டார். ஆதலின் அவர் ஏழிடம் கொள்வார்.

ஐகாரம், தன்னைக் கருதித் தன் பெயர் கூறும் அளவிற் குறுகாது, ஒழிந்த மொழிமுதல், இடை, கடை என்னும் மூன்றிடத்தின் தொடர்பால் முன்னும் பின்னுமாகிய இரண்டு எழுத்துக்களின் தொடர்பால் தன் மாத்திரையிற் குறுகும்.

ஒளகாரம், தன் பெயர் கூறும் அளவிற் குறுகாது, ஒழிந்த மொழிமுதற்கண் முன்வரும் எழுத்தின் தொடர்பால் தன் மாத்திரையிற் குறுகும்.

ணகார, னகாரங்களில் ஒன்று நின்று தொடர்ந்திட அதன் முன் வரினும், வகாரம் வந்து தொடர்ந்திட அதன்மேல் வரினும் மகரம் தன் மாத்திரையிற் குறுகும்.

லகார ளகார ஈற்றுப் புணர்ச்சியினுல் வரும், 'லளத்தவ் அணையின்—ஆய்தம் ஆகவும் பெறூஉம்' என்ற ஆய்தம், இருமருங்குமாய எழுத்தின் தொடர்பால் தன் அரை மாத்திரையிற் குறுகி ஒலிக்கும்.

இவ்வாறு சார்பெழுத்துக்கள் வழங்கப்படுகின்றன.

---

குறிப்பு :—புலவர் முதலாண்டு இலக்கணக் கட்டுரையில் முதல் பரிசு பெற்றது.

# சிவப்பிரகாசர் கற்பனைத்திறன்

[இராச. காளிகுமார், இரண்டாம் ஆண்டு]

முன்னுரை :

தண்டமிழ்ப் புலமையில் சிறந்த ஒண் டிறல் குரிசிலும், நுண்மாண் நுழைபுலம் மிக்க அஞ்சொல் நுண்தேர்ச் சிப் புலவரும் கற்பனைக் களஞ்சியமுமாகிய "சிவப்பிரகாசர்" எனும் பெயருடைப் புலவரால் மல்லிகை மலரெடுத்து மாலை யெனத் தொடுத்திடும் நேர்த்திபோலச் சொல்லில் சுவை கூட்டிப் பொருளில் தோய்த்துக் கர்பனையொடு கவிதையாக ஆக்கப்பட்ட நூலே "பிரபுலிங்க லீலை"

பலா வெடித்த காட்சி

பலா வேரில் பழுத்துக் கிடக்கின்றது. அது முற்றி வெடிக்கின்றது. அதன் வழியே அனந்தன் மணிவெயில் நேராக வானிலுள்ள அமர் மதியைத் தொடுகின் றது. இக்காட்சி காமனது குடைக்குக் காம்புபோல விளங்கி நிற்கின்றது எனக் கற்பனையொடு கூறுகின்றார். இதனை உணர்த்தும் பாடல்,

" படிக்குள் ஈரப்பலாப் பழுத்து ஒண்புவி
வெடித்த வாயில் அனந்தன் மணிவெயில்
அடுத்த வானத் தமர்மதியைத் தொடாக்
கடுத்த வெள்குடைக் காம்பெனத் தோன்று
மால்."

என்பது ஆகும். [சந்திரனை மன்மதனுக்குக் குடையாகக் கூறுவது கவிஞர் மரபு.]

மழு ஒலிக்கும் காட்சி

செஞ்சடையுடைய சிவபெருமானது இடக்கையில் மானும், வலக்கையில் மழு வும் விளங்குகின்றன. மான், உமையின் விழிக்கு நாணித் தன் முகத்தைத் திருப்பு கின்றது. அவ்வாறு திருப்புவது "தகும்-தகும்" என்பதுபோல "மழு" ஒலிக்கின் றது எனக் கற்பனையொடு அறைகின்றார். இதனை

" நகந்த ருங்கொடி கண்களை நாணியே
முகந்தி ரும்புமு றையில்தி ரும்புமான்
மகிழ்ந்தி டங்கதிர் வீரமழு வலம்
தகுந்த குந்தகு மென்று தயங்குற"

எனும் பாடல் நன்கு புலப்படுத்தும்.

நெற்றிச் சுட்டி

உமையின் நெற்றியிலே முத்துச் சுட்டி வெள்ளொளி விட்டுத் திகழ்கின் றது. அந்த வெள்ளொளிக்கு நாணுகின் றது சிவனது முடிப்பிறை. ஆகவே அது சிவன் சடையிலுள்ள கங்கையில் விழுந்து மானம் மிக்கூர இறப்பேன் என்பதைப் போல விளங்குகின்றது எனக் கற்பனை யொடு கூறுகின்றார். இதனை

" ஏற்று வார் கொடி எந்தை சடைப்பிறை
யாற்றுள் வீழ்வுற் றிருப்பதற் கெண்ணுறத்
தோற்ற மேவு சுடர்ந்திரு நெற்றியின்
ஞாற்று மோர்மணிச் சுட்டி நலந்தர'

என்பது உணர்த்தும்.

உயர்ந்தவர் தாழ்வர்

அகழி உள்ளது. உயர்ந்த மதில் உள்ளது. "தாழ்ந்தவர் உயர்வர் என்றும் உயர்ந்தவர் தாழ்வர்" என்றும் ஆன் றோர் அறையும் அறிவுரையினை அவை களின் வாயிலாக விளக்குகின்றார் கற்பனை நயத்தொடு. எவ்வாறுஎனில்,

அகழி தாழ்ந்துள்ளதனால், இந்நில உலகைத் தாங்கும் ஆதிசேடனது மணி முடியின்மேல் விளங்குகின்றது எனவும் (தாழ்ந்தவர் உயர்ந்தவர் என்பதற்கு)

உயர் மதில் உயர்ந்து சென்று கதிர வனின் அடியில் தங்கிற்று எனவும் (உயர்ந்தவர் தாழ்வர் என்பதற்கு) நயத்தொடு நவில்கின்றார்.

புல்லாக்கு

மாயையின் பற்கள் முத்தன்ன வெண்மைய யுடையன. மூக்குத்தியை

# நூன் மரபு

[கோகிலா, மூன்றும் ஆண்டு]

முன்னுரை

இனிமையும் நீர்மையும் உடைய தென்றமிழில் சிறப்புற்ற இலக்கணமாகத் திகழ்வது ஒல்காப் பெரும் புகழ்த் தொல்காப்பிய மாகும். எழுத்து, சொல், பொருளென மூன்று அதிகாரங்களில் மயங்கா மரபில் முதலில், காட்டிய எழுத்ததிகாரத்தின் ஒரு பகுதியாகிய நூன் மரபைப் பற்றி இக்கட்டுரையில் காண்பாம்.

நூன் மரபைப் பற்றிப் பலர் பலவாறு கக் கூறுவர். எழுத்ததிகாரத்திற்கு வேண்டும் மரபு கூறுதலின் நூன்மரபு என்று பெயராயிற்று என இளம்பூரணரும், இலக்கணத்திற்கு வேண்டும் மரபு கூறுத லின் நூன் மரபு என்று பெயராயிற்று என்று சிவஞான முனிவரும் கூறுவர். நச்சினார்க்கினியர் தொல்காப்பியம் என்னும் நூற்கு மரபாந்துணைக்கு வேண்டு வன கூறினமையின் நூன்மரபு எனப் பெயராயிற்று என்பர். அஃதே எமக்கும் உடன்பாடு.

நூல் என்றது ஒப்பினுல் ஆயதொரு ஆகுபெயரும், கைவன் மகடூஉ குற்றம் களைந்த எஃகிய பன்னுனைப் பஞ்சினைத்

மாயை அணிந்துள்ளாள். அதிலே ஒரு புல்லாக்குத் தொங்குகின்றது. அது இதழைத் தொடும் அளவில் உள்ளது. அம் முத்துப் புல்லாக்கானது, மாயையின் "முத்தன்ன வெண்ணகைக்கு" நாணித் தூக்கில் தொங்கி இறப்பேன் என்பது போலத் தொங்கிக் கொண்டு விளங்குகின்றது எனக் கூறுகிருர்.

உமையின் களிப்பு

ஆதிபகவனுகிய சிவன், உமையினது ஊடலைத் தணிக்கும் பொருட்டு உமையினது பாதங்களில் வீழ்ந்து வணங்குகின்ருன். அப்போது உமையினது நெற்றிக்குப் பகையான பிறையும், அல்குலுக்குப் பகையான அரவும் வீழ்ந்து வணங்கும் செயற்கும் உவகை செய்யாமல் சிவபெருமான் தலைக்கணியாகவுள்ள கங்கையாகிய அலைமாது பணியும் அதற்கு மனம் மகிழும் உமையை வணங்குவாம் என்றறைகின்ருர். "சிவன் விழுந்து வணங்கும்போது அவரோடு அவர் தலையிலுள்ள கங்கையும் விழுந்து வணங்குகின்றது" எனக் கூறியுள்ளது. "கற்பனைக் களஞ்சியத்தின் கற்பனைத் திறமே. இதனை

"ஆதிபகவன் தனதூடல் பணிப்பான்
பணிய அவ்விறைவன்
பாதம் இறைஞ்சும் அதற்கு நெற்றிப்
பகையும் அல்குல் பகையுமாம்
சீத மதியும் அரவும்விழும் செயற்கும்
உவகை செயாமலை
மாது பணியும் அதற்குமனம் மகிழும்
உமையை வணங்குவாம்"

என்னும் பாடலிற் காணலாம்.

வருகைக் காட்சி

கைலாய மலைக்கு உருத்திரர்கள் திருமால், தேவகணங்கள் ஆகியோர் வருகின்றனர். அவர்கள் வரும்பொழுது பிறையொடு பிறையும், கங்கை நதியொடு கங்கைநதியும் கூடிவருவது போன்று விளங்குகின்றது எனக் கற்பனையொடு சொல்கின்ருர்.

முடிவுரை

இதுகாறும்கூறிய கருத்துக்களிலிருந்து "கற்பனைக் களஞ்சியம்" சிவப்பிரகாசசுவாமிகளின் "கற்பனைத்திறன்" நன்கு புலனுகும். அவரது "கற்பனைத் திறன்" நெடுமலையினும், ஆழ்கடலினும், வான்நதியினும், நெடுவிசும்பினும், உயர்ந்தது. தன்னிகரற்றது எனக் கூறி இக்கட்டுரையை முடிக்கின்றேன்.

குறிப்பு:—புலவர் இடைநிலை வகுப்புக்கட்டுரைப் போட்டியில் முதற்பரிசு பெற்றது.

தூய்மையும் நுண்மையும் உடையவாக ஓர் இழைப் படுத்தினாற்போல, வழுக்களைந்த எஃகிய இலக்கணங்களை வினையின் நீங்கி விளங்கிய, அறிவனாகிய முனைவன் முதலும் ஈறும் மாறுகோள் இன்றாகத் தொகையினும் வகையினும் பொருண்மை காட்டி ஈரைங் குற்றம் இன்றி ஈரைந்து அழகு பெற முப்பத்திரண்டு உத்தியோடும் ஒரு பொருள் நுதலிய சூத்திரத்தானும் இனமொழி கிளந்த வோத்தினானும் பொதுமொழி கிளந்த படலத்தானும் மூன்றுறுப்படக்கிய பிண்டத்தானும் ஒரு நெறிப்படப் புணர்ப்பன்.

நூன் மரபு மூன்று அதிகாரத்திற்கும் ஒப்பக் கூறியது. ஈண்டு எழுத்துக்கட்குக் கூறிய பெயரும் முறையும் தொகையும் நெடிலுக்கும் குறிலுக்கும் உள்ள அளவும் ஒத்தது. ஈண்டு முப்பத்து மூன்றாகத் தொகை கொண்டதை ஆண்டுப் (செய்யுளியலில்) பதினைந்தாகக் கோடலின் தொகைவேறு.

''அம்மூவாறும் வழங்கியல் மருங்கின் மெய்ம்மயங்குடனிலை தெரியுங்காலை'' என்னும் சூத்திரத்தான் எழுத்துக்கள் கூடிச் சொல்லாமாறு கூறுதலின் சொல்லதிகாரத்திற்கும் இலக்கணம் நூன்மரபிற் கூறியவாறாயிற்று.

''எழுத்தெனப்படுப
அகரமுதல் னகர இறுவாய்
முப்பஃதென்ப
சார்ந்துவரல் மரபின் மூன்றலங் கடையே''

என்னும் சூத்திரத்தான் எழுத்துக்கள் இத்துணை என்று கூறப்பட்டது.

சார்ந்து வரல் மரபினையுடைய குற்றிய லிகரமும் குற்றியலுகரமும் ஆய்தமென்ற முப்பாற் புள்ளியும் முப்பதோடு கூட்டி எண்ணப்படும் மென்பதனை ''எழுத்தோரன்ன'' எனக் கூறி உறுதி செய்தனர்.

நுண்ணிதின் உணர்ந்தோர் கண்ட கண்ணிமையும் நொடியுமே எழுத்திற்கு மாத்திரை கொள்ளும் அளவாகும். அ, இ, உ, எ, ஒ என்பன ஓரளபிசைக்கும் குற்றெழுத்தும், ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்னும் ஏழும் ஈரளபிசைக்கும் நெட்டெழுத்தும் ஆகும்.

மெய்யின் அளவு அரையாகும். சார்பில் தோற்றத்து மூன்றிற்கும் இஃதொக்கும். உயிர், மெய்யோடு கூடியதாயினும் தன் தன்மையில் திரியா. ஒன்றரை மாத்திரையும் இரண்டரை மாத்திரையும் ஆவனவற்றை ஒரு மாத்திரையும் இரண்டு மாத்திரையுமெனக் கூறியது ஒரு நாழி நீரில் அரை நாழி உப்புச் சேரினும் ஒன்றரை நாழியாகாது ஒருநாழி ஆனவாறு போன்றதொரு பொருள் பெற்றி. ஆசிரியர் ஆணை கூறலும் ஆம்.

புள்ளியில்லா எல்லா மெய்யும்
உருஉரு வாகி அகரமோடு உயிர்த்தலும்
ஏனை உயிரோடு உருவுதிரிந்து உயிர்த்தலும்
ஆயீரிய லஉயிர்த்த லாறே

என உயிர் மெய்யினது இயல்பு கூறினர். உயிர்மெய் ஒலிக்கும் முறையை ''மெய்யின் வழியது உயிர்தோன்று நிலையே'' எனக் கூறினர்.

எழுத்துக்கள் தம்முள் மயங்கு மாற்றை ''அம்மூவாறும் வழங்கியல் மருங்கின் மெய்ம்மயங் குடனிலை தெரியுங்காலை என்னும் சூத்திரத்தான் கூறினர். இச்சூத்திரம், மெய் தன் மெய்யோடும் பிறமெய்யோடும் மயங்கும் மயக்கமும் கூறினர். ''டறலள என்றும் புள்ளி முன்னர் கசப என்னும் மூவெழுத்துரிய'' அவற்றுள் லளகஃகான் முன்னர் யவவுந் தோன்றும் முதலிய சூத்திரங்களிலும் மயக்கமே கூறுகின்றனர்.

''நீட்டம் வேண்டின் அவ்வள புடைய
கூட்டி யெழூஉதல் என்மனார் புலவர்''

என்னும் சூத்திரத்தான் அளபெடையாமாறு கூறினர். ஓரெழுத்தே நின்று மூவளபாக இசைத்தல் இல்லையாதலால் பல எழுத்து நின்று மூன்றும் நான்குமாக அளபெடுத்தல் உண்டு என்பது பெற்றும்.

நூன்மரபு மூன்றதிகாரத்திற்கும் இலக்கணமாம் என்பதனை

''அளபிறந் துயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்
உளவென மொழிப இசையொடு சிவணிய
நரம்பின் மறைய என்மனார் புலவர்.

## இலக்கணப் போட்டி

# ஆகுபெயரும் அன்மொழித் தொகையும்

[பாலாமணி ந. இரண்டாம் ஆண்டு]

இலக்கியங் கண்டதற்கு இலக்கணம் இயம்பினர் நம் ஒண்டீந் தமிழ்ப் புலவர்கள். இவண் ஆராய எடுத்துக்கொண்ட பகுதி ஆகு பெயரும் அன்மொழித் தொகையும் என்பதாம். தொல்காப்பியம், நன்னூல் முதலிய நூல்களில் இவற்றின் இலக்கணமும், விளக்கமும் காணப்படுகின்றன. மேற்கூறிய நூல்களின் துணை கொண்டு நாமிங்கு ஆய்குவம்.

ஆகு பெயர் என்றால் என்ன? அஃதாவது பொருண் முதலாறும், அளவை, சொல், தானி, கருவி, காரியம், கருத்தன் ஆதியுள் ஒன்றன் பெயரான் அதனோடு இயைபுபற்றிய பிறிதொரு பொருளைத் தொன்றுதொட்டு வழங்கிவந்த முறையான் உரைப்பதாம். இதனை நன்னூல் கூறும், பன்னருஞ் சிறப்பிற் பவணந்தி முனிவர்,

> "பொருண் முதலாறோ டளவை சொற்றானி
> கருவி காரியங் கருத்த னாதியுள்
> ஒன்றன் பெயரான் அதற்கியை பிறிதைத்
> தொன்முறை யுரைப்பன ஆகுபெயரே"

என மொழிவர். பொருண் முதலாறன்றி வேறு பொருளின்றேனும், அவற்றுள் பயின்று வருவனவற்றை அளவை முதலாக விதந்தனர் என்றும், அதற்கியை

◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇

என்னும் சூத்திரத்தானும் 'மாத்திரை வகையும் எழுத்தியல் வகையும் மேற்கிளந்தன்ன என்னும் செய்யுளியல் சூத்திரத்தில் மேற்கிளந்தன்ன என்பதற்கு இச்சூத்திரத்தோடு நச்சினார்க்கினியர் மாட்டேற்றிக் கூறியதனாலும்'' எழுத்தளவெஞ்சினும் சீர் நிலைதானே, குன்றலும் மிகுதலும் இல்லென மொழிப'' என்னும் சூத்திரத்தானும் அறியலாம்.

அகரமுதலாக ஔகாரம் இறுதியாக உள்ள பன்னீரெழுத்தும் உயிரெழுத்து எனப்படும். இறைவன் ஒன்றேயாயும் பல்லுயிர்க்கும் தானேயாய் அவற்றோடும் கலந்து நிற்கும் தன்மையும் போல உயிர் தனித்தும், மெய்களோடு இயைந்து அவற்றிற்கு உயிராயும் நிற்கும்.

ககரம் முதல் னகரம் இறுதியாக உள்ள பதினெண் எழுத்தும் மெய் யென்னும் குறியினையுடைய. எழுத்துகட்கு வடிவு நூன் மரபில் கூறப்பட்டது. உட்பெறு புள்ளி உருவாகும்மே என மகரத்திற்கும் மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல் என மெய்க்கும், எகர ஒகரத் தியற்கையும் அற்றே என எகர ஒகரங்களுக்கும் வடிவு கூறப்பட்டன. இவ்வளவே நூன்மரபில் கூறப்பட்ட செய்திகளாகும்.

அ, இ, உ, அம்மூன்றுஞ் சுட்டு' எனச் சுட்டெழுத்தும், 'ஆ, ஏ, ஓ அம்மூன்றும் வினா'' எனவினாவெழுத்தும் உடன் கூறப்பட்டன.

முடிவுரை :

தித்திக்கும் தெள்ளமுதாய்த் தெள்ளமுதின் மேலான முத்திக்கனியான முத்தமிழில் சிறந்த இலக்கணமாம் தொல்காப்பியத்திற்கு மரபாந்துணைக்கு வேண்டுவன பகரும் நூன்மரபினையும் அதற்கு உச்சி மேல் புலவர் கொள் நச்சினார்க்கினியர் செய்த உரையையும் கற்றோர் தொல்காப்பியம் முழுதும் எளிதில் பயின்று ஞாலத்தில் நறுந்தமிழ்ப் புலவராய்த் திகழ்வர் என்பதிலும் ஐயமுண்டோ?

குறிப்பு:—மூன்றாம் ஆண்டு இலக்கணக் கட்டுரையில் முதற் பரிசு பெற்றகட்டுரை.

பிறிதை யென்றமையான், இயையாதன வரின் பல பொருளொரு சொல்லன்றி ஆகுபெயர் ஆகா எனவும், தொன்முறை என்றமையான் ஆகுபெயர் மேலாகு பெயராயும், அடையடுத்தும், இருபெயரொட்டாயும் வழக்கின் கண்ணும், செய்யுட்கண்ணும் வருவன என்றும் இதற்குப் பதசாரம் கூறுவர் விருத்தியுரைகாரர். இனி இவற்றிற்கான எடுத்துக் காட்டுக்கள் இலக்கியங்களில் வந்தவாறு காண்பாம்.

பொருளாகுபெயர்: தாமரை புரையுங் காமர் சேவடி (குறுந்தொகை) இதில் தாமரை யென்ற முதற்பொருளின் பெயர் அதன் சினையாகிய மலருக்கு ஆகி வந்தமையின் பொருளாகு பெயராம்.

இடவாகுபெயர்: அகனமர்ந்து செய்யாள் உறையும் (திருக்குறள்) இவண் அகன் என்ற இடப்பெயர் சித்தத்திற்கானமையின் இடவாகு பெயராம்.

காலவாகுபெயர்: காரறுத்தது. இங்குக் கார் எனும் பருவம்அக்காலத்தேயுள்ள பைங்கூழிற் கானமையின் காலவாகு பெயராம். காரறுத்தது என்பதனை மும்மடியாகு பெயரென்பர். எற்றுலெனின், கார் என்னும் நிறம் அதனையுடைய மேகத்திற்காகி, அப்பெயர் பருவத்திற்காகி, அப்பெயர் அக்காலப் பைங்கூழிற்காகி மும்மடியாக வந்தமையினென்க.

சினையாகு பெயர்: அறுபதமுரலும், மருக்கொழுந்து நட்டான். அறுபதம் என்னும் சினை அதனையுடைய முதலுக்காயிற்று. மருக்கொழுந்து என்பது அதன் முதலுக்காயிற்று. மரு—வாசனை. எனவே இது அடையடுத்த ஆகு பெயராமென்க.

குணவாகுபெயர்: நெறி நீரிருங்கழி நீலமுஞ்சூடாள். கார்நிகர் வண்கை. இதில் நிலம் என்ற நிறம் அதனையுடைய மலருக்கானமையின் குணவாகு பெயராம். கார் என்பது அதனையுடைய மேகத்திற்காயிற்றென்க.

தொழிலாகுபெயர்: வற்றலோடுஉண்டான். வற்றல் என்னுந் தொழிற் பெயர் அதனையுடைய பொருளுக்காயிற்று.

எண்ணல், எடுத்தல், முகத்தல், நீட்டல் என அளவையாகு பெயர் நான்காம். ஒன்று, இரண்டு,அரை,கால் என்பன எண்ணுப் பெயர்கள். இவை அஃறிணை ஒருமை, பன்மைக்கும், உறுப்புக்கட்கும் ஆகிவந்தன. துலாக்கோல்—துலா என்னும் எடுத்தலளவு அதனையுடைய நிறைகோலுக்கு ஆனது. நாழி, ஆழாக்கு என்னும் முகத்தலளவைப் பெயர்கள் அவற்றை யுடைய பொருட்காயின. கீழைத்தடி. தடி எனும் நீட்டலளவை அதனையுடைய நிலத்திற்காயிற்று. அவன் மொழியுணர்ந்தான் என்பதில் மொழியெனும் சொல் அதன் பொருளுக்கானமையின் சொல்லாகு பெயராம். விளக்கு முரிந்தது என்புழி ஒளியானது அதனையுடைய தானத்திற்கானமையின் தானியாகு பெயராம். திருவாசகம், திருவாய்மொழி — வாசகம், வாய் மொழியாய கருவிகள் அவற்ருலாய யாப்பிற்கானமையின் கருவியாகு பெயர்.

இந்நூலலங்காரம் என்புழி, அலங்காரமாய் காரியம் அதனைத் தருதற்குக் கருவியாய நூலிற்கானமையின் காரியவாகு பெயராம். இதனை இலக்கணங்களைத் தரும் தானங்களாய படலங்கட்கானமையின் தானியாகு பெயர் எனவும் கூறுவர். இந்நூல் திருவள்ளுவர் என்புழிக் கருத்தனின் பெயர் காரியத்திற்கானமையின் கருத்தாவாகு பெயராம்.

ஆதியென்று கூறியமையானே காளை வந்தான் என்றற்றொடக்கத்து உவம ஆகு பெயரும், தேவர் முதலிய பெயரை மக்கட்கிட்டு வழங்குவனவும் கொள்க.

அன்மொழித்தொகை என்ருல் என்ன? என்று காண்குவம். ''ஐந்தொகை மொழிமேற் பிறதொக லன்மொழி'' என நன்னூலார் இலக்கண்ங் கூறுவர். ஆசிரியர் தொல்காப்பியர்.

> பண்புதொக வரூஉங் கிளவியானும்
> உம்மைதொக்க பெயர் வயினும்
> வேற்றுமை தொக்க பெயர் வயினும்
> ஈற்றுநின்றியலும் அன்மொழித் தொகையே.

என அன்மொழித் தொகை ஈற்றில் நின்றியல்வது என்று கூறுவர். காட்டாகப் பொற்றொடி என்புழி பொன்னுலாய தொடி

யினை யுடையாள் எனப் பெண்ணினை அஃ தாவது உடையாளை உணர்த்தும். வெள் ளாடை (பண்புத்தொகைநிலைக்களம்)தகர ஞாழல் உம்மைத் தொகைநிலைக்களம்) முதலியவற்றை எடுத்துக் காட்டாகக் காட்டுவர் சேனாவரையர். இனி உரைமறுப்புக்கள் சிலவற்றை ஆய்குவம். அறுபதமுரலும் என்பதனையும் பொற்றொடி என்பதுபோல் அன்மொழித் தொகை யென்று லென்னையெனின், அன்மொழித் தொகை, செய்யுள் இயற்றுவோன் ஒரு வரை வியப்பு முதலியவற்றால் தன் கூற்றா யும், பிறர்கூற்றாயும் உரைப்புழி ஆங்காங்கு வருவதன்றி இதுபோல் நியதிப் பெயரன் றென்க. ஆகுபெயரும், அன்மொழித் தொகையும் தம் பொருளுணர்த்தாது, பிறிது பொருளுணர்த்தலின் தம்முள் ஒக் கும். ஆகலின் இவற்றுள் வேற்றுமை யாதோவெனின், ஆகுபெயர் ஒன்றன் பெயரான் அதனோடியைபு பற்றிய பிறிது பொருளுணர்த்தி நின்று ஒரு மொழிக் கண்ணதாம். அன்மொழித் தொகை இயைபு வேண்டாது இரண்டு மொழியுந் தொக்க தொகையாற்றலான் பிறிதுபொரு ளுணர்த்தி நின்று இருமொழிக் கண்ண தாம். இரு பெயரொட்டாகு பெயர் இரு மொழிக்கண் வந்ததன்றோஎனின், அன்று; என்னை? வகரக்கிளவி, அதுவாகு கிளவி, மக்கட் சுட்டு என்னும் இரு பெயரொட் டாகு பெயருள் வகரமும் அதுவாகலும், மக்களுமாகிய அடை மொழிகள் கிளவி, சுட்டு என்னும் இயற்பெயர்ப் பொருளை விசேடியாது, எழுத்துஞ், சொற்பொருளும், பொருளுமாகிய ஆகு பெயர்ப் பொருளை உணர்த்தக் கிளவி, சுட்டென்பனவே ஆகு பெயர்ப் பொருளை உணர்த்தி இருமொழியும் ஒட்டி நிற்குமாம். பொற் றொடி என்பதில் பொன் என்பது அன் மொழித் தொகைப் பொருளை விசேடி யாது தொடியினையே விசேடித்து, அவ்விரு மொழியுந் தொக்க தொகையாற்றலான் அன்மொழித் தொகைப் பொருளை உணர்த்துகிறது. இக் கருத்துப்பற்றியே மக்கட் சுட்டு முதலியன பின்மொழியாகு பெயராம். துலாக்கோல் என்பது இருபெய ரொட்டு முன்மொழியாகு பெயராம். இவற் றில் ஆகுபெயர்ப் பொருளை யுணர்த்துஞ் சொற்கள் முறையே பின்னும், முன்னும் இருத்தலான் இப்பெயர் பெற்றனவா மென்க. துலாவாயகோல், மக்களாகிய சுட்டு என்பவாகலின் இரு பெயரொட் டாம்

இனி, இப்பட்டுச்சீனம், இந்நெலவல் இம்மனையைங்கோல், இவ்வாடை கோலி கன் என்பவற்றுள், சீனம், அவல், ஐங் கோல், கோலிகன் முதலியவற்றை ஆகு பெயரெனவும், எழுத்து சொல், பொருள், யாப்பு, அலங்காரம் முதலியவற்றைக் காரியவாகு பெயர் என வழங்காது சொல் லாகு பெயரெனவும் அகத்தியந் தொல் காப்பியம் முதலியவற்றை ஆகுபெயர்த் திரிபு எனவும் மொழிவர்.

இப்பட்டுச் சீனமென்பதனை இசை யெச்சமாக்கி இப்பட்டுச் சீனத்துள்ளதென் பார்; இப்பட்டு என்னும் எழுவாய்க்கு உள்ளதென்பது பயனிலையன்றிச் சீன மென்பது பயனிலையன் றாகலானும், சுட்டிக் கூறாது சீனமெனவாளாகூறின், அது பல பொருளொரு சொற்போல இடத்தினையும், பட்டினையும் உணர்த்தாமையானும், இத் தொடக்கத்தனவாய இசை யெச்சங்களை ஆகுபெயரென்பார்க்கு,

> "திருவளர் தாமரை சீர்வளர் காவிக
> ளீசர் தில்லைக், குருவளர் பூங்குமிழ்'

என்றற் றொடக்கத்தனவாய (திருக் கோவையார்) உருவகங்களை ஆகுபெய ரெனல் வேண்டும் ஆதலானும்; இவை ஆகுபெயர் இலக்கணத்தான் அமைந்தன வல்ல ஆகலானும், சொல்லாகு பெயர்க்குக் காட்டியவற்றுள் சொல்லினது பெயர் அவற்றிற் கானதின்மையின் அவை சொல் லாகு பெயராகாதெனவும், வெளிப்படை, குறிப்பெனும் இரண்டனுள் ஆகு பெயர் குறிப்புச் சொல் ஆதலானும், கருத்தனோ, காரியமோ என ஐயுற வேண்டாது அகத் தியம் முதலியன காரியமாகிய நூல்களை வெளிப்படையான் உணர்த்தலானும் இவை கருத்தாவைக் கூறாமையானும், விகு திச் சூத்திரத்துப் பிற என்பதனான் வரும் விகுதியோடு பகுதிபுணர்ந்து, இந்திரனால் செய்யப்பட்ட நூலுக்கு ஐந்திரம் எங் வழங்கும் ஆரியச் சொற்போல் வழங்குன தன்றி ஆகுபெயர்த் திரிபன்றென்க. இங்

# ஆகுபெயரும் அன்மொழித்தொகையும்

[சூ. வர்மனன், நான்காம் யாண்டு]

தொல்காப்பியர் வேற்றுமையிலக்கண முணர்த்தி அவை மயங்குமிலக்கணத்தை உணர்த்திக்கொண்டு வருங்காலை ஆகு பெயரிலக்கணம் இயற்கைப் பெயர் ஆகு பெயர் என்று பெயரிலக்கணம் இரண்டா யடங்கும்வழிப் பெயரிலக்கண மாதலொப் புமையானும் வேற்றுமை மயக்கம்போல் ஒன்றன்பொருட்கண் ஒன்று சேறலென் னும் ஒப்புமையானும் அம்மயக்கம் உருபு மயக்கம் பொருண்மயக்கம் என இருபகு திப்பட்டதுபோல இதுவும் ''தத்தம் பொருள்வயின் தம்மொடு சிவணலும் ஒப் பில்வழியாற் பிறிதுபொருள் சுட்டலும்' என்னும் இருபகுதிப்பட்டமையானும் அவ் வேற்றுமை மயக்கத்திற்குப்பின் ஆகு பெயர் இலக்கணத்தைக் கூறினர். இதனிலக்கணம்:

முதலிற் கூறும் சினையறி கிளவியும், சினையிற் கூறும் முதலறிகிளவியும் பிறந்த வழிக்கூறலும் பண்புகொள் பெயரும் இயன்றது மொழிதலும், இருபெயரொட் டும் வினைமுத லுரைக்குங் கிளவியொடு தொகைஇ, அனையமரபினவே ஆகு பெயர்க் கிளவி, என்பது முதற்சொல் வாய்

ஙனம் பிறர்கூறும் உரைகட்கு மறுப்புக்கள் வழங்கப்படுகின்றன. மற்றும் திருவாசகம், திருவாய் மொழி முதலியன உண்மையா னேக்குவார்க்கு அன்மொழித் தொகை யாவன வன்றி ஆகு பெயராகாமையு முணர்க என்பர்.

அஃதாவது ஆகுபெயராய்க் கூறுவோ மாகில் திருவாசகம் என்பதில் திரு என் னும் அடைவாசகத்தை விசேடியாது நூலை விசேடிக்குமாம். அப்படியாயின் மணிவாசகம் என்பதனேடு மாறுபடு மன்றோ? பழுதிலாத சொல் மணியினைப் பத்தி செய்து என்று புலவர் கூறும் மொழி பொய்க்கு மன்றோ? வாசகத்தை விசேடித் ததாகக் கூறுவதே பொருந்தும். எனவே திருவாசகம் அன்மொழித் தொகையாம், உண்மையானேக்குவார்க்கு என்பர்.

இனி, தத்தம் பொருளை நீங்காது நின்று, தம் பொருளின் வேறல்லாத பொருளோடு புணர்தலும், பொருத்தமில் லாத கூற்றுனின்று பிறிதுபொருளுணர்த் தலுமெனவிடாத ஆகுபெயர், விட்டஆகு பெயரென மொழிவர். கடுத்தின்றான் என் புழிக்கடுஎனும் கைப்புப் பண்பு அதனை யுடைய பழத்திற்கானது. பழத்திற்கான போதும் பண்பு விடாதிருப்பதால் விடாத ஆகுபெயராம். குழிப்பாடி நேரிது என் புழிக் குழிப்பாடி எனும் ஊரில் நெய்யும் ஆடைக்கு ஊர்ப்பெயர் ஆகிவந்தது. ஊருக் கும், ஆடைக்கும் தொடர்பின்மையின் விட்ட ஆகுபெயராம். இவ்வாறு பல்லாற்று னும் இலக்கணம் கூறப்படுகிறது. தொல் காப்பியர் அன்மொழித் தொகைபற்றிக் கூறியவிடத்து வேற்றுமைத் தொகையை விட உம்மைத்தொகை சிறுபான்மையாயி னும் உம்மைத் தொகையை முற்கூறுவர். இதற்குக் காரணம், பவளவாய், திரிதாடி முதலிய உவமம், வினைத்தொகை இவற் றின் நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித் தொகையையும் கூறுதற் பொருட்டே எனச்சேனவரையர் மொழிவர்.

இங்ஙனம் நுண்மாண் நுழைபுலங் கொண்டு உண்மையா னேக்குவார்க்கு இலக்கணமென்பது தெவிட்டாத அமு தாம். இவ்விலக்கணங்கள் வழக்காக நம் உலகில் இயங்குகின்றன. காட்டாக, டேட! கழுதை! இங்கே வா! என்று அழைக்கி றேம். அவ்விடத்துக் கழுதை என்பது ஆகு பெயரன்றோ? இவ்வாறு இலக்கண மென்பது நம்மோடு உறைந்து நின்ற ஒன்றேயாம்.

வெல்க தமிழ்!

குறிப்பு: இரண்டாம் ஆண்டு இலக்கணக் கட்டுரைப் போட்டியில் முதற் பரிசு பெற்ற கட்டுரை.

பாட்டாற் கூறப்படும் சினையறி கிளவி— கடுத்தின்ருன் தெங்குதின்ருன் என்பன.

சினைச்சொல் வாய்பாட்டாற் கூறப் படும் முதலறிகிளவி—இலைநட்டு வாழும் பூநட்டுவாழும் என்பன.

நிலத்துப் பிறந்த பொருண்மேல் நிலைப்பெயர் கூறுதல். குழிப்பாடி நேரிது என்பது.

பண்புப்பெயர் பண்புடையதனை உணர்த்திப் பண்புகொள் பெயராய் நின் றது. இம்மணி நீலம்.

முதற்காரணப் பெயரான் அக்கார ணத்தான் இயன்ற காரியப்பெயர் கூறல்- இக்குடம் பொன்.

அன்மொழிப் பொருண்மேல்வரும் இருபெயரொட்டு—பொற்ருெடி வந்தாள்.

செய்யப்பட்ட பொருண்மேல் செய் தான் பெயர் கூறல்—இவ்வாடை கோலி கன்.

இவ்வகைகளோடு சிலவற்றைக் கூட்டியும் அனைய மரபினஎன இலக்கணங் கூருது அப்பெற்றிப்பட்ட இலக்கணத்தை யுடையது என விடப்பட்டதை விரித்தும்;

"பொருள்முத லாருே டளவைசொல் தானி
கருவி காரியம் கருத்தன் ஆதியுள்
ஒன்றன் பெயரான் அதற்கியை பிறிதைத்
தொன்முறை உரைப்பன ஆகுபெயரே"

என்று கூறுவர் நன்னூலார்.

சிவஞான முனிவர் இம்மணி நீலம், இப்பொன் குடம், இவ்வாடை கோலிகன் என்பனவற்றை இசை யெச்சமெனக் கூறி மறுப்பர்.

சேனுவரையர் இருபெய ரொட்டாகு பெயரை அன்மொழித் தொகையாகக் கொண்டு அது எச்சவியலில் கூறப்பட் டிருக்க ஈண்டுக் கூறியதென் என்ற வினவை எழுப்பித் தொகையாராய்ச்சி பற்றி எச்சவியலில் கூறப்பட்டதாயினும் இயற்கைப் பெயர் ஆகுபெயரென்று இரண்டாயடங்கும் வழிப் பெயர்ப்பாற்பட்ட தாகலின் ஈண்டுக் கூறப்பெற்றதென்பர்.

இவ்வாறு ஒரு பொருளை விளக்கும் பெயராகவும் தொகைநிலைத் தொடராதல் பற்றி அன்மொழியாகவும் நிற்றலின் இரு பெயரொட்டாகு பெயரில் அன்மொழித் தொகை அடங்கும் என்பதே கருத்தா யிருக்க இளம்பூரணர், நச்சினர்க்கினியர், பரிமேலழகர், அடியார்க்கு நல்லார் போன் ருேர் இரண்டும் ஒன்று என உரை கூறி யுள்ளனர். புறநானூற்றுரையாசிரியர் கொடுவரி என்பதனையும் அடியார்க்கு நல் லார் அருந்திறல் என்பதனையும் அன் மொழியாகு பெயராகக் கூறியுள்ளனர். பரி மேலழகர் கனங்குழை என்பது அன் மொழித்தொகை வெளிப்படையாகவும் ஆகுபெயரென்றும், தொடலைக் குறுந் தொடி என்பதனை அப்பெயர் என்று சுட்டி ஆகுபெயரென்பதை உடன்பட்டு அன் மொழித்தொகை என்றும் கூறியுள்ளனர்.

இரண்டும் ஒன்ருயின் ஆகுபெயருள் அன்மொழித் தொகை அடங்குமாயினும் அன்மொழித் தொகையுள் ஆகுபெயரெல் லாம் அடங்காமையின் சேனுவரையர் கருத்துப்படி இருபெயரொட்டாகு பெயரே அன்மொழித் தொகை என்பதே சரியா னது. சிவஞான முனிவர் இரண்டிற்கும் உள்ள வேறுபாட்டினை இக்குழப்பம் வாரா மைக் கூறுவர். அது இரண்டின் இலக்கண மும் உரைத்தபின் உரைக்கப்பெறும்.

இளம்பூரணர் தொல்காப்பியனுலும் கபிலனுலும் செய்யப்பட்ட நூலைத் தொல் காப்பியம் கபிலம் என்றல்வினை முதலுரைக் கும் கிளவி என்பர். இதனைச் சேனுவரையர் ஆகுபெயரிலக்கணம் ஒரு பெயரிலக்கண மன்றென்றும் ஒரு பெயரிலக்கணம் வெற்பு + அன், சேர்ப்பு + அன் என முடிந் தாற்போலத் தொல்காப்பியன் + அம் கபி லன் + அம் என அன்கெட்டு அம்புணர்ந்து இவனுற் செய்யப்பட்டது என முடியும் என்றும் கூறியும் சிவஞானமுனிவர் தொல் காப்பியம் கபிலம் என்பன கருத்தாவோ காரியமே என்றையுருமல் காரியமென வெளிப்படையாக நிற்றலானும் ஆகு பெயர் குறிப்புச் சொல்லாகலானும் ஆகு

பெயர்த் திரிபாகா எனக் கூறி மறுத்தார்.

இவ்வாகு பெயருள் தத்தம் பொருளின் நீங்காது தம் பொருளின் வேறல்லாத பொருளொடு புணர்தலும் தம் பொருட்கியைபில்லாத பொருளைச் சுட்டி நிற்றலும் என்னும் இரண்டு வேறுபாடு போற்றி யுணரப்படும். இவற்றைப் பின்னோர் விட்டவாகுபெயர் விடாதவாகுபெயர் எனக் கூறுப. கடுத்தின்ருன் என்பதில் கடு அதனோடொற்றுமையுடைய (அப்பண்பை யுடைய) காயை உணர்த்தலின் அது முன்னதற்கு தாரணம். குழிப்பாடி நேரிது என்பதில் குழிப்பாடி இயைபில்லாத இடத்து நிகழ்பொருளை உணர்த்தலின் பின்னதற்குதாரணம். இவ்விடமும் இடத்துநிகழ் பொருளும் இயைபுடையவெனினும் அது போலப் பண்பும் பண்பியுமாய ஒற்றுமையாகிய இயைபு இன்மையின் இரண்டும் வேறுவேரும். என இவ்வேறுபாடுபோற்றி யுணரப்படும் என்ருர். மேலும் எழுத்தோத்தினுள் இவ்வாறு வருமிடமும் பிரியாதே உரைக்கப் பெறுகிறது.

அளவுப் பெயரும் நிறைப்பெயரும் அளக்கப்படும் பொருண்மேலும் மறுக்கப்படும் பொருண் மேலும் இந்நெற்பதக்கு எனவும் இப்பொன்ருெடி எனவும் வருவனவும் ஆகு பெயர்க்கிளவியே. எண்ணுப் பெயர் எண்ணப்படும் பொருட்கு முண்மையான் ஆகுபெய ரெனப்படாது

இவ்வாறுகூறி "கிளந்தவல்ல" என்ற புறனடை நூற்பாவால் குழலினிது யாழினிது என்றவிடத்து வருஉம் கருவியாகு பெயரையும் யானைவந்தான் என்ற வழி வருஉம் உவமையாகு பெயரையும் இஃதோர்ஏறு எனத் தொழிலாகு பெயரையும் தழுவி முடிக்கிருர் இவ்விலக்கணத்தைத் தொல்காப்பியர் என்பது.

அன்மொழித் தொகை

தொல்காப்பியர் எச்சவியலில்தொகையாராய்ச்சி செய்வுழி இறுதியில் அன்மொழித் தொகையைக் கூறுகிருர். பண்புச் சொற்ருெக்க சொற்கண்ணும் உம்மை தொக்க பெயர்க்கண்ணும் வேற்றுமை தொக்க பெயர்க்கண்ணும் இறுதிச் சொற்கண் நடக்கும் அன்மொழித் தொகை என்பது இலக்கணம்.

பண்புத் தொகையும் உம்மைத் தொகையும் வேற்றுமைத் தொகையும் தொக்கவழி அன்மொழித்தொகை தொகாமையின் தொகுவதன்முன் இருந்த நிலைக்களத்துச் சொற்கண் அன்மொழி தொகுமென்பது விளக்கிய தொகைவயினனும் எனப் பொதுவாகக் கூருது தொகவருஉம் கிளவியானும், தொக்சக பெயர்வயினனும், தொக்கபெயர் வயினனும் என்ருர். இவற்றிற்கு வெள்ளாடை, அகரவீறு, தகரஞாழல், பொற்ருெடி என்பன காட்டுக்கள். அவை வெள்ளாடை யுடுத்தாள் என்பது போல விரியும்.

நன்னுலார் தொகை கூறுமிடத்து உருபுகள் தொகுவதும் ஒட்டி நிற்றலும் தொகை எனக் கூறலின் அன்மொழி கூறுமிடத்தும் "ஐந்தொகை மொழிமேற் பிற தொகல் அன்மொழி" எனக் கூறினர். ஐந்து தொகையும் தொக்கபின் அவற்றின் புறத்து அல்லாத மொழி தொக்கு வருவது அன்மொழித் தொகை என்பது அவர் கருத்து. அன்மொழி என்பதற்குப் பொருள் விரிக்கும்போது சேனவரையர் "தொக்க சொல்லல்லாதமொழி' என விரித்தும், ஈண்டு அன்மொழித் தொகையாவது இவைகளின் நிலைக்களத்து அன்மொழிப் பொருள் இறுதிச் சொற்கண் அன்மொழிக் கண்ணே நிலையல் எனக் கூறியும் தொல்காப்பியர் கருத்து அவ்வப் பொருள் பட சொற்கள் ஒட்டி நிற்றலே என விளக்கினர். இவ்வாறு அன்மொழித் தொகைக்கு இலக்கணங் கூறலே சரியாம். ஏனெனில் புறத்துத்தொகுவது அன்மொழியாகாது. நிலைக்களத்துத் தொகுதலே அன்மொழியாம் எனமேலும் கூறினமையின் என்பது. மேலும் தொல்காப்பியர் ஈற்று நின்றியலும் அன்மொழித் தொகை எனக்கூறி அது 'அம்மொழி நிலையாது' அன்மொழி நிலையிலும்' என அன்மொழியில் பொருள் சிறக்குமெனவுங் கூற நன்னூலார் ஐந்தொகை மொழிமேல் பிறதொகல் அன்மொழி எனக் கூறி "முன்மொழி பின் மொழி பன்மொழி புறமொழி" எனப் புற

மொழியில் அன்மொழித் தொகைப் பொருள் சிறக்குமெனவும் கூறினமையா னும் இது விளங்கும். நன்னூலார் உருபு வாரா தொழிதலும், ஒரு மொழிபோல் நடத்தலும் என்னும் இரண்டிலக்கணமும் விரவித்தொகை கூறித் தொல்காப்பியர் போல் ஒட்டி நிற்றலே தொகை எனத் திருத்தமாகக் கூறியமையாமையே இவ் வேறுபாட்டிற்குக் காரணம்.

பண்புச்சொல் தொக்க நிலைக்களத்து வருதல் பெரும்பான்மையாகலின் முன் வைத்தார். வேற்றுமை தொக்க பெயர் வருதலின் உம்மை தொக்க பெயர்வயின் வரல் பெரும்பான்மையாயினும் பவளவாய் திரிதாடி என்னும் உவமைத் தொகை நிலைக்களத்தும் வினைத்தொகை நிலைக் களத்தும் வருதலைத் தழுவுவதற்கு மாறி வைத்தார் என்பது. இவ்வாறிருக்கச் சிவ ஞானமுனிவர் ஐந்தொகைப் புறத்து வருவதற்குத் "திகழ்செவ்வான் மதித் திரு முகப் பூங்குழல்" என்பதைக் காட்டுவர்.

வேற்றுமை

இவ்விரண்டும் தம் பொருள் உணர்த் தாது பிறிதொரு பொருள் உணர்த்துதற் கண் ஒற்றுமை யுடையவெனினும் சில வேறுபாடுகள் உள.

நியதிப் பெயராய் ஆகுபெயர் வர அன்மொழி, கவி தன் கூற்றாகவும் பிறர் கூற்றாகவும் புனைந்துரைக்கும் வழி நியதி யின்றி வரும்.

ஒரு சொல்லான் அதற்கியையுடைய பிறிதை உணர்த்தி ஒரு மொழிக்கண்ணது ஆகுபெயர். இயைபு வேண்டாது இரு மொழியும் தொக்க தொகையாற்றலாற் பிறிதுபொருள் உணர்த்துவது அன் மொழித் தொகை.

வகரக்கிளவி முதலிய இருபெயரொட் டாகு பெயர் இருமொழியாகாது வகரம் கிளவியோடு பொருந்தாது ஆகுபெயர்ப் பொருளாகிய சொல் என்பதோடு பொருந்தி கிளவி என்பது சொல்லை உணர்த்த ஒரு சொல்லாய் நிற்றலின், என்பர் சிவஞான முனிவர்.

வகரம் ஆகுபெயர்ப் பொருளாகிய சொல்லை விசேடித்தலும் பொற்றொடி என் பதில் பொன் தொடியை விசேடித்தலும் தம்முள் வேற்றுமை. வகரக்கிளவி போன்றவற்றை இதுபற்றிப் பின்மொழி ஆகுபெயர் எனவும் கூறுவர். இவை சிவஞான முனிவர் தெளிவுகோடற்கு உரைத்தவையாம்.

வேறு

நன்னூலுரையுள் கார்அறுத்தது என் பன போன்ற மும்மடியாகு பெயர்களும் தழுவப் பெறுகின்றன.

இங்ஙனம் தொல்காப்பியத்திலும் நன்னூலிலும் ஆகுபெயர் இலக்கணமும் அன் மொழித் தொகை இலக்கணமும் கூறப்பட்டுள்ளன.

---

குறிப்பு: நான்காம் ஆண்டு இலக்கணக் கட்டுரைப் போட்டியில் முதற்பரிசு பெற்ற கட்டுரை.

